# மறை ஞான சித்தியார்



ஆக்கியோன் :
D. A. T. தளவாய்.

# மறை ஞான சித்தியார்

என்னும்

# பிறவா நெறி விளக்கம்.



ஆக்கியோன் :

**D. A. T. தளவாய்.**

திருநெல்வேலி, ஹிலால் பிரஸில்

அச்சிட்டது

**1955**

 [ விலை ரூ. 3

# மறை ஞான சித்தியார்

என்னும்

# பிறவா நெறி விளக்கம்



## கடவுள் வாழ்த்து

எங்கும் நிறைபொருளாய் என்றும் நிலைத்துளதாய்ப்
பொங்கி வடிகருணைப் பூரணமே — மங்கா
மறைஞான சித்தியார் வையத் துரைக்க
நிறைஞானம் தந்தருள்செய் நின்று

## குரு வணக்கம்

கல்வி நறுந்தேனைக் காதலா யூட்டிய
செல்வப் புனிதகுரு தேவனே — சொல்மறை
ஞானசித்தி யார்நூலை நான்புகல யென்னுளத்தே
ஞானமாய் நின்றருள்செய் நன்கு.

# முகவுரை

எனது நண்பவர் ஒருவர் சொல் நயம் பொருள் நயத்துடன் ஆசு கவி பாடும் திறமுடையவர். அவரிடம் இத் திறமையொன்று தவிர வேறெதுவும் கிடையா. சாதாரணமாக அவர் பேசிக்கொண்டிருக்கும்போது, அவரை இவ்வளவு சிறந்த கவிபாடும் புலவர் என்று ஒருவரும் அறிந்துகொள்ள முடியாது. மேலும் அவருடைய குணம் பலருக்கும் பிடிக்காமல் அவரை எல்லோரும் புறக்கணித்து வந்தார்கள். எனக்கும் கூடச் சில சமயங்களில் அவர்மீது வெறுப்பு ஏற்பட்ட போதிலும், அவரது கவி நயத்தால், அதைக் காட்டாது, அவருடன் அன்பு குறையாமல்ப் பழகி வருகிறேன்.

நான், சில வேளைகளில், இந்த எனது நண்பருக்கு, வேறு எவ்விதத் திறமையுமில்லாம லிருக்கும்போது, இக் கவி பாடும் திறமை மட்டும் எவ்விதம் கிடைத்தது என்பதைப் பற்றி சிந்திக்க லானேன். ஆனல். அவருக்குண்டாகிய இத் திறன் பூர்வ ஜென்ம வாசனை தான் என்று மட்டும் நிச்சயித்துக் கொண்டேன்.

இவ்விதமிருக்கும்போது, ஆங்கிலத்தில், வைத்திய விஷயமாக ஓர் புத்தகம் படித்து வரும்போது, அதில் அந்த நூல்ாசிரியர், தான் சொல்லி வரும்

விஷயத்திற்கு மேற் கோளாக பின் வருவதை யெழுதியுள்ளார்.

> "உலகத்தில் மக்கள் ஏதேனும் ஓர் காரியத்தில்த் தங்கள் ஆசையை மிகவும் செலுத்தி, அது நிறை வேறு முன் இறந்து போனார்களானல், அவர்கள் தங்கள் ஆசையை நிறைவேற்ற, உலகில் மக்கள் எவருடைய உடலி லாவது, தங்கள் ஆசையைப் புகுத்தித், தங்களது எண்ணங்களை நிறைவேற்றிக் கொள்வார்கள்"

மேலே கண்டதைப் படித்ததும், எனது புலவர் நண்பருக்குக் கவித்திறன் எவ்விதம் உண்டாயிற்று என்பது எனக்கு நன்கு விளங்கிற்று. யாரோ ஓர் புலவர், கவிகள் மிகவும் பாடவேண்டும் என நினைத் தவர், அந்த ஆசை நிறை் வேறுமுன் காலம் சென்று விட்டதால்; அவ்வாசையை நிறைவேற்ற எனது நண்பரைப் பிடித்துக்கொண்டார் என்பதே.

இச் சிறிய விஷயத்திலிருந்துதான், எனக்கு மறை ஞானம் கற்க வேண்டிய துடர்ச்சி துவங்கியது. அந்த ஆங்கில நூலாசிரியர்; தான், ஓர் மறை ஞானி என்றும், அதனல்த்தான் இவ்விதமான விஷயங்கள் எல்லாம் தனக்குத் தோன்றி அதை உலகிற்குப் பயன்படும்படி வெளியிட்டதாகவும், அந் நூலில் எழுதியிருந்தார். அத்துடன் மறை ஞான விஷயமாகத்; தான், ஓர் நூல் எழுதியிருப்பதாகவும் அறிவித்திருந்தார். உடனே

அவர் எழுதிய புத்தகத்திற்கு, பல பல புத்தக வியாபாரி களிடம், ஓர் பிரிதி வேண்டும் என்று நான் கேட்டு எழுதியதற்கு, நான் கேட்கும் புத்தகம் தங்களிட மில்லையென்று எல்லோரும் அறிவித்து விட்டார்கள். அதனுல் மிகுந்த வேதனையுற்று என்ன செய்வது என்று சில நாள் யோசித்துக் கொண்டிருந்தேன். அச் சமயம் திடீரென்று முன் எழுதிய புத்தக வியாபாரி ஒருவருக்கு மீண்டும் எழுத வேண்டும் என ஓர் எண்ணம் எனக்கு உண்டாயிற்று. — இது ஒருக்கால் எனது உள்ளுணர்வா யிருக்கலாம் (intution.) — ஆனுல், உள்ளுணர்வுதான் என்று திட்டமாய்ச் சொல்ல முடியாது. — எனவே அப் புத்தக கடைக் காரருக்கு, இப் புத்தகத்தின் பெயரைக் குறிப்பிடாமல், அவரிடமுள்ள மறை ஞான நூல்களின் பட்டியல் ஒன்று அனுப்பும்படி வேண்டினேன். அவர் பதில் வந்தது. அதில் நான் எதிர்பாராதவண்ணம், நான் எனது மனதில் எப் புத்தகம் வாங்கவேண்டுமென எண்ணினேனோ அப்புத்தகம் கிடைக்கும் என்றும், அதன் விலையையும் குறிப்பிட்டிருந்தது. அதைப் பார்த்ததும் என் மகிழ்ச்சிக்கு அளவில்லை. உடன் மறு தபாலில் அப் புத்தகத்தை அனுப்பும்படி எழுதினேன். அப்புத்தகமும் வந்தது எனது கண்களும் திறக்கப் பட்டன. இது நிற்க.

இதற்குப் பின் ஓர் நாள், வேறு ஓர் நண்பரோடு பேசிக்கொண்டிருக்கும் போது, மறை ஞானத்தைப் பற்றிய புத்தகங்கள் ஏதாவது அவரிடமிருந்தால்,

அதை எனக்குக் கொடுத்து வாங்க வேண்டுமென்று கோரினேன், அந்த நண்பர் அது சம்பந்தமாய் மூன்று நூல்கள் கொடுத்துதவினர். அதையும் வாசித்தேன். இவைகள்தான் நான் மறை ஞான ஆராய்ச்சியிலீடுபடுவதற்கு முதற் காரணங்கள். பின் மேலே சொல்லிய ஆங்கில நூலாசிரியர் தனது புத்தகத்தின் கடோசியில், மறைஞான சம்பந்தமாய் தான் வாசித்த நூல்களின் பட்டியல் ஒன்று சேர்த் திருந்தார். அவைகளெல்லாம் சாதாரணமாய்க் கிடைக்கக் கூடியவைகளாதலால், அவற்றில் பல வற்றை வாங்கிவாசித்து, எனது மறை ஞான அறிவைச் சிறிது பெருக்கிக்கொண்டேன்.

இவ்விதம் பல புத்தகங்கள் வாசித்ததில், இரண்டு விஷயங்கள் எனக்குப் புலப்பட்டன. மறை ஞானம் பயிலப் பூர்வ ஜென்ம வாசனை சிறிதாவது இருக்க வேண்டும் என்பது ஒன்று.* மற்றொன்று அக்கரை யுடன் மறைஞானம் பயிலத்துடங்கினல், அது விஷய மாகக் கண்காணு உதவிகள் வேண்டுமளவிற்குக் கிடைக்கும் என்பது. கண்காணு உதவிமூலம்தான் எனக்கு மறை ஞான சம்பந்தமாயுள்ள புத்தகங்கள் கிட்டின. அதற்காக அவ் வுதவியாளர்களுக்கு நான் நன்றிசெலுத்தி வணங்குகிறேன். மறை ஞான சம்பந்தமாய் எனக்கு பூர்வ ஜென்ம வாசனை உண் டென்பதும், இல்லையென்பதும் என்னல்ச் சொல்ல முடியாது.

---

* நூதன விவேகிக்கு நுழையாதுள்ளம் — கைவல்யம்

ஆனால், இச் ஜென்மத்தில், எனது சிறு பருவம் முதலே, வேதாந்த விசாரணை செய்பவர்களிடம், எனக்கு நெருங்கிய துடர்பு உண்டு.

எனது பெரிய தந்தையவர்கள் ஓர் வேதாந்தி. அவர்கள் "மெய்த் திருவந்துற்ருலும் வெந்துயர் வந்துற்ருலும் ஒத்திருக்கும் உள்ளத் துறவி". ஆன்மாவும் உடலும் ஒன்ருய்க் கண்டவர்கள். "சோதனைகளையும், கடுந்துயர்களையும், தெய்வீக அமைதியுடன் தாங்கிக்கொண்டிருப்பதுதான், பக்குவமடைந்த பெரியோர்களிடம் நாம் கண்கூடாகக் காணுந் தன்மை" என நூல்களில்க் கூறப்படித்திருக்கிறேன். அதை அவர்களிடம் நேரில்க் கண்டிருக்கிறேன். அவர்கள் எனது பெரிய தந்தை என்பதற்காகப் புகழ்ந்து எழுதவில்லை. உண்மையை எழுதுகிறேன். அவர்களைத் தெரிந்தவர்கள் யாரிடம் கேட்டாலும், இதைவிட அதிகமாகத்தான் புகழ்ந்து பேசுவார்கள். அவர்கள்தான் என்னை நான் பிறந்த முப்பதாவது நாளிலிருந்து, அவர்கள் ஆயுள் காலமட்டும் (எனது 15-வது வயதுவரை) வளர்த்தது. அவர்கள் தனது நண்பர் ஒருவரைக்கொண்டுதான், எனக்குத் தமிழ்க்கற்பிக்கும்படி செய்தார்கள். மேலும், எங்கள் வீட்டிற்குப் பக்கத்தில், வேதாந்த விசாரணை செய்பவர்கள் கூடும் சங்கம் ஒன்றிருந்தது. அங்கே சதா காலமும் வேதாந்த பாடங்கள் நடந்துகொண்டேயிருக்கும். எனக்குத் தமிழ்க் கற்பித்த ஆசிரியர்தான் * அங்கு கூடியிருப்பவர்களுக்கு, வேதாந்த பாடம்

---

* பேட்டை, ஙெ. வேலாயுதம் பிள்ளை அவர்கள்

கற்பித்து வந்தார்கள். அதை நான் நாள்த் தவருமல் பள்ளி நேரம் தவிர, மற்ற நேரங்களில் உடனிருந்து கேட்டு வருவேன். "உலகம் நிலையற்றது", "நமது உடல் நாமல்ல" என்பன போன்றவைகள் எனக்கு அப்பருவத்திலேயே விளங்கும்படியாயிற்று. அதனுல், எனது வாழ்க்கையின் போக்கே மற்றவர்களைவிட வேறுபட்டுக் காணலாயிற்று. அப்படியிருந்தும், எனது கர்ம வினையினுல் எனது மனதிற்கேற்ற வாழ்வைப் பின்பற்ற முடியவில்லை. அத்துடன் இச் ஜென்மத்திலும் சில கர்மங்களைச் சம்பாதித்துக் கொண்டேன். அவைகளினுல் நான் அடைந்த இன்னல்கள், மறை ஞான ஆராய்ச்சி செய்தபின்தான், தெளிவுற்றது.

கர்மம் என்பது, வாங்கின கடன் போன்றது. அதைக் கொடுக்காத வரை, (தீர்க்காத வரை) அது நம்மைவிட்டு நீங்காது என்பதே, மறை ஞான ஆராய்ச்சியில் நான் முதல் முதல்க் கற்றபாடம். இந்த ஓர் பாடத்தை நாம் தெரிந்து அதற்கேற்றபடி நடந்தால், நம் வாழ்வில் அநேகம் இடர்கள் நீங்கி விடும். மனத்துயரம் அறவே யிருக்காது. நமக்கு ஏற்படுகிற துன்பங்களையும், ஏமாற்றங்களையும், குறை கூருமல், மறந்து நிற்பதே கர்மக் கடனை நன்ருய் நிவிர்த்தி செய்யும் வழி.

இனி இந்த நூலின் தத்துவமாவது. முதலாவது, அண்டங்களனைத்திலுமுள்ள உயிர்களும், உயிரற்றவைகளும், இறைவனிடத்திருந்து வெளிப்பட்டனவேயாகும். எவ்விதம் கடலிடத்துத் தோன்றிய

அலைகள் கடலிடத்தே கலந்துவிடுமோ அதேபோல், இறைவனிடத்தே தோன்றியவைகள் எல்லாம், இறைவனிடத்தே யடையும்.

அவ்விதம் இறைவனையடைவதற்கு, ஆன்மாக்கள் பக்குவமாக நெடுநாள்ப் பிடிக்கும். யுகக் கணக்கான வருடங்களாக, கோடிக்கணக்கான பிறவியெடுக்க வேண்டிவரும். ஆனால், எவ்விதக் கீழ் நிலையிலுள்ள ஆன்மாக்களும், கடையில் இறைவனிடம் கலப்பது திண்ணம். இதில்த்தான், மதபோதனைகளுக்கும், மறை ஞானத்திற்கும் வித்தியாசமிருக்கிறது. மத போதனையின்படி, ஒருவன் குற்றம் செய்தால், அவன் இறந்தபின் அவனைக் கடவுள் சந்நிதியில் நிறுத்தி, விசாரிக்கப்பட்டு, குற்றங்களுக்குத் தகுந்தவாறு நரக தண்டனை யேற்படுமென்று சொல்லப்பட்டு வருகிறது. சில ஆன்மாக்கள் மீளா நரகத்திலே என்றென்றும் அழுந்திக் கிடப்பார்களென்றும், அவர்களுக்கு மீட்சி யில்லை யென்றும் சொல்லப்படுகிறது. கடவுளைக் கொடுந் தண்டனை கொடுப்பவராக மக்கள் எண்ணும்படி போதித்து வருகிறது. இது முற்றிலும் தவறு.

மறை ஞானம், ஆன்மாவிற்கு ஏற்படும் தண்டனைகளெல்லாம், ஆன்மா தனக்குத்தானே வகுத்துக்கொண்டதல்லாமல் அன்புருவாகிய கடவுள்* எந்த ஆன்மாவிற்கும் தண்டனை கொடுக்கமாட்டார் என்பதைப் போதிக்கிறது.

---

* வைதாரையும அங்கு வாழவைப்போன் — கந்தரலங்காரம்
அடியாரிழைத்த பிழைகோடி நெஞ்சிலறியாத ஆதிமுதல்வன்
— கருவையந்தாதி,

இரண்டாவதாக, விஞ்ஞானிகள், நுண்ணிய யந்திரங்களையும், ரசாயனப் பொருள்களையும் (chemicals) கொண்டுதான், தங்கள் நூதனங்களைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். அவர்களின் நுண்ணிய கருவிகளுக்கும் (Microscopes) மேற்பட்ட நுண்ணிய கருவிகள், நமது உடலிலேயே அமைந்திருக்கிற தென்றும், அதை உபயோகப்படுத்தும் வழியறிந்து உபயோகப்படுத்தினால், இக்காலத்து விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருப்பவைகளுக்கு மேலானதும், இந்த விஞ்ஞானிகளால்க் கண்டுபிடிக்க முடியாதவைகளையும் கண்டுபிடிக்கலாம் என்றும் மறைஞானம் விளக்கு கிறது. அவ்விதம் கண்டுபிடிக்கக்கூடிய திறன் (சக்தி) மனிதனுக்கு ஏற்படுமானால், அது அவனது பிறவி முன் னேற்றத்திற்கு உறுதுணையாகவுமிருக்கும் என்பதை யும் மறை ஞானம் போதிக்கிறது. இத்திறன் மனிதன் அடையக்கூடியதுதான் என்றும், அதையடைந்தவர் கள் பலர், இப்போதும் ஸ்தூல உடலில் இருக்கிறார் களென்றும், அவர்கள் தற்கால விஞ்ஞானிகளைவிட எவ்வளவோ மேலானவர்களென்றும் போதிக்கிறது. ஏனெனில், ஜடவிஞ்ஞானம் (Material Science) ஏற்பட்டு 200 வருடங்கள் தானாகிறது. ஆனால், மனித விஞ்ஞானம் (Science of Man) ஏற்பட்டு 5000 வருடங் களுக்கு மேலாகின்றன. எனவே, மறை ஞான மென்பது, மதமும் விஞ்ஞானமும் சேர்ந்த கூட்டுறவு. விஞ்ஞானிகள் மதத்திலிருந்து பிரிந்தும், மதப் போதகர்கள் விஞ்ஞானத்திலிருந்து வேறு பட்டும் நடப்பதால்த்தான், உலகிற்கு பரிபூரண உண்மை

மறைந்து நிற்கிறது. இருவரும் ஒன்று சேர்ந்து ஒத்துழைத்தால் உலகத்திற்கு பெரும் நன்மை கிடைக்கும். அதற்கான விளக்கம்தான், மேற்கோள் களுடன், இந்நூலில்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த நூலிலுள்ள கருத்துக்கள் எனது சொந்த மல்ல. பல நூல்களையும் கற்று ஆராய்ச்சி செய்ததின் பலன்தான் இந்த நூல். எனவே இதிலுள்ள குணங் களெல்லாம் நான் கற்ற பல நூலாசிரியர்களைச் சேர்ந்தனவேயாகும். எனது சிற்றறிவு கொண்டு மேற்படி கருத்துக்களைத் தொகுத்திருப்பதினுல், சில குற்றங்கள் ஏற்பட்டிருக்கலாம். அவைகள் (குற்றங்கள்) அனைத்தும் என்னுடையது. எனவே இதை வாசிக்கும் அறிவாளிகளாகிய நீங்கள், குற்றங் களைந்து குணம்கொள்ளுமாறு வணக்கத்துடன் வேண்டிக்கொள்கிறேன்.

*"தமிழகம்"*
*22—11—'55*

***D. A. T.*** *தளவாய்.*

---

# அன்புரிமை

எனது 60-வது ஆண்டு நிறைவு நாளன்று, (22-11-'52) எனது சகோதரர்களும், மருமகன்களும், எனது பெண் மக்கள்களும், ஒவ்வொருவரும் தனித் தனியே, எனக்குப் பொற்கிழியளித்துத் தங்கள் பேரன்பை காட்டினார்கள்.

அதை ஓர் நற்காரியத்திற்குப் பயன் படுத்த வேண்டுமெனக் கருதியிருந்தேன்.

இறைவனருளால் இந் நூலச்சிடும் வாய்ப்புக் கிடைக்கவே, அதைப் பயன் படுத்திக்கொண்டேன்.

எனவே, அவர்கள் அனைவருக்கும் இந்நூல் அன்புரிமையாக்கப்பட்டது.

" தமிழகம் "
22—11—'55

***D. A. T. தளவாய்.***

# அறிமுகம்

உலகமதிற் பிறவாத நெறிகாட்டி
உள்ளுணர்வு பெறுதற் காக
கலைகளெனுங் கடல்கடைந்து வடித்துமிகத்
தெளித்தெடுத்துக் காத லோடு
இலகிடுநன் மறைஞான சித்தியென்னும்
இணையறுநற் கலையைத் தந்தான்
அலகறுவான் புகழ்படைத்த திருமலைவேள்
அன்புநிறை தளசிங் கேறே.

— ஆர். எ. பிரமநாயகம்
திருநெல்வேலி.

# பொருளடக்கம்

# 1. மறைஞான மென்பது என்ன?

மறைஞானம் என்பது ஒருவருக்கும் தெரியக்கூடாது என்று மறைத்து வைத்திருக்கும் ஞானமல்ல. பின் என்ன வென்றால், ஆராய்ச்சி செய்யாதவர்கள் அறிவுக்குத் தட்டுப் படாமல் (அதாவது மறைவாய்) இருக்கும் ஞானம் என்று பொருள் கொள்ளவேண்டும்.

இந்த நூல் புராண, இதிகாச, சித்தாந்த, வேதாந்த நூல்கள் படித்தும், உண்மையை எளிதில் உணரக்கூடாதவர்களுக்கு, மிகவும் எளிய நடையில் உண்மையின்னதென்றும், அதையடையும்வழி இன்னபடி யென்றும் தெரிவிக்கும்.

கடவுள் இல்லையென உறுதியாய் உரைப்பவர்கள் மனக் களங்கமில்லாமல் இதைப் படிப்பார்களானால், கடவுள் உண்டென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும். மேலும் நமது புராண சாஸ்திரங்களில்ச் சொல்லப்பட்ட கடவுள்தான் உண்மைக் கடவுளா அல்லது வேறு உண்மைக் கடவுள் என்பது எது என்பதையும் நன்கு புலப்படுத்தும். சொல்ல முடியாத கடவுள் தன்மையை இன்ன வகையென்று போதிக்கும். இது பகுத்தறிவால் உணரப்படுவதால், இல்லாததை நம்பித்தானாக வேண்டுமென்று வற்புறுத்துவதல்ல.

மேலும், இது மதங்கள் எல்லாவற்றிலுமுள்ள அடிப்படை உண்மைகளையும், வேதாந்தங்கள், விஞ்ஞானங்கள், கலைகள் முதலியவைகளின் வளர்ச்சி, பயன் முதலியவற்றையும் போதிக்கும்.

மக்களில்ப் பெரும்பாலோர், கடவுள், மோட்சம் இன்னதென அறிய ஆவல் கொண்டவர்களாக இருக்கிறார்கள். பல சாஸ்திரங்களின் ஒன்றுக்கொன்று முரணான கருத்துக்களால், உண்மையறிய முடியாமல், கலங்கி நிற்கிறார்கள். இது அக் கலக்கத்தை நீக்கும்.

இது ஆங்கிலத்தில் ''Occult Science'' என்றும், வட மொழியில் ''குப்தவித்லை'' யென்றும் தமிழில் ''மறைஞானம்'' என்றும் வழங்கப்படும். இதற்கு ''Theosophy'' என்று ஆங்கிலத்திலும், ''தேவ ஞானம்'' அல்லது ''பிரம ஞானம்'' என்று தமிழிலும் வேறு பெயர் உண்டு.

உலகம் எதற்காக உண்டாக்கப் பட்டது, எப்பொழுது உண்டாயிற்று. எப்படி உண்டாயிற்று, எங்கே செல்கிறது, நான் யார், நான் எதற்காக வாழ்கிறேன், எனக்கு முடிவு என்ன, கடவுள் என்பது எது, எங்கிருக்கிறார், எனக்கும் கடவுளுக்கும் என்ன சம்பந்தம், உலகத்திற்கும் எனக்கும் என்ன சம்பந்தம், வாழ்க்கையில் குறைகள்போல்க் காணப்படுவதற்குக் காரணமென்ன, துன்பத்தால் கஷ்டப்படுவதேன், அதிர்ஷ்டம் தலைவிதி என்பது என்ன, உயிர் என்பது என்ன, மரணம் என்பது என்ன, என்ற இவை போன்றவைகளைத் தெளிவாய் விளக்கும்.

குறிப்பாய் இந்நூலில் போதிக்கப்படும் உண்மைகளைச் சுருங்கச் சொல்லவேண்டுமானால். அவை பின்வருவனவே யாம்.

1. மனிதன் அறியாமையிலிருந்து அறிவுப்பாதை சென்று தெய்வநிலையடைய முயன்று கொண்டிருக்கிறான்.

2. அவ்விதம் முன்னேற வேண்டிய பாதையில் அவனைச் செலுத்துவதற்கு; முன்னரே அவ்விதம் முன்னேற்றமடைந்த பெரியவர்கள், அவனை அதற்கேற்ற எல்லா வழிகளிலும் நடத்திச் செல்கிறார்கள்.

3. நமது சாதாரண கண்களுக்குத் தோன்றுகிற இவ்வுலகம், ஞானக்கண் கொண்டு பார்ப்பவர்களின் பெரிய உலகத்தில் ஓர் சிறு பாகம்தான்.

4. நமது ஸ்தூல உடல் நாமல்ல. நாம் என்று சொல்லப்படும் நமது ஆன்மாவிற்குள்ள பல சட்டைகளில் இதுவும் ஒன்று. எண்ணங்கள் உதிக்கும் இடமும் இதுவல்ல.

5. நமது உடலிற்கு உள்ளும் புறமுமாய் நின்றியங்கும் வேறு சில உடல்களும், ஆன்மாவிற்குச் சட்டைகள்தான், அவ் வுடல்கள் ஆகாயம் போன்ற அபூர்வ வஸ்துக்களால் அமைக்கப் பட்டிருக்கிறபடியால்; அவைகள் ஞானக்கண்கொண்டு பார்த் தால்த்தான் தெரியும்.

6. அண்டங்கள் அனைத்தும் ஓர் சக்தியின் வியாபகம். பூதங்களும் (மூலப் பொருள்கள்) மற்றும் உயிருள்ளதும் உயி ரற்றதுமான பொருள்கள் எல்லாம், அச்சக்தியை யடக்கி, கொடுத்து வாங்கும் தன்மையுடையன.

7. மேலே சொல்லிய வண்ணம் நமக்குத் தோன்றக் கூடியவைகளையும், தோன்ருமல் நிற்கின்றவைகளையும், ஓர் நீதி பிறழாத கருணைவடிவான சட்டம் ஆளுகிறது.

## 2. இந்த ஞானம் கிடைப்பதெப்படி?

இனி இந்த ஞானம் எப்படிக் கிடைத்தது? எங்கிருந்து கிடைத்தது? இது அறிவிற்குப் பொருத்தமுடையதா? விஞ்ஞான ரீதியாய் ஏற்க முடியுமா? என்ற கேள்விகள் எழக்கூடும். அதற்கும் விடையளிக்கிறோம்.

சுருங்கக் கூறுமிடத்து, முதலாவது இந்த ஞானம் "குருநாதர்கள்" (*Masters*) என்று சொல்லப்படுபவர்களால் உலகிற்குக் கிடைத்தது. அவ்வித குருநாதர்கள் எத்தன்மை வாய்ந்தவர்கள் என்றால், அவர்கள் சாதாரண மனிதனைவிட பிறவியில் அதிக முன்னேற்றமடைந்தவர்கள். இதில் அடைந்தவர்கள் என்னும் பதத்தை கூர்ந்து கவனிக்கவேண்டும் அதாவது தங்களின் சொந்த முயற்சியால் முன்னேறியவர்கள் என்று தெரிந்துகொள்ளுங்கள். ஏனெனில், மறைஞானம், ஒவ்வொருவருடைய தனித்தனி தகுதியையும் ஒழுக்கத்தையும் கொண்டல்லாமல் பாரபக்ஷத்துடன் ஒருவருக்கும் தனிச்சலுகை காட்டாது நீண்ட நாள்க்களின் முயற்சியால் குருநாதர் என்பவர் தன்னலம் தற்பெருமை (பகட்டு) என்னும் இரு தீய குணங்களையும் நீக்கித் தூய தன்மை அடைந்தவர். அவர் மக்களிடம் பேரன்பு கொண்டவர். அதனால் சகிப்புத்தன்மையும் மனித குணங்களை அறியும் ஆற்றலுடையவர். மனிதனின் தவறுதல்கள் அவருக்குத் தெரியாததொன்றுமில்லை. அவர் பரிதாபத்திற்குரியதல்லாத துன்பமொன்றுமில்லை. அவர் முன்னெடுத்த அனேக பிறவிகளினால் இத்துன்பங்கள் எல்லாம் அவர், தானே, அனுபவித்தவைகள்தான். மக்களிடம் கொண்ட பேரன்பினாலும், எடுத்த வேலையை ஓர் கலையெனக் கருதும் எண்ணமுடைவரானதினாலும், அவர் ஊதியமும், புகழையும் கருதாமல் வேலைசெய்பவர். நிபந்தனையில்லாத பேரின்பம் அவர் அடைந்துவிட்டபடியால், தனக்குக் கிடைத்த அவ்வின்பம் மற்றவர்களுக்கும் கிடைப்பதற்காக அதை மொண்டு கொடுக்கும் வழி அவருக்குத் தெரியும். "தாமின்புறுவதுலகின் புறக் கண்டு காமுறுதல்" கற்றிருந்தோர் செய்கையல்லவா

எல்லாக் குணங்களிலும் சமநிலையடைந்து, எல்லாவற்றையும் ஞானக்கண் கொண்டு பார்ப்பதால், மக்கள் எதை ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லையோ, அதை அவர்களிடம் வலியப் புகுத்தும் மூடத்தனத்தின் சாயைகூடச் சிறிதும் அவரிடம் கிடையாது. விரும்பாதவர்களுக்கு ஞானத்தைப் புகட்டுவது போல் தவறு வேறெதுவுமில்லை. ஆனால் ஞான தாக முடையவர்களுக்கு வழிகாட்டி, அவர்கள் அவ்வழி நடப்ப தானல், அவர்களைப்பார்த்து மற்றும் சிலரும் பின்பற்றலாம் என்ற நோக்கத்துடன், வழிகாட்டுவது, தன்னலமற்றவன் செய்யும் கருணைச் செய்கை. ஆகையால் குருநாதர் என்பவர் கள் வழிகாட்டிகளேயொழியக் கட்டாயப்படுத்தி வேலை வாங்கு பவர்களல்ல.

குருநாதர்கள் ஏன் இவ்வளவு உன்னத குணங்கள் கொண்டவர்களாக விளங்கவேண்டுமென்பது நாம் மேலே சொல்லச்சொல்லத் தெரியவரும். ஒன்று கவனிக்க வேண்டும். மறைஞானம்; இயற்கையில் மறைந்துகிடக்கும் சக்திகளைப் பற்றிப் பெரும்பாலும் போதிப்பதால், குருநாதர் போதிப்ப தையோ, அல்லது சொல்லாமல் குறிப்பாய்க் காட்டுவதையோ முதலில் நம்பிக்கையுடன் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். மேற்சொன்ன குணங்கள் எல்லாம் ஒருவரிடத்துப் பொருந்து மாயின் நாம் அவர்மேல் நம்பிக்கை கொள்ளத் தயங்கமாட் டோம் நமது நம்பிக்கையும் பகுத்தறிவோடு கூடினதாகயிருக்க வேண்டியது மிகவும் அவசியம். நம்பிக்கையென்பது மத ஆசிரியர்கள் புகட்டும் குருட்டு நம்பிக்கையல்ல. அனுபவமூலம் கண்ட ஞானத்தை அடைவதற்குரிய முதற்படியாகிய நம்பிக்கை வேண்டும். சாதாரணமாய் உலகில் கலைகள், விஞ்ஞானங்கள் போதிக்கும் ஆசிரியர்களுக்கு அவ்வவ் கலைகளுக்குரிய ஞான மிருந்தால்த்தான், அவரிடம் படிக்கும் மாணவனுக்கு நம்பிக்கை யேற்படும். சாதாரண கலைகளுக்கே இவ்வளவு தேவையென் ருல், தேவஞானம் புகட்டும் குருநாதர்களிடம் எவ்வித ஞானம் அமைந்திருக்க வேண்டும் என்பதை நீங்களே சிந்தித்துப் பாருங்கள். மேலும் அவர்களிடம் எப்பழியும் ஏற்படாவண்ண மிருக்கவேண்டும். ஆகவே அவர்கள் ஞானம், சக்தி, அறிவு,

அன்பு, முதலிய நற்குணங்கள் மிகவும் வாய்ந்த ''மானிடப் பெரியார்'' களாக இருக்கவேண்டும். அவ்விதமிருப்பவர்கள் சொல்லுவது சரியென்றுதான் நாம் நம்பவேண்டும்.

இவ்விதம் சொல்லிய குருநாதர்கள் உலகிலிருக்கிறார்களா? பார்க்கமுடியுமா வென்றால், இருக்கிறார்கள், பார்க்கமுடியும் என்றுதான் சொல்லவேண்டும். எப்படி அவர்களைப் பார்ப்பது என்றால், மறைஞானத்தில் மிகுந்த தேர்ச்சியுள்ள மாணவர்கள் சில கட்டுப்பாட்டிற்கடங்கி முயற்சி செய்தால் குருநாதர்களை ஸ்தூல சரீரத்திலும் விண்ணுடலிலும் * காணக்கூடும். விண்ணுடலில்ப் பார்ப்பது என்பதைப் பின்னால் விளக்கப்படும். மேலே சொல்லிய குணங்கள் கொண்டவர்கள்தான் ''குருநாதர்கள் என்றறிய வேண்டும்.

இத்தருணத்தில் எக்குணம் படைத்தவர்களை குருவாகக் கொள்ளக்கூடாது என்பதையும் சொல்லவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. ஏனெனில் குருவாக ஏற்கக்கூடிய தகுதி இல்லாதவர்கள், குருவென்று பட்டம் தாங்கி, நம் நாட்டில் மலிந்து கிடக்கிறார்கள். அறியாமையால் இவர்களை அணுகி மக்கள் ஏமாறாமலிருக்கும் பொருட்டு, இப்போலிக் குருக்களின் சுபாவங்களை விளக்கவேண்டியிருக்கிறது.

பணம் வாங்கிக்கொண்டு ஞான உபதேசம் செய்கிறவர்கள் உண்மைக் குருவல்ல. உண்மைக் குருவிடத்து நூல்கள் எழுதும் வழக்கம் கிடையாது. நான்தான் உலகத்தை இரக்ஷிக்க வந்தவன் என்று பலர் அறிய உண்மைக் குரு கூறுவதில்லை. ஆகையால் எவனொருவன் தன்னைக் குருவென்று, தானே விளம்பரப்படுத்திக்கொள்ளவோ, அல்லது பிறர் விளம்பரப் படுத்துவதற்கு இடங்கொடுக்கிறவனாக யிருக்கிறானோ, அவன் உண்மைக் குருவல்ல. உண்மைக் குருவிற்கு மக்கள் முன்னிலையில்ப் பேசுவதைப் பார்க்கிலும், பத்திரிகை நிருபர்களுக்குப் பேட்டி கொடுப்பதைப் பார்க்கிலும், பாமரர்களுக்குத்

---

* விண்ணுடல்=யாதனைசரீரம்=Astral Body.

தெரிசனம் கொடுப்பதைப் பார்க்கிலும் அநேக முக்கிய வேலை களிருக்கின்றன. உண்மையைக் கூறுமிடத்து, எவனொருவன் மக்கள் போற்றலில் விருப்பங்கொள்கிறானோ, அவன் பூரண ஒழுக்கம் அடையவில்லை யென்றுதான் கருதவேண்டும். ஒன்று அவனிடம் தற்பெருமையின் வாடை தயங்கி நிற்கவேண்டும், அல்லது எல்லா மோகத்திலும் கீழான பதவி மோகம் பிடித்து வாட்டுபவனாகயிருக்கவேண்டும். எனவே இவர்களிடம் நீங்கள் சிக்கிக்கொள்ளலாகாது.

---

# 3. பிறவியும் மறுபிறப்பும்

மனிதவாழ்வில் நமக்கு மிகுந்த குழப்பத்தை உண்டு பண்ணுவது எதுவென்ருல், மனிதருக்குள் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகள் (தாரதம்மியம்) எதனுல் உண்டாகிறது என்பதுவே. இச்சந்தேகத்தை நீக்கமுடியாத தத்துவத்தைப் படிப்பதால் என்ன உபயோகம் என்று வாசிப்பவர்கள் கருதலாம். அவ்விதம் அவர்கள் கருதுவதும் சரியே. ஆகவே முதலில் இதை விளக்க வேண்டியது அவசியமாகிறது. ஆகையால் இனிச் சொல்லப் போவதைக் கூர்ந்து கவனம் செலுத்திப் படிக்கக் கேட்டுக் கொள்கிறேம்.

மறைஞான தத்துவத்தின்படி, (Occultism) தோன்றிய உலகனைத்தும் ஓர்சக்தியிலிருந்து (Energy) உண்டானவையே யாகும். நாம் கண்ணுல்ப் பார்க்கிற நுண்ணிய மணலிலிருந்து ஆகாயத்தில்ப் பரந்து விளங்கும் நக்ஷத்திரங்கள் வரை, ஆப்பிரிக்க காட்டுமிராண்டி முதல் புத்தர் கிருஸ்து முதலியவர்கள் வரையும், இச்சக்தியினுல் வெளியானவைகள்தான். ஜடம் (Matter) (பருப்பொருள்) என்பது சக்தியின் இறுகினவடிவம். ஆவியென்பது (Spirit) (Energy) சக்தியின் மேலான நுண்ணிய தன்மை. ஆகையால் ஜ்டம் என்பது ஆவி கீழிறங்கிய தன்மை. ஆவியென்பது ஜடம் மேலேறிய தன்மை. இந்த ஆவி அல்லது உயிர் என்பது எல்லா ஜடப் பொருள்களிலும் உள் உறைந்திருப்பதோடல்லாமல், அதற்குப் புறம்பாகியும் நிற்கும் தன்மையையும் கொண்டது. அதாவது ஜடத்தினுல் காணப்படாமல் நிற்பது. ''எனது பகுதியிலிருந்து உலகத்தை தோன்றும்படி செய்துவிட்டு நான் தனியேயிருக்கிறேன்'' என்று கீதையில் சொல்லப்பட்டிருப்பதன் பொருள் இதுதான்.

இதனுல் இயற்கையில்த் தோன்றிய பொருள்கள் எல்லாம் உயிருள்ளவை என்பது புலனுகிறது. (விஞ்ஞானிகளும் உயிரற்ற பொருள் உலகிலில்லை யென்பதை ஒப்புக்கொள்கிருர்கள்) ஆனுல் அப்பொருள்களிடத்தே தோன்றிய உயிர்ச் சக்தி பரிபூரணங்கொண்டதல்ல. அதாவது செடிகள் பூச்சிகள், மிருகங்கள், கடேசியாக மக்களும், ஓர் வகையாய்ப் பார்க்கில் உயிருக்கு

அநேகவிதமான சட்டைகளே தவிர, உயிர் என்பது இதுவல்ல. இவ்விதம் பலவகைப்பட்ட உயிர்கள், பலபடியான கனத்த சட்டை கொண்டு (உடல்கொண்டு) வேலை செய்வதால், சில அனுபவங்கள் அதற்கு ஏற்படுகின்றன. அதனுல் அவைகள் அதிக வித்தியாசமடைந்து, பல விதமாய்த் தோன்றுகின்றன. அதனுல்த்தான் ஓர் சட்டை கழிந்த உடன் (இறந்த உடன்) பரிபூரண ஆன்மாவை யடையாமல், அதன் தகுதிக்கேற்றபடி மற்றெரு சட்டைக்குள் புக (வேறுஉடல்எடுக்க) ஆரம்பிக்கிறது. இந்த விதமாய் யுகக் கணக்கில், வெவ்வேறு சட்டைகள் எடுத்தும் களைந்தும், பிறவிச் சக்கரத்தில்ச் சுழன்று கொண்டு வரும் போது, அதற்கு மானிடச் சட்டை (மனித உடல்) தாங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு விடுகிறது. அதனுல் அது ஆன்மாவாகி மானிடச் சட்டை தாங்கி மனிதன் என்றழைக்கப் படுகிருன். அது, முதன் முதல், மனித உடல் எடுக்கும் போது ஓர் காட்டுமிராண்டி இனத்தில் தோன்றுகிறது.

இவ்விதமான போதும், அதன் பிறீவி முடிவதற்கு இன்னும் வெகு தொலைவுயிருக்கிறது. இந்த ஆன்மா ஓர் முதிர்ந்த உடலிலிருந்தாலும், அது கைப்பிள்ளை பருவம்தான் அடைந்திருக்கிறது. அது பாலப் பருவம் அடைய வேண்டுமானுலும் இன்னும் அதிக தொலை கிடக்கிறது (இன்னும் பிறவி அனேகம் எடுத்தாக வேண்டும்) ஆன்மா முதிர்ந்த பருவமடைய வேண்டுமானுல், எவ்வளவு காலம் செல்லுமென்பதைச் சொல்ல வேண்டியதில்லை. இந்த ஆன்மா காட்டுமிராண்டி போல் கீழ் இனத்திலிருக்கும் போது, பலவிதமானதும், விரும்பத்தகாததுமான அநேகம் பிறவிக்குப் பின், அது ஓர் உயர்ந்த இனப் பிறவியில் உதிக்கிறது. அவ்விதம் எடுத்தும் அந்த ஆன்மா, அறிவு, நன்னடத்தை முதலிய நற்குணங்கள் வாய்க்கப் பெருமல், பக்குவப் படாமலே யிருக்கிறது. நல்லகுணங்கள் முற்றிலும் வாய்க்க வேண்டுமென்ருல், அது இன்னும் அநேக பிறவி எடுக்கவேண்டும். அக்குணங்கள் வாய்க்கும் காலம் சமீபத்திலா, நாள்ச் சென்ரு, என்பது மனிதன் செய்யும் முயற்சியைப் பொறுத்தது. மனிதனுக்குத் தனது எண்ணம்போல் நடக்க

பூரண உரிமையளிக்கப் பட்டிருக்கிறது. அந்த உரிமையை எப்படி உபயோகப் படுத்துகிருனோ அதைப் பொறுத்துத்தான் அவன் பிறவிக்காலம் வரையறுக்க முடியும்.

கண்காணுத் தோற்றத்திலிருந்து ஆன்மா, மனிதப்பிறவி யெடுத்து, கைப்பிள்ளைப் பருவம், பாலப்பருவம், முதிர்ச்சிப் பருவமாகிய வேலைகளை துடர்ந்து நடத்திக்கொண்டேதானிருக் கிறது. இதை நடத்தும் சட்டம் எவ்விதம் செலுத்தப்படுகிற தென்பதை யறிந்தால் நாம் மேலே கூறிய மனிதர்களுக்குள் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகள் (தாரதம்மியம்) எதனுல் என்பது விளங்கும்.

படிப்படியாக ஆன்மா வளர்சியடைவது, மனித அறிவு படிப்படியாகப் பக்குவமடைவதைப் போலத்தான். ஆனுல் ஒரே ஒரு வித்தியாசம் மட்டும் உண்டு. ஆன்மா வளர்ச்சியடைவதற் குப் பல யுகங்கள் செல்லும். மனிதன் அறிவு பல வருடங்களில் வளர்ச்சியடைந்துவிடும். இந்த ஒற்றுமை கீழ்க்கண்ட காரணங் களால் நமக்கு நல்ல போதனையைத் தெரிவிக்கும்.

எவ்விதம் கைப்பிள்ளையானது தன்னைத்தானே பாதுகாக்க முடியாததால், அதற்கு மேன்பட்ட அறிவுடைய முதியோர்க ளால், ஆடை முதலியன அணியப்பட்டு நடத்தி செல்லப் படுகிறதோ, அதே போல் கைப்பிள்ளைப் பருவமான ஆன்மா வும், தனக்கேற்ற சட்டைகளை (உடல்களை) அணிவதற்குப் போதிய பக்குவமடையாததால், மனித வாழ்வினையை நடத்திச் செல்லும் பேரறிவாளர்களால் அதற்கு வேண்டும் சட்டை (உடல்) கொடுக்கப்படுகிறது. தனது இஷ்டம்போல் நடக் கக்கூடிய சக்தியும் (Free will) இப்பருவத்திலுள்ள ஆன்மா விற்கு சிறு பிள்ளைக் கொத்ததேயாகும். இந்த ஆன்மா பாலப் பருவமடைந்து, அதன்பின் யௌவனப்பருவம் (காளைப்பருவம்) அடையும்போது அந்த சக்தியும் (Free will) சற்று அதிகரிக்கு மென்றுலும், அப்போதும் தனக்கு இஷ்டமான சட்டை (உடல்) போடக்கூடிய சக்தி அதற்கில்லை. இப்பருவத்திலுள்ள ஆன்மா அறிவுவழிச் செல்ல மறுத்து சோம்பலாயிருந்தாலும், சேட்டைக் குணத்துடன் கட்டிற்கடங்கா வழிசென்றுலும், அதற்குக்கிடைத்த

உரிமையைக் கெட்ட வழியில்ச் செலுத்தினதாலுண்டாகும் பலனை அது அனுபவிக்க வேண்டியதுதான். குழந்தைகள் முரட்டுத்தனமாய் விளையாடித் தங்கள் சட்டைகளை அழுக்காக்கி கொண்டு வந்தால், எப்படி அதன் பெற்றோர்கள் அதன் விளையாட்டிற்குத் தகுந்த முரட்டுத் துணியுடன் கூடிய சட்டையை அணியும்படி செய்கிறார்களோ அதுபோல்த்தான். இவ்விதம் செய்வதால் பெற்றோர்கள் குழந்தைகளைத் தண்டிக் கிறார்கள் என்று அர்த்தமல்ல; செலவில்ச் சிக்கனம் செய்வதே தவிர வேறல்ல. அதேபோல்த்தான் கட்டுப்பாட்டிற்கடங்காத ஆன்மாவிற்கும், அதன் தகுதிக்கேற்ற உடல் ஏற்படுகிறது. கர்மத்திற்கு தகுந்தவாறு உடல் கிடைக்கும் என்பதற்கு இது ஓர் எடுத்துக் காட்டு. கர்மத்தைப் பற்றி பின் ஆராய்வோம்.

ஆன்மா சிறுபிள்ளைச் செய்கையை விட்டு விருத்தியடைய எண்ணங்கொண்டு, முதிர் பருவமடையும்போது தனக்கு வேண்டிய உடலெடுப்பதற்குண்டான சக்தியும் அதற்கேற் படுகிறது. அதாவது தனது இஷ்டம்போல் நடக்கும் சக்தி அதிகமாகிறது. இதனால் தனக்கு வேண்டிய தாய் தகப்பன்மார் களை, தானே தெரிந்தெடுக்கும் சக்தி அதற்கு உண்டாகிவிடு கிறது, அவ்விதம் தாய் தகப்பன் நிச்சயிப்பதற்கு, இரண்டு விதமான பிணைப்பு ஏற்பட்டு, இரண்டில் ஒன்றைப் பற்றிக் கொள்ளும். அதில் ஒன்று கடந்த பிறப்பில் (போன ஜென்மத் தில்), தான் பிறக்கப் போகும் பெற்றோர்களின் துடர்பு, மற் றொன்று இன்ன பெற்றோர்களின் கருவில் உதித்தால்த்தான், மேலைக்கு நமக்குப் பிரயோசனம் உண்டாகுமென்று கருதுவது. எனவே, ஓர் ஆன்மா பிறவிக்காக, ஓர் கலியாணமான தம்பதி களைச் சுற்றி சுற்றி, அவர்கள் கர்ப்பத்திலிருக்கும் கருவில் புகுவதற்குச் சமயம் பார்த்துக்கொண்டிருப்பதை, தேற்சியுள்ள ஞானக்கண் படைத்தவர்கள் காணக்கூடும். இதற்கு மாறான ஓர் விஷயமொன்றையும் இங்கே கவனியுங்கள். ஓர் குடும்பத் தில் எந்த ஆன்மாவும் இஷ்டப்பட்டோ அல்லது கட்டாயத்தின் மேலோ, பிறவியெடுக்க விருப்பங்கொள்ளவில்லையானால் அக்குடும்பம் (அதிலுள்ள பெண்) மலடாகவேயிருந்து வரும் பிள்ளையில்லாத காரணத்திற்காக வைத்தியர்களிடம் அவர்கள்

பரிசோதனை செய்துகொண்டாலும், வயித்தியர்கள், மலட்டின் குறிகள் காணுமலிருக்கும்போது கருத்தரிக்காத காரணம் விந்தையாக இருக்கிறதென்றுதான் சொல்வார்கள். மறுபிறப்புங் கூட மலட்டிற்கு சம்பந்தமுடையதாக இருக்கிறது.

மேலே சொல்லியதிலிருந்து, நம்மை நடத்திச்செல்லும் சட்டத்தில் சிறிதேனும் நியாயத் தவறுதலுக்கு இடமில்லையென் பதை உணரலாம். மேலும் அச்சட்டத்திற்கும் விஞ்ஞானத்திற் கும் யாதொரு முரண்பாடுமில்லை யென்பது நன்கு விளங்கும். மறைஞானம் (Occultism) உயிர் நூல் தத்துவக் கலைஞர்கள் (Biologist) மெய்யெனக் காட்டிய கொள்கைக்கு மாறுபட்ட தல்ல. அவர்களால் மெய்ப்பிக்க முடியாதவைகளில்த்தான் மறைஞானம் கருத்து வேற்றுமைகொண்டது.

முதிர்ச்சியடைந்த ஆன்மாக்களுக்குத் தங்கள் தேவைக்குத் தகுந்தபடி உடலெடுக்க உரிமை அளிக்கப்பட்டிருக்கிற தென்பதைக் காட்டினேம். ஆனல் வாசிக்கும் நேயர்கள் "நீங்கள் சொல்வது உண்மைதான். ஆனல் பக்குவமடையாத ஆன்மாக்களுக்கு அவ்வுரிமையளிக்காதது பாரபக்ஷமும் நியாய விரோதமுமல்லவா?" எனக் கேட்கக்கூடும். ஆழ்ந்து யோசித் தால், அது நியாய விரோத மில்லை யென்பதோடல்லாமல், நியாயமானதும் முக்கியமானதுமான கொள்கைதான் என்று மெய்ப்பிக்கலாம். ஓர் தகப்பன் தனது சிறு குழந்தை, அதன் மனம் போல் நடக்கப் பிரியப்படுகிறது என்பதற்காக, அதற்கு அளவிற்கு மிஞ்சின தின்பண்டங்களையும், அதன் மனம் போல் விளையாடுவதற்காகத் தீக்குச்சிகளையும் கொடுக்க மறுத்தால் யாராவது அத் தகப்பனை ஞாயமற்றுத் தன் குழந்தைகளை நடத்துகிருன் என்று சொல்ல முடியுமா? அதேபோல்த்தான் குழந்தைப்பருவமுள்ள ஆன்மாவிற்கும், அதன் மனம்போன போக்கில் பிறவி எடுக்கும்படி உரிமையளித்தால் அது எங்ஙனம் முன்னேறும்? பிறவி முன்னேற்ற வழி மனம் போன போக்கில் நடப்பதல்ல. அது ஓர் அமைப்பான சட்டம். இச்சட்டத்தை "கடவுளின் நினைப்பு" என்று சில நூல்களில்க் கூறப்பட்டிருக் கின்றன. அச் சட்டம் ஸ்தூல சூக்ஷ்ம உடல்களை யாளுகிறது.

இச் சட்டத்தின் கருத்தை உணருவதுதான் மறை ஞான தத்துவத்தையுணர்வது. மறை ஞான சித்தியின் பழக்கத்தால் ஒருவன் மற்றவர்களைவிட முன்னதாகவே பரிபூரண நிலையடையும் தன்மை எய்தலாம்.

இவ்விதமிருந்த போதிலும், மனிதனின் குறுகிய ஆயுள்க் காலமாகிய ஓர் பிறவியில், இதை எப்படியடைய முடியும். மனித வரம்பு கடந்த திறமையுடையவர்கள் (Super man) உண்டு என்பதை நாம் ஒப்புக்கொள்ளாத போதிலும், சிறு பருவத்தில் அளவிற்கு மீறின அறிவாளிகளும் (Infant-Prodigies) சிறப்புத் திறமையுடையவர்களும் (Genius) உண்டென்பதை ஒப்புக்கொண்டுதானுக வேண்டும். மறு பிறப்பின் சித்தாந்தத்தை யுணர்வதின் மூலம்தான், மேற் சொல்லிய திறமையுடையவர்களையும், உண்மை ஒழுக்க சீலர்களையும், மற்றும் பேராற்றல் மிகுந்தவர்களையும் விளக்கிக் கூற முடியும். இந்த சிந்தாந்தத்தை யேற்காவிட்டால், மனிதனுக்கு, ஏதோ, தெய்வம் சலுகை காட்டியிருக்கின்றதென்றோ, அல்லது குருட்டு அதிர்ஷ்டம் என்பதையோ ஒப்புக்கொள்ள வேண்டும். அவையிரண்டும் பகுத்தறிவிற் கொவ்வாதது.

முற்பிறப்பில் நடந்த சங்கதிகள், இப்பிறப்பில் மக்கள் நினைவிலில்லாததால், மறு பிறப்பு என்பது இல்லையெனக் காரணம் காட்டி வாதாடுபவர்களைப் பற்றிச் சிறிது நாம் கவனம் செலுத்தவேண்டி வருகிறது. முதலாவது, இப்பிறப்பில் நடந்த சங்கதிகளிலேயே கூட அநேகம் நமது நினைவிற்கு வருகிறதில்லையென்று உள நூல் ஆராய்ச்சியின்படி (Pscho-analysis) மெய்ப்பிக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது ஞாபக சக்தி மூளையிலுள்ள உயிரணுக்களால் (Brain cells)த் தான் ஏற்படுகிறதென்பதை மறந்துவிடக் கூடாது. ஒவ்வொரு பிறவியிலும் மனிதனுக்குப் புதிய புதிய மூளை ஏற்படுகிறதென்பது தெரிந்த பின், அப் புதிய மூளை தனக்குச் சம்பந்தமில்லாத காலத்தில் நடந்த காரியத்தை எவ்விதம் அறிய முடியும்?

இது தவிர, ஓர் பிறவிக்கும் மற்றுமோர் பிறவிக்கும் உள்ள ஞாபக சக்தி ஏன் துண்டிக்கப்பட்டிருக்கிற தென்பதற்கு, வேறு சில காரணங்களும் உண்டு. கடந்த பிறவிகள், மகிழ்ச்சியாயும் வெற்றிகரமாயும் நடந்திருக்குமானல், அதே போல் இப் பிறவியும் நடக்க வேண்டும் என்ற நினைவு உண்டாய், அதேபோல் இப் பிறவியும் கழிக்க நேரிடும். ஆகையால் ஆன்மா எடுத்த வேலையைத் துடர்ந்து நடத்திக் கொண்டுபோக முடியாது. எனவே பிறவி முன்னேற்றம் தடைப்பட்டுப்போகும். காலப் போக்கைக் கவனிக்கும்போது, தனது முன்னையப் பிறவி இன்பகரமாகவோ, அல்லது அமைதியாகவோ நடந்திருக்குமானல், சோம்பலுள்ள அந்த ஆன்மா தன்னையறியாமலே, அந்த வாழ்க்கையையே நாடிச் செல்லும். துறவியாய்க் காலம் கழித்தவர்களுக்கு, உலகத்தோடும், அதிலேற்படுகிற இடர்களோடும் இணைந்துபோக முடியாதென்ற உணர்ச்சியுண்டாய், எங்கேனும் ஓர் மடத்திலோ, அல்லது ஏதேனும் ஓர் குகையிலோ இருந்து அமைதியாய்க் காலந்தள்ள விருப்பம் உண்டாகும். அதேபோல், கன்னிகா ஸ்திரிகளாய்க் காலந் தள்ளினவர்களுக்கு, இல்லற வாழ்க்கையிலும், அது சம்பந்தப்பட்டவைகளிலும் வெறுப்பு ஏற்படும். இந்த ஆண்களுக்கும் பெண்களுக்கும், உண்மையில் முன் பிறவி ஞாபகம் ஏற்படுகிறதில்லையென்ருலும், அவர்கள் முன் பிறவியில்ச் செய்த ஜெபதபங்களால், அவர்களுக்கு ஓர் ஞான உணர்ச்சி உண்டாய், அதனுல் அவர்கள் ஆன்மாவிற்கு முற்பிறப்பின் வாசனை (பூர்வ ஜென்ம வாசனை) சிறிது உண்டாகிறது. இவர்களில் யாரேனும் தங்கள் முன்னைய வாழ்வை கூடியவரை திரும்ப நடத்த முயன்ருல், இப்பிறவியில் அவர்களுக்கு முன்னேற்றம் தடைபட்டு விடும். முற் பிறப்பின் வாசனையே அவர்களை இவ்வளவு தடுக்குமென்ருல், முற் பிறப்பின் முழு நினைவு எவ்வளவு அதிகம் தடுக்கக் கூடு மென்பதை அறிந்துகொள்ளுங்கள்.

ஓர் ஆன்மா, நீண்டகாலம் பிறவிச் சுழலில் வரும்போது, ஆணுகவிருந்தால் ஆணுகவோ, அல்லது பெண்ணுகயிருந்தால்ப் பெண்ணுகவோதான், பிறக்க வேண்டுமென்பதில்லை. அநேக பிறவிகளில் ஆணுகப் பிறந்தது பின் பெண்ணுகவும்,

பெண்ணுகப் பிறந்தது பின் ஆணுகவும் பிறக்கும். பொதுவாக மூன்று பிறவிக்குக் குறையாமலும், ஏழு பிறவிக்கு அதிகம் போகாமலும், மாறி, மாறி, ஆண் பெண்ணுகப் பிறக்கும். ஏனெனில்ச் சில படிப்பினைகள், ஆன்மா பெண்ணுடல் எடுத் தால்த்தான் அடைய முடியும். அதேபோல் சில பாடங்களை ஆணுடல் எடுத்தால்த்தான் அறியமுடியும். ஆணுயிருந்தா லும் சரி பெண்ணுயிருந்தாலும் சரி, ஆன்மாவிற்கு நிறைந்த அறிவுயேற்பட வேண்டும். ஆன்மா விரைவிலோ அல்லது காலஞ்சென்ருே அப்பூரண ஞானத்தை யடைந்தே தீரும். பெண் சுபாவமறிய வேண்டுமானுல் பெண்ணுடல் எடுத்தால் தான் முடியும். ஆண் சுபாவமறிய ஆணுடல் எடுக்க வேண்டி யதுதான்.

பேராசிரியர் ''Thorndike'' என்பவர், ஆண் பெண் குணக் கூறுகளின் வித்தியாசங்களைச் சுருங்கக் கூறியிருக்கிருர். ''பெண்கள், பிழையற எழுதுவதிலும், அந்நிய பாஷை கற்ப திலும், ஞாபகசக்திக் கூர்மையிலும், கற்றதைத் தங்க வைத்துக் கொள்வதிலும் சிறந்தவர்கள் என்றும், ஆண்கள் தேச சரித் திரம் கற்பதிலும், அறிவு மிகுதியிலும், இயக்க நூல் - இயைபு நூல் (Physics - Chemistry) உணருவதிலும், போர் வீரன் போலசைந்து உடலசைக்கும் தன்மையிலும் சிறந்து விளங்கு கிருர்கள்'' என்று கூறியிருக்கிருர். பெண்ணுனவள் போஷிப்ப வளாகியும், காப்பாற்றுகிறவளாகியும், உதவி செய்கிறவளாயு மிருக்கிருள். இதைத்தான் தாய்க்குணம் என்று சொல்வது. பூரண ஞானமடைந்த ஆண்களுக்கு பெண்களின் சிறந்த தன்மைகளும், பூரண ஞானம்பெற்ற பெண்களுக்கு ஆண்களின் சிறந்த தன்மைகளும், உண்டாவது இயல்பு. தைரியம் என்பது பெரும்பாலும் ஆண் குணம். ஆனுல்ப் பெண்கள் சமயங்களில் ஆண்களைப் போலவும் — அதற்கு மேற்பட்டுங்கூட — தைரிய முடையவர்களாக யிருக்கின்ருர்கள். ஆண்கள் தைரியமெல் லாம் தங்கள் எதிரிகளிடம் காட்டுதலே. பெண்கள், தாங்கள் எதனிடம் அன்பு செலுத்துகிருர்களோ, அதற்கு இடைஞ்சல் வந்தபோது பாதுகாப்பதற்காகவே தங்கள் முழு தைரியத்தை யும் காட்டுகிருர்கள்.

சமநிலையடையாத ஆன்மாக்களிடம் ஆண் தன்மையோ அல்லது பெண் தன்மையோ மிகுந்து நின்று, விரும்பத்தகாத நிலையை உண்டாக்கக்கூடும். அதனால்த்தான் பெண்கள் போன்ற நடை உடை பாவனை கொண்ட ஆண்களையும், ஆண்கள் போன்ற பெண்களையும், நாம் உலகில்க் காண்கிறோம். ஆண்பாவனை கொண்ட பெண், அநேக துடர்ச்சியான ஆண் பிறவிக்குப்பின், முதலாவதாகப் பெண் பிறவி எடுத்தவள். முன் பல பிறவிகளில் ஆணுடலில்த் தொழிலியற்றியபின், அவள் அவளுக்குப் பெண்ணுடலில்ப் பொருந்தி வேலைசெய்வது கஷ்டம் போல்த் தோன்றுகிறது. சுருங்கச் சொல்லவேண்டுமானால், அவள் ஆணேதான். கூடியவரையில் அவள் ஆண் போல உடைதரிக்க விரும்புகிறாள். ஆண்கள் ஈடுபடும் தொழிலிலும், விளையாட்டிலும் அதிகவிருப்பம் கொள்ளுகிறார் — அவள் மனவெழுச்சிக்குறிய அவயவங்கள் முழுவதும் (Emotional organism) ஆண்தன்மை கொண்டுளதால், அவள் ஆண்களுடன் அன்பு செலுத்துபவளாக யிருக்கிறாளேயொழிய ஆண்கள் மேல் காதல் செலுத்துபவளாகக் காணப்படுவதில்லை. உளநூல் ஆராய்ச்சியாளர்கள் (Psycho-Analysts) இக்குணபேதத்திற்கு சொல்லுகிறகாரணம் எங்களுக்குத் தெரியும். அவர்கள் அத்தன்மையின் விளைவைப் (effect) பற்றிச் சொல்லுகிறார்களேயொழிய, அவர்களுக்கு அத்தன்மையின் காரணம் (cause) இன்னதென்று தெரியாது. மறைஞானம் கற்று ஞானக்கண் பார்வை பெற்றபோதுதான் இவைகளெல்லாம் புலப்படும்.

மறுபிறவி உண்டென்பதற்கு அநுகூலமான மற்றோர் உதாரணம் காட்ட வேண்டி வருகிறது. இதுவரை ஒருவரையொருவர் பார்த்திராத இரண்டுபேர்கள், முதன் முதல் சந்தித்தபோதே, ஒருவர் மேல் ஒருவர் அன்பு கொண்டு, ''நாங்கள் ஆயுள் முழுவதும் பழகினவர்கள் போலாய் விட்டோம்'' என்று அவர்களே சொல்லக் கேட்டிருப்பீர்கள். இதை என்னவென்று சொல்வது? மறுபிறவியை ஒப்புக்கொள்கிறவர்களுக்கு அதன் அர்த்தம் விளங்கும். அதாவது, கடந்த ஒன்றோ அல்லது அதற்கதிகமான பிறவிகளில், நெருங்கிய நண்பர்களாகவோ,

அல்லது உறவினர்களாகவோ உள்ளவர்கள், மறுபடியும் சந்திக்கும்படி நேரிட்டது என்றே தெரிந்து கொள்வார்கள். அது அவர்களின் பழைய துடர்ச்சிதான். அவர்களுக்கு முன் பிறவிகளில் நடந்தவைகள் அவர்கள் நினைவிற்கு (மூளைக்கு) எட்டாதிருந்த போதிலும், அவர்கள் ஆன்மாவில் அது நன்கு பதிந்திருப்பதால், அவர்கள் சந்தித்ததும் ஒருவர் மேல் ஒருவர் அன்புடையவராகிவிடுகிறார்கள். இவர்களில் ஒருவர் ஆணாக வும் மற்றவர் பெண்ணாகவுமிருந்தால், பார்த்த உடனே ஒருவர் மேல் ஒருவர் காதல்கொண்டு விடுவார்கள். இதைத்தான் "கண்டதும் காதல்" — Falling in love at the first sight என்று ஆங்கிலத்தில்க் கூறுவது. இந்த நட்பை மறுபிறவித் தத்துவமல்லாமல், வேறு எது கொண்டு மெய்ப்பிக்க முடியும்? ஒருவர்மேல்ஒருவர் கொள்ளும் காதலால்மட்டும் (Sex appeal) அன்பு(Love) உண்டாகாது. அப்படி யிருக்குமானால் ஒவ்வொரு வாலிபனும், தான் தான் சந்திக்கும், அழகான பெண்களுடன் அன்பாகயிருக்க வேண்டுமே? உலகத்திலப்படி யிருக்கிறதா? வெளி அழகோ, அல்லது பகட்டோ, அன்பு ஏற்படுகிறதற்குக் காரணமாகா. ஒருவிதமான வெளிக்கவர்ச்சியுமில்லாத இரு தம்பதிகள், ஒருவர்மே லொருவர் மிக அன்பாக யிருக்கிறதைக் கண்டு உலகத்தார் "இவர்கள் ஒருவர் மேல் ஒருவர் பிரியப்பட அவர்களுக்குள் என்ன தானிருக்கிறதோ" என்று சொல்லக் கேட்டிருப்பீர்கள். உயிர் நூல் வல்லுநர்கள் (Biologist) அன்பு ஏற்படுவதைப் பற்றிப் பலபல விதமாய்ச் சொல்லுகிறார்கள். அவர்கள் சொல்லுவது நமது நம்பிக்கைக்கு அப்பாற்பட்டதாக யிருக்கிறது.

யுகக் கணக்கானபோதும் ஒருவர்மேலுள்ள உண்மை அன்பின் துடர்ச்சி விட்டுப் போவதில்லையென்ற இந்த சித்தாந் தத்தின்படி பார்த்தால், ஒருவர்மேல் ஒருவர் கொண்டுள்ள வெறுப்பும் யுகக்கணக்கான போதிலும் விட்டுப் போவதில்லை. முதல் சந்திப்பிலேயே ஒருவர்மேலொருவர் வெறுப்புக்கொள் வதைப்பற்றி, மறைஞானம், (Occultism) பழைய விரோதிகள், தங்கள் விரோத மனப்பான்மையின் சக்தியால் மீண்டும்

சந்திக்கும்படி நேரிட்டது என்று சொல்கிறது. அதனுல்தான், புத்தர், கிருஸ்து, வள்ளுவர் போன்ற மகான்கள், மக்களை, தங்கள் எதிரிகளையும் நேசிக்கும்படி, அறிவுரைகூறியிருக்கிருர்கள். இந்த அறிவுரையின் ஆழ்ந்த கருத்தை, நாம் இனிச் சொல்லப்போகும் கர்மம் என்பதிலிருந்து நன்கு தெரிந்து கொள்ளலாம். ஊனக் கண்ணுக்கு மறைவாயிருந்தபோதிலும், உண்மையும், நியாயமானதாயுமுள்ள, இந்த இயற்கைச் சட்டத்தின்படி நடக்கும் உடனடி விருப்பு வெறுப்புக்களை, மறைஞானிகள் (Occultists), மேற்சொன்னபடி விளக்கிக் கூறியிருக்கிருர்கள். அது தருக்க நூல்ப்படி பொருத்தமானது மட்டுமல்ல, ஞானக்கண் ஆராய்ச்சியினுல் உறுதியாக்கப்பட்டுமிருக்கிறது. மேலும் மறுபிறவிச் சித்தாந்தம், விருப்பு வெறுப்புக்களை விளக்குவது மட்டுமல்ல. சிலருக்கு சில வகைகளில் காரணமில்லாமலேற்படும் பயத்தின் (Phobia) காரணத்தையுங்கூட விளக்கும். முன் பிறவிகளில் ஏற்பட்ட பயங்கர ஆபத்துக்களின் நினைவு, உள் மனதில்ப் பதிந்து, இப்பிறப்பில் மீண்டும் காட்டுவதுதான், அப்பயம் (Phobias) என்று ஞானப் பார்வை (ஞான திருஷ்டி) நிரூபித்திருக்கிறது. அதாவது நீரில் மூழ்கியிறந்தோ, தீயினுலிறந்தோ, மூச்சு முட்டியிறந்தோ அல்லது இம்மாதிரி மரணமடைந்தவர்கள், மறுபிறவியில்த் தண்ணீரைக் கண்டால் பயமடைவதும், தீயைக் கண்டால்ப் பயமடைவதும் சதாரணம்.

இதை முடிக்குமுன் பிறவி முன்னேற்றத்தில் மேலான தன்மையடைந்தவர்களுக்குத்தான், தங்களது முன்பிறவிச் சங்கதிகளையறியக்கூடிய சக்தி உண்டென்ருலும், இதற்கு விதிவிலக்காக, குறிப்பிடக்கூடிய சில சம்பவங்கள் ஏற்பட்டிருக்கிறதென்பதையும் சொல்லவேண்டியிருக்கிறது.

இரண்டொரு குழந்தைகள், இறந்தபின், வெகு விரைவில் மறுபிறவி எடுத்ததின் காரணமாக, தங்கள் சென்ற பிறவியின் நினைவைக் காட்டியிருக்கிறதென நம்பத்தகுந்த சாட்சியமிருக்கிறது. இக் குழந்தைகள் தங்களது முன்பிறவியில், தங்கள்

பெற்ருேர்கள் இன்னுரென்றும், இப்போது தாங்கள் பிறந்திருக்கிற வீட்டிற்கு .நூறு மைல் தூரமுள்ள தாங்கள் முன் பிறந்தவிட்டின் அடையாளங்களையும், கணக்காய்ச்சொல்லிற்று. அக்குழந்தைகளால் சாதாரணமாய் அவை அறியக்கூடாதவைகள். அக்குழந்தைகள் சொல்லியவற்றைத் தீர விசாரித்ததில், அவ்வளவும் உண்மைதானென்று தெரியவந்தது. இவ்விதமாக விரைவில் மறுபிறவி எடுப்பது வழக்கத்திற்கு விரோதமான போதிலுங்கூட, அது ஓர்விதக் கர்ம பலனினுலேற்படுகிறதென்பதை நாம் இனி ஆராய்வோம். அவ்வித ஆராய்ச்சியினுல் மக்களுக்கு முன்பிறவி நினைவுகள் ஏன் ஏற்படுகிறதில்லை என்பது தெளிவாகும்.

# 4. கர்மம் — வினையும் பயனும்

சிலர், ஏன் பிறக்கும்போதே செல்வத்திலும், மற்றும் சிலர் ஏன் பிறக்கும்போதே வறுமையிலும் பிறந்திருக்கிறார்களென்பதும், நற்பண்புகள் வாய்ந்த எளியவர்கள் உதவி கிடைக்காமல் துன்பத்திலுழலும் போது, பணக்காரர்களாகிய சிலர், தங்கள் பணத்தையெல்லாம், மற்றவர்களைச் சீர்கெடுக்கவும், பழிக்கவுமே ஏன் பயன்படுத்துகிறார்கள் என்பதும், சிலர் பிறந்தது முதல் பெருந்தன்மையோடு நடப்பதும், சிலர் பிறந்தது முதல் மிருகக்குணத்துடன் பெருங்குற்றங்களையே செய்து கொண்டிருப்பதும், சிலருக்கு வாழ்க்கை பூங்காவனமாயிருப்பதும், மற்றும் சிலருக்கு வாழ்க்கையில் தோல்வியும், துன்பமும், நெஞ்சுகுமுறலும், மனக்கசப்புமே யேற்பட்டுக் கொண்டிருப்பதும், சிலர் நூறு வயது வரையிருக்கவும், சிலர் பிறந்தவுடன் சாகவும், இன்னும் இதுபோன்றவைகளையும் தெரியவேண்டுமானால் கர்மம் என்பதை நன்கறிந்தால்த்தான் முடியும்.

கர்மம் என்பது வினையும் பயனும் என்னும் நீதியின் சரியான முடிவே. ''தினை விதைத்தவன் தினையறுப்பான், வினை விதைத்தவன் வினையறுப்பான்'' என்பது பழமொழி. மனிதன் இப்பிறவியிலோ அல்லது முற்பிறவியிலோ செய்த வினைக்குத் தகுந்த பயனை அனுபவிப்பதுதான் கர்மம். விதி என்பது வேறு, கர்மம் என்பது வேறு. விதி என்பது ஓர் தெய்வத்தாலுண்டாக்கப்பட்டது என்று நம்ப இடமுண்டு. ஆனால் கர்மம் என்பது, மனிதன் தனது செயல்களினால், தனக்குத் தானே வகுத்துக்கொண்ட விதியேயாகும். கர்மம் என்னும் வார்த்தை ஒருமையிலும் பன்மையிலும் உபயோகப் படுத்தலாம். ஒருவனின் தனிச் செய்கையால் உண்டானதற்கும், பல செய்கைகளால் உண்டானதற்கும், கர்மம் என்ற ஒரே வார்த்தையையே உபயோகிக்கலாம். கூனல் முதுகுடன் பிறப்பது ஓர் மனிதனின் கர்மம் என்று நாம் சொல்லும்போது, அந்த மனிதன் முற்பிறப்புகளில்ச் செய்த பல கடுங் கர்மங்களின் விளைவுதான் அவன் கூனல் முதுகிற்குக் காரணம்

என்பதைக் குறிக்கும். அதேபோல், ஒருவன் மூடத்தனமாகக் கையை நெருப்பின்மீது வைத்துப் பொசுக்கிக்கொண்டால், கையைப் பொசுக்க வேண்டிய கர்மம், அவனுக்கு ஏற்பட்டு விட்டது என்று வேடிக்கையாகச் சொல்லும்போது, அச்செயல், இப்பிறவியில் அவன் செய்த தனிச் செயலைக் குறிக்கும்.

கர்மத்தைச் செலுத்தும் சட்டம், ஆணை செலுத்துவதில்லை. நம் மனம்போன போக்கில் நடப்பதற்கு இடம்கொடுக்கிறது. ஆனால் இன்னின்ன காரியம் செய்தால் இன்னின்ன பயன் தவிர்க்க முடியாதபடி ஏற்படுமென்பதைத்தான் காட்டுகிறது. ஆகையால் நாம் என்ன சூழ்நிலையை உண்டாக்கிக்கொள்கிறோமோ, அதற்குத் தகுந்த, தவிர்க்கமுடியாத பலனை ஏற்றுக் கொள்ள வேண்டியதுதான். நாம் எப்படி வேண்டுமானாலும் நடக்க நமக்கு முழு உரிமை (பரிபூரண சுதந்திரம்) உண்டு. ஆனால் அதனாலேற்படும் விளைவிற்குக் கட்டுப்பாடு உண்டு. அதைத் தவிர்க்க முடியாது. ஆகையால் கர்மம் முறைப்படி அமைந்துள்ள சட்டத்தைச் செலுத்துகிறதே யொழியத் தண்டிக்கக்கூடிய சட்டமல்ல. நெருப்பின்மீது கையைவைத்தவனின் விரலைச் சுடவேண்டுமென்றோ, அல்லது அவனைத் தண்டிக்க வேண்டுமென்றோ நெருப்பிற்கு எண்ணம் கிடையாது. நெருப்பின் இயல்பே பொசுக்குவதுதான். அது மனிதனின் மூடத்தனத்திற்காகத் தனது இயல்பை மாற்றிக்கொள்ளாது.

தன்னைக் கோபமூட்டுகிற எதிரிகளை நாசம் செய்யவோ, அல்லது தண்டிக்கவோ, ஓர் தனிக்கடவுள் கிடையாது என்பது மறை ஞானத்தின் கொள்கை. இதில், தண்டனை ஏற்படுகிறதென்றால், அது மனிதன் இயற்கைச் சட்டத்தை மீறியதால், தனக்குத் தானே தண்டனை செய்துகொள்வதுதான். அச் சட்டம் இவன் இஷ்டத்திற்குத் தகுந்தபடி வளைந்து கொடுக்காது. நுட்பமான சக்திகளால்க் கர்ம சட்டம் நடத்தப் படுவதால் மனிதன் அதன் விளைவைத்தான் உணரமுடியுமே யொழிய, அது எப்படி நடத்துகிறதென்பதையறிய முடியாது. அச்சட்டம் நலஞ்செய்து சரிப்படுத்தும் சட்டம். நிகழ்ச்சிகளில்ச் சமநிலை உண்டாக்கவே அது வேலை செய்கிறது. ஆவி

உடலோடு மற்ற உடல்கள் எல்லாவற்றிலும் அது வேலைசெய்கிறது. செயலும் பயனும் ஸ்தூல உடலுக்கன்றி (காணும் உடல்) வேறெதற்குமில்லையெனும் லோகாயுத வாதிகளின் (Materialist) கொள்கையை, மறை ஞானிகள் விவகாரப் பொருத்தமில்லாததுவெனக் கருதுகிறுர்கள்.

மறைஞான தத்துவத்தின்படி ஒவ்வொரு தீவிரமான உணர்ச்சியும், ஒவ்வொரு தீவிரமான ஆசையும், ஒவ்வொரு சக்திவாய்ந்த எண்ணமும், அததற்குறிய விளைவை உண்டாக்குகிறது எனத் தெரியவருகிறது. அவைகள் கண்ணுக்குத் தெரியாததினுல், அவைகள் பலமற்றவைகள் என்பதல்ல. இவ்விதமிருப்பதால், கர்மங்கள் நல்லது கெட்டது என இரு வகைப்படும். (நல்வினை - தீவினை) நற்கருமமா அல்லது தீய கருமமாவென நிச்சயிப்பது, இயற்றுபவனின் செயல்கள், உணர்ச்சிகள், ஆசைகள், எண்ணங்கள் முதலியவற்றின் தன்மையைப் பொறுத்தது.

நமது புராண இதிகாசங்களில் நற்செயல்கள் செய்தவர்கடைந்த பயனை அடிக்கடி குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது ஓர் வகையில் கர்மசித்தாந்தத்தை விளக்குவதுதான். மேலும் பிரயோஜனம் கருதாமல் எவ்வளவிற்கெவ்வளவு நல்வினை செய்கிறுேமோ, அவ்வளவிற்கவ்வளவு சன்மானம் (பரிசு) நற்கருமவடிவாய் நமக்குக் கிடைக்கும். அப்பொழுது நல்வினை செய்ததாலுண்டான நற்கருமப் பயனுடன், அவ்விதம் நம்மைச் செய்யும்படி தூண்டிய தன்னலமற்ற எண்ணம், உணர்ச்சி முதலியவைகளின் பயனும், அத்துடன் நமக்குச் சேரும். இதை கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர், அழகுபடத் தன் வாக்கால் சுருக்கமாய்ப் பின்வருமாறு கூறுகிறுர்.

*''தேறியமனத்தான் செய்த நல்வினைப் பயன்களெல்லாம்*
*மாறிய பிறப்பிற்றேடி வருவபோல்''*

தெளிந்த மனதுடையவன் செய்த நல்வினையாலேற்பட்ட பயன்களெல்லாம், மறுபிறப்பில் அவன் எங்கே யிருக்கிறுன் என்று தேடிக்கொண்டுபோய் அவனையடையுமாம். இதனுல்

நாம் அறிவதென்னவென்ருல், மனிதனின் ஓர் பிறவியிலுண் டான கூட்டுக்கர்மங்களெல்லாம், அவனுடைய நல்வினை தீவினைகளைத்தவிர வேறல்ல. அது அவனுடைய எண்ணங்கள் உணர்ச்சிகள், ஆசைகளிலுண்டான பயனுங்கூட கைகால்களை அசைக்கக்கூட முடியாத ஓர் முடவன் கூட, நல்வினை தீவினை களைச் செய்யக்கூடும். அந்த முடவன், தன்னைச் சூழ்ந்தவர் களிடம் அன்பான எண்ணங் கொண்டும், தன்னைப் பாது காப்பவர்களிடம் விசுவாசம் கொண்டும், தன் நிலைமையில் பொறுமையையும், கர்மத்தை நோகாமலுமிருந்தால், அவனும் நல்வினை இயற்றுகின்ருன் என்பதில்ச் சந்தேகமில்லை. ஆனுல், இதற்கு மாருக அவன், ஓயாமல்த் தனது விதியை நொந்து கொண்டும், தன்னைச் சுற்றியிருப்பவர்கள் மனவருத்தப்படும் படியாகவும் நடப்பானுகில் அவன் தீவினை இயற்றியவனே யாவான். அதிர்ஷ்டவசமாக, மக்களில்ப் பெரும்பாலோர் இம் மாதிரிக் கடும் கர்மங்கள் செய்து, மறுபிறவியில் முடவனுகப் பிறக்கும்படி நேரிடவில்லை. மக்களைப் பார்க்கும்போதே இது நமக்கு விளங்குகிறது. பெரும்பாலோர் கர்மங்கள், துடர்ந்து நல்லதாகவும், துடர்ந்து கெட்டதாகவுமில்லை. அவரவர்கள் பிறப்பு ஏணியில் முன்னேறிய அளவில் கர்மம் நிற்கிறது. சில விதமான கர்மங்களைப்பற்றி நாம் கவனிக்கவேண்டியதவசியம். ஏனெனில் கர்மம் என்பது பெரும்பாலும் வாங்கிய கடனைத் திருப்பியடைப்பதுவே. ஆனுல் எல்லாக் கர்மங்களும் அவ்வித மல்ல.

அன்பே கடவுள் என நம்புபவர்களின் மூளையில் நாம் மேற் சொன்ன முடவனின் கர்மம், குழப்பத்தை உண்டுபண்ணும். எல்லோரையும் அன்பாய் நடத்தும் கடவுள், முடவனிடம் ஏன் அன்பு காட்டக்கூடாதென அவர்களுக்குத் தோன்றும். ஆனுல் மறுபிறவிக் கொள்கையை ஒப்புக்கொள்கிறவர்களுக்கு, முடவ னின் நிலைமை இரக்கத்தையுண்டுபண்ணுமே தவிற, மூளையில் குழப்பத்தை உண்டுபண்ணுது. முடவன் நிலைமை, அவன் வேண்டுமென்று துடர்ந்து நடத்திய கொடூர கர்மத்தாலுண் டானது. இந்தப் பழிச்செயலானது, மிருகத்தனத்தோடு ஒட்டியதால் அது, 'அவன் (முடவன்) தனக்குத்தானே,

தவிர்க்கமுடியாததான கடுந் தண்டனையை ஏற்படுத்திக் கொள்ளும்படி செய்துவிட்டது.

கொடுமைகளின் தரமும் பலவகைப்பட்டதால், அதனு லேற்பட்ட கர்மமும், காலத்திலும் கடுமையிலும், அதற்குத் தகுந்தவாறு அமையும். கைகால்கள் சுருண்டு வளைந்து, ஒன்றிற்குமுதவாதபடி திருகிப்போயிருப்பது, ***(disseminated Sclerosis)*** ஓர் விதக் கொடுமையினாலுண்டான கர்மம். கூனல் முதுகும் அப்படித்தான்.

மதங்களைக் கறைப்படுத்தியதும், பயங்கரமானதுமான, மதாச்சாரியர்கள் செய்த கொடிய கர்மங்களைப் பற்றி, எவ்வளவு வேண்டுமானாலும் சொல்லலாம். ஆனால் அதைச் சுருக்கமாய்ச் சொல்லிவிடுகிறோம். ஸ்பெயின் தேசத்தார் மதத்தின் பேரால் மக்களை சித்திரவதைசெய்த ''இன்கியுசிசனும்'' (Inquisition) நம் தேசத்தில் வடநாட்டில் நடந்துவந்த நரபலியும், தமிழகத் தில் சைவத்தின் பெயரால்ச் சமணர்களைக் கழுவேற்றியதும், மதத்தின் பெயரால் நடந்த மிகக்கொடிய கொலைபாதகங்கள். ஸ்பெயின் தேசத்துக் கொடிய பாதகத்தை (Inquisition) செய்த சில மதக்குருக்கள், சமீபகாலத்தில் மறுபிறவி எடுத்து, தங்கள் கருமத்திற்கேற்ற தண்டனையை அனுபவித்தார்கள். அவர்களில்ச் சிலர், நோய்களிலெல்லாம் மிகக் கொடியதான புற்று நோயால் (Cancer) இறந்தார்கள். சிலர் தங்கள் நோய்க் காக ''எக்ஸ்ரே''யினால் (X-Ray) பொசுக்கப்பட்ட புண்கள் ஆறாமல், அதன் காரணமாக இறந்தார்கள். மற்றுஞ் சிலர், அறி வற்ற வைத்தியர்களின் யோசனையால், பிரயோசனமில்லாத ரணசிகிச்சைக்குள்ளாகி, அதன் விளைவாய் நெடுநாள்த் துன்பப் பட்டு இறந்தார்கள். இதே போலத்தான், நரபலிசெய்தவர் களும், சமணரைக் கழுவேற்றியவர்களும் அனுபவித்திருப் பார்கள் என்பதில் சிறிதும் சந்தேகம் வேண்டாம். இதில்க் குறிப்பிடக்கூடிய விஷயமென்னவென்றால், இக்கதிக்குள் ளானவர்களில் பலர், மதப்பற்றுடையவர்களாகவே காணப்பட் டார்கள். அந்த மதப்பற்று இப்போது தீவிரமான வைதீகக் கொள்கை கொண்டதல்ல.

வைத்தியர்களால்க் குணப்படுத்த முடியாத வியாதியென்ற புற்று (Cancer) நோயைப்பற்றி கர்மம், மறுபிறவித்தத்துவங்கள் (Doctrines) விளக்கம் காட்டுகிறது. புற்று நோய் கொடிய கர்மத்தின் பயன் என்பது தெளிவானது. கர்ம சட்டத்தின்படி நாம் இப்பிறப்பிற்படும் இம்சையெல்லாம், முற்பிறவியில் நாம் மற்றவர்களின் மேல்ச் செலுத்தியதுதான். புற்றுநோய் இப்போது உலகத்தில் அதிகமாய்ப் பரவிவருகிறதென்னும் உண்மை, இந்த வாதத்திற்கு பொருந்தாததல்ல, பின் என்னவென்ருல், இக்கர்மத்தால்ப் பீடிக்கப்பட்ட பலர், இக்கர்மத்தைத் தீர்க்கவேண்டிப் பிறந்திருக்கிருர்கள் என்று அறிந்துகொள்ளவேண்டும். மறைஞானதத்துவத்தின்படி (Occult stand point) ஆன்மவளர்ச்சியும் முற்பிறப்பின் கடனும் மிகநெருங்கிய உறவு கொண்டது. வியாபாரத்தில் ஓர் மனிதனுக்குக் கடன் ஏற்பட்டால் எவ்வளவு இடையூறு உண்டாக்குமோ அதேபோலத்தான் ஆத்மீகத் துறையிலும்.

சிலருக்குத் தவிர மற்றவர்களுக்கு முன்பிறவி நினைவு, ஏன் அனுமதிக்கப்படுவதில்லை யென்பதின் முக்கிய காரணம், இப்போது குறிப்பிடவேண்டியிருக்கிறது. முற்பிறப்பில் ஒருவன் கோரமான குற்றங்களைச் செய்தும், தனது எதிரிகளைக் கொலை செய்துமிருந்தானுனல், இப்பிறவியில் அதன் பயனுய், அவன் பிறரால்க் கொல்லப்பட்டோ, அல்லது பயங்கரமான சாவுக்குள்ளாகவோ நேரிடும் என்ற விரும்பத்தகாத எண்ணம், சதா அவன் உள்ளத்தில்க் குடிகொண்டு விடுமல்லவா? கர்மசட்டம் தெரியாதிருந்தாலொழிய, அந்த நினைப்பு அவனை ஓயாது துன்புறுத்திக்கொண்டேயிருக்கும். அவன் புத்திசுவாதீனமில்லாதவனுக யிருந்தாலொழிய இது தவிர்க்கமுடியாது. ஒவ்வொருபிறவியிலும் துடர்ச்சியாக நடந்ததை அவன் ஞாபகத்தோடு பார்க்கும்போது, அவனுக்குக் கர்மசட்டம் தெரிந்துபோகும். அதற்காகத்தான் அவனுக்கு அந்த நினைவு விலக்கப்பட்டிருக்கிறது.

மனிதன் முழு ஞாபகத்தோடு கர்மசட்ட நடைமுறையை (அமுல்) உணரவேண்டியது விரும்பத் தகாதபோதிலும், கர்ம

சட்டம் என்பது ஒன்று உண்டு என்பதை, அறிந்திருக்க வேண்டியதவசியம். ஆகையால்த்தான் கர்ம சித்தாந்தத்தைப் பற்றி பெரியவர்கள் பல இடங்களில், எல்லோரும் அறியும்படி சொல்லியிருக்கிறுர்கள். மிக்க கெட்ட கர்மத்தால், ஆன்ம வளர்ச்சி தடைபட்டு விடுமென்பதை, மக்கள் உணர்வார்களானுல், அதை விட்டு நல்வினே செய்தால் பயனுண்டு என்பதை, ஆழ்ந்து கருதுவார்கள். தனது அழகைக்கொண்டு மற்றவர்களுக்குக் கெடுதியே உண்டுபண்ணும் ஓர் அழகி, இவ்விதம் செய்வதால், இனி வரும் பிறவியில், தான் அவலக்ஷணமாய்ப் பிறக்க நேரிடும் என்பதை உணரக் கூடுமாயின், அது அவள் தந்திர நடவடிக்கைகளேவிட்டு புத்திசாலித்தனமாக நடப்பதற்குத் தூண்டும். அதிகாரமமதையால் மற்றவர்களே மடக்கி வைத்துக்கொண்டிருக்கும் பெரிய பதவி வகிப்பவர்கள், அந்த ஆசையுடன் மறு பிறப்பில் பிறந்து மற்றவர்களால்த் தாங்கள் மடக்கப்படவேண்டி வருமென்பதை உணர்வார்களானுல், அது அவர்கள் செய்கையைத் தடுக்கும். அநேகமாய்த் தற்கால அரசியல்வாதிகளின் கதி இதுவேதான். இந்த உதாரணங்களால், இன்ன வினேயினுல் இப்பயன் ஏற்படுமென்பது நீங்கள் நன்ருய் உணரக்கூடும். கர்மம் என்ன மாதிரிச் செய்யும் என்பதற்காக இது உதாரணமாகச் சொன்னுேம். ஆனுல் உண்மையில் கர்மம் திட்டமாகயின்னபடிதான் செய்யுமென்பதை நம்மால் வரையறுத்துச் சொல்ல முடியாது. ஏனெனில் கர்மம் என்பது, எளிதில்ப் புரியக் கூடாததும், சிக்கல் நிறைந்துள்ளதும், ஒன்றிற்கொன்று மாறுபாடுடையதுமான சட்டமாயிருப்பதால், குறுகிய அறிவுடைய மனிதன் மனதால், அதை பற்றி ஏறக்குறையக் கூடச் சொல்ல முடியாது.

இதுவரை நாம் கெட்ட கர்மத்தின் தன்மைகளேயே சொல்லி வந்தோம். இனி நல்ல கர்மம், நல்லதும் கெட்டதும் கலந்த கர்மத்தின் தன்மையை விளக்குவோம்.

சிலர் பிறக்கும்போதே அளவிற்கு மீறிய அறிவாளிகளாகப் பிறக்கிறுர்கள் (Born genius). கர்மமும் மறு பிறப்பையும்

பற்றிக் குறிப்பிடக் கூடிய உதாரணம் இதைவிட வேறொன்று மில்லை. அதாவது சிலர் சிறு வயதிலேயே கணக்கில் மேதாவி களாயும், சிலர் சொல் நயம் பொருள் நயம் கூடிட கவி பாடும் திறமையுடையவர்களாகியும், சிலர் மேலான சங்கீத வித்துவான் களாகியும், பிறந்திருப்பதை நாம் காண்கிறோம். இத் தகையவர்கள் ஜென்ம ஜென்மங்களாகப் பாடுபட்டு முற்றி யவர்கள். இந்த மேதாவித் தன்மையை அவர்கள் இளமை யிலோ அல்லது முதுமையிலோ அடைந்ததைப் பற்றி நாம் கவனிக்க வேண்டியதில்லை. இத் தன்மை ஓர் குறிப்பிட்ட நோக்கத்தில், நீண்ட நாள் பாடுபட்ட கர்ம பலன்தான். இவ்வளவிருந்தும், இம் மேதாவிகள் உலக வாழ்க்கையில் மகிழ்ச்சி யுள்ளவர்களாகவோ அல்லது, வெற்றியுடையவர் களாகவோ காணப்படுவதில்லை. இதற்கு மாறாக அவர்கள், அவர்களைப் பார்க்கிலும் குறைந்தவர்களின் பொறாமைக்கும், பழிக்குமுள்ளாய், வறுமையிலும், சில சமயங்களில் பட்டினி கிடந்தும் காலந்தள்ள வேண்டி வருகிறது. நம் நாட்டில் பெரும் புலவர்களின் வறுமை சரித்திரம் பிரசித்திபெற்றது.

மேதாவிகளாகயிருப்பதற்கு கடவுள் கொடுத்த தண்டனை தான் இது என்று விஷயம் தெரியாதவர்கள் இவர்களைப் பற்றிச் சொல்கிறார்கள் மறைஞானம் "ஒரே நோக்கத்துடன் மட்டும் பாடுபட்டதின் பலன்தான் இது" என்று சொல்லுகிறது. மறைஞானக் கருத்துத்தான் சரி மேதாவித்தன்மை யெய்து வதற்கு மிகுந்த ஆர்வமும், மிகுந்த மன ஓர்மையும் வேண்டி யிருக்கும் மிகுந்த ஆர்வமுடையவர்கள், வெறிகொண்டவர்கள் போல, மற்றவர்கள் எக்கேடு கெட்டாலும்சரி, தங்கள் காரியம் தான் நடக்கவேண்டும் என்ற தன்னலமுடையவர்களாகி, உறவினர்களையும் நண்பர்களையும் புறக்கணித்து விடுவார்கள். இக்காரணத்தால் மேதாவிகளின் கர்மம் நல்லதும் கெட்டதும் கலந்ததாக யிருக்கிறது. அவர்கள் நற்கர்மம் செய்யும்போதே அத்துடன் கெட்டகர்மமும் செய்வதால் அதன் பயனை அவர்கள் அனுபவிக்கத்தான் வேண்டும். அவர்கள் நினைத்தால், இக் கெட்ட கர்மத்தையும் நல்லதாக்கிக் கொள்ளலாம். தங்க ளுக் கேற்படுகிற துன்பங்களையும், ஏமாற்றங்களையும், தங்கள்

மேதாவித்தன்மையால் குறைகூருமல் மறந்து நின்ருல் அது அவர்களுக்கு அனுகூலம் செய்யும். இத்தன்மையை அநேக மேதாவிகள் அடையவில்லையென்பது அவர்கள் ஜீவிய சரித்திரம் எழுதியவர்களால்த் தெரிய வருகிறது.

பாமர மக்களை மேம்படச் செய்வதிலும், அறிவூட்டுவதிலும் மகிழ்ச்சியுண்டாக்குவதிலும், போதுமான தன்மை மேதாவிகளுக்கு அமைந்திருக்கிறது. இவ்வண்ணம் அவர்கள் மற்றவர்களை மகிழச் செய்வதுடன், தாங்களும் தன்னலமில்லாமல் மக்களுக்கு உழைக்க வேண்டுமென விரும்புவார்களாகில், அவர்களின் நிலை இதைவிட அதிக மேன்மையாகயிருக்கும். இந்தவித மேதாவிகளின் போதனையைக் கவனிக்காததுடன், இம்மேதாவிகளைப் பழித்துக்கூறவும் மக்கள் ஆரம்பித்தால், அந்த நாட்டிலுள்ள மக்கள் எல்லோருக்குமே, கெட்ட கர்மம் ஏற்பட்டு, அந்த நாட்டிற்கே நன்மதிப்பும் புகழும் தேய்ந்து விடும். ஓர் பெரும் புலவர் ஓர் நாட்டில் அவதரிக்கிருர் என்று வைத்துக்கொள்வோம், அவரை அந்நாட்டுமக்கள் புறக்கணித்துவிட்டால், அதன்பயன், அப்புலவர் மறுபிறப்பில் அந்த நாட்டில் பிறவியெடுப்பதில்லை. வேறு நாட்டில்த்தான் அவதரிப்பார். இக்கெட்ட கர்மம் நம தமிழ்நாட்டை மிகவும் பிடித்திருக்கிறது. நமது அரியபெரிய தமிழ்ப் புலவர்களையெல்லாம், ''கல்லையும் மண்ணையும் காச்சிக் குடிக்கும்படி'' செய்துவிட்டு, தெம்மாங்குப் பாட்டுப்பாடும் புலவர்களுக்கு கோவில் கட்டுகிருர்கள். அதன் கர்மபலன்தான் இன்றைக்குத் தமிழ்நாட்டில், நூற்றுக்கு எண்பதுபேர்கள் தங்கள் பெயரைக் கூடத் தமிழில்ச் சரியாக எழுதத் தெரியாதவர்களாக இருக்கிருர்கள். பெரும் புலவர்களையோ, அல்லது மிகுந்த திறமைசாலிகளையோ, ஆதரித்து அன்பு பாராட்டிய நாடுகள், அவ்வக் கலைகளில் பெருமையடைந்திருக்கிறதை, இன்றும் கண்கூடாகப் பார்க்கிரேம். உதாரணமாகச் சித்திரக்கலையைப் பெரிதும் பாராட்டி அக்கலை நிபுணர்களுக்கு வேண்டும் ஆதரவு அநேக தலைமுறைகளாய் உதவிய ''இட்டாலி'' (*Italy*) தேசம் இன்றும் அக்கலையில் மேலோங்கியிருப்பதோடு, பெருமையடையக்கூடிய பெரிய படக்காட்சி சாலையும் அங்கு அமையப்

பெற்றிருக்கிறது. ஒவ்வொரு தேசத்திற்கும் அதன் தகுதிக் கேற்றபடி கலைவாணர்கள் ஒதுக்கப்பட்டிருக்கிறார்கள்.

இதனால், தனிப்பட்ட மனிதனைப் போலவே, ஓர் தேச மக்கள் முழுவதும் கூட கூட்டுக்கர்மம் செய்கிறார்கள் என்பது தெரியலாம். சில வேளைகளில் ஓர் நாட்டு மக்கள் செய்யும் கூட்டுக்கர்மம் அதிகக் கொடியதாகவுமிருக்கலாம். உதாரண மாக ஜெர்மானியர்கள் உலகம் முழுவதையும் அடக்கியாள வேண்டும் என்ற எண்ணங் கொண்டு அவர்கள் செய்த கர்ம பலனை அவர்கள் எல்லோரும் இப்போது அனுபவிக்கிறார்கள். நாடுபிடிக்கவேண்டுமென்ற கொள்கை *(Aggrandizement)* கொண்ட நாடுகள் சாய்ந்துபோனதைச் சரித்திரம் காட்டுகிறது. இதிலும் தனிப்பட்ட மனிதனைப் பொறுத்தமட்டில் அநீதி யொன்றும் அவனுக்குண்டானதில்லை. மனிதன் அவனவன் கர்மத்திற்கேற்றபடி, அவனுக்குப் பொருந்தக்கூடிய நாடுகளில் அவனவன் பிறக்கிறான். இதற்கு விலக்காக ஓர் இனத்தார் செய்யும் கர்மத்திலவன் ஈடுபட்டால் (அதாவது போர் முதலிய வைகளில்) அந்தக் கர்மத்திற்குறிய பயனையும் அவன் சேர்த்து அனுபவிக்க வேண்டியதுதான். பத்தொன்பதாம் நூற்றாண் டின் பிற்பகுதியில் மேல்நாட்டில் பிறந்தமக்கள் பெரும்பாலோர் இக்கர்மத்திற்குள்ளானார்கள் (போரில் இறந்தார்கள்) சமீபத் தில் இரு உலகமகா யுத்தம் நடந்ததே (World War I & II) அதன் கர்மத்தை ஆராய்வோம். இந்த அளவில்ப் பெருங் கேடு உண்டானதிற்கும், கர்மத்திற்கும் பொருத்தம் என்னவென்பது தெரியவேண்டியதவசியம்.

கடத்த உலக மகா யுத்தங்களிரண்டும் மக்கள் கூட்டாகச் செய்த தீச்செயல்களின் கர்ம பலன்தான். ஆனால் அது ஓரள விற்கு நன்மையும் செய்தது. அதாவது தனிப்பட்ட மனிதன் தனது கெட்ட கர்மக் கடன்களை ஒரேயடியில் ஒளிக்கும்படி உதவி செய்தது. பயங்கரமான துன்பங்களை மனதாரச் சகித்துக்கொண்டதால், அநேக பிறவிகளிலேற்பட்ட கெட்ட கர்மங்கள், இரண்டொரு வருடங்களில் நீக்கும்படியாயிற்று. சண்டையில் உயிரிழந்தவர்களில் அநேகர், அவர்கள் வீரச்

செயலாலும், சகிப்புத் தன்மையாலும், நற்கருமம் நிறையச் சம்பாதித்து, மறுபிறப்பு எடுக்கும்படி நேரிட்டது. மேலேக்கு அவர்களின் ஆன்மா வளர்ச்சி அதிகம் முன்னேறக்கூடிய நிலமையிலிருக்கிறது. ஆனல் அவர்கள் இனிக் கெட்ட கர்மம் செய்யமாட்டார்கள் என்பதற்கு உத்திரவாதம் செய்யமுடியாது. ஆனல் ஒன்று மட்டும் மறந்துவிடக்கூடாது. ஆன்ம வளர்ச்சி யடையயடைய அதன் சுபாவம் நல்வினையை நோக்குமே தவிர தீவினையை நோக்காது.

முதலாவது மகாயுத்தத்தில் (World War I) போரில் நேரடியாய் ஈடுபட்டவர்கள் தங்கள் கெட்ட கர்மத்தின் பெரும் பகுதியையொழித்து நல்ல கர்மம் அதிகம் தேடிக்கொண்டார் கள். இதற்கு விதிவிலக்காகச் சிலர் இருந்தால் அது அவர் களின் வேறு கர்மத்தைப் பொறுத்தது. ஆனல் யுத்தம் நேரிட்டதைத் தங்களுக்குப் பொருள் திரட்ட நல்ல சமயமாகக் கருதினவர்களின் கர்மம் வேறுவிதமாயிற்று. இச்சமயத்தில் பணக்கொள்ளையடித்தவர்களின் கர்மம், அளவிற்கு மிஞ்சியதால் "புயலுக்குப்பின் அமைதி" என்ற பழமொழிக்கு மாருக, உலகத்தில் பண நெருக்கடி, வியாபார மந்தம் இன்னும் இவை போன்ற கெட்ட கர்மங்கள் பரவத்துடங்கியது. மக்கள் போர்க் காலத்தில் பேராசையில்ச் சுழலாமலும், போரிலீடுபட்ட இரு தரப்பாரும், போர் முடிந்ததும், ஒருவரையொருவர் மன்னித்து, போர்க் கடன்களைத் தள்ளிவிட்டிருந்தார்களானல், நிலைமை இப்போதிருப்பதைக் காட்டிலும் நன்ருக இருந்திருக்கும். இவ்வளவு நடந்திருந்தும் தனிப்பட்ட மனிதர்களில் சங்கடப் பட்டவர்கள் யார் என்று கவனித்தால், பணத்தால் கெட்ட கர்மத்தைச் சம்பாதித்து, அதை நிவர்த்திக்க வேண்டியவர் களேதான். கெட்டவழி வியாபாரப் போக்கினுலும், அபரிமித மான பணஆசை பிடித்ததினுலும், அளவிற்கு மிஞ்சிய வட்டி வாங்கி கொடுக்கல் வாங்கல் (லேவாதேவி) செய்ததினுலும், கஞ்சத் தனத்தினுலும், நியாயமற்று மற்றவர்களிடமிருந்து அபகரித்ததினுலும், கபட நடவடிக்கைகள் மேற்கொண்டதி னுலும் ஏற்பட்ட கர்மம்தான் இது. இதில் அதிகக் குற்றம்

செய்தவர்கள், பணத்தில் திடீரெனக் கீழிறங்கினுர்கள். மற்றவர்களுக்கு வாழ்க்கையில்ச் சில பயன்கள் கிடைக்காமற் போனதைத் தவிர வேறு விசேஷச் சங்கடம் எதுவும் நேரிடவில்லை.

இங்கேயும் கெட்ட கர்மம் நல்ல கர்மம் சம்பாதிப்பதற்கான ஓர் வாய்ப்பிற்கிடம் கொடுத்தது. "கிடைத்ததைக் கொண்டு மகிழ்ச்சியடைவோம்" என்னும் உண்மை நிலையை மக்கள் கடைப்பிடித்தால் தங்கள் பிறவி ஏற்றத்திற்குரிய குணங்களைத் தேடிக்கொண்டவர்கள் ஆவார்கள். இக்காலத்திலுங்கூடச் சிலர் தங்கள் பணம் முன்னிருந்ததைவிடக் குறைந்து போனதைக் கண்டும் (வருவாய் சுருங்கியதை) சற்றும் கவலையில்லாமலிருக்கிருர்கள். அவர்கள் தங்கள் பணப்பித்தையொழித்து, பணத்தை வணங்குவது, போலித் தெய்வத்தை வணங்குவது போல்த்தான் என்பதைக் கற்றுக்கொண்டார்கள். இந்த குணமாகிய நற்கர்மம், கெட்ட கர்மங்களைப் போக்கி, அவர்களைத் துன்பத்திலழுந்தாதபடி செய்துவிட்டது. முயற்சி இவ்விதம் மகிழ்சி தருகிற கர்மப் பயனையளிக்கக்கூடியதாக இருக்கிறது. "நம்மைத் துன்பப்படுத்துவது நடக்கும் காரியங்கள் அல்ல. அக்காரியங்களை நாம் எப்படி வரவேற்கிருேமோ அதைப் பொறுத்ததுதான் துன்பம்" என்று ஓர் புலவர் கூறுகிருர். இவ்விதம் சொல்வது "நல் நடத்தை சகல துன்பங்களையும் நீக்கு மருந்து" என்று சொல்வது போலாம். பொருமைக் குணமில்லாதவன், மற்றவர்களுக்குப் புகழ் ஏற்படும்போது தான் துன்புறுவதில்லை. அன்பில் சந்தேகமடையாதவன், மற்றவர்கள் அதிக அன்பிற்குள்ளாகும்போது, தான், துயரடைவதில்லை. இதேபோல் எவனொருவன் நன்னடத்தையை மேற்கொண்டொழுகுகிருனே அவன் தனது வாழ்க்கைத் துன்பங்களிலிருந்து விடுபடுவதற்கு வழி உண்டாக்கிக் கொள்கிருன். மேலும் என்ன விசேஷம் என்ருல் தீவினைக்குள்ளாகும் அபாயத்திற்குள் அவன் சிக்குவதில்லை. அவன் சுபாவம் நன்மை உண்டாக்குவதிலேயே முழுதும் கருத்துடையதாகயிருக்கிறது.

தற்கால உலக நிலமையில் ஆன்ம பக்குவமடைந்தவர்கள் மிகவும் குறைவாகயிருக்கிருர்கள். படித்தவர்களைப் பார்க்கிலும் படியாதவர்கள் ஏன் மிகுதியாய் சக்தியுடையவர்களாயுமிருக்கிருர்கள் என்பதின் காரணம் இதில்த்தானிருக்கிறது. நற்பண்பும் அதைச் சார்ந்தவைகளும் ஓர் பிறவியிலடையக்கூடியதல்ல பல பிறவிகளின் சம்பாத்தியம். நல்வினையின் பயன் வாழ்க்கையில் நற்பண்பும், செழிப்பும் ஒருங்கே வாய்க்காது. தன்னலமற்ற தன்மையும், தர்ம சிந்தனையு மில்லாத காரணத்தால் செழிப்பு ஏற்படுவதில்லை, ஓர் காலத்தில் கல்வி ஏழைகளை வஞ்சித்துத் தான் அடையும்படி இருந்தது. அதன்பயன்தான் தற்காலம் நிலைமை தலைகீழாய் மாறி, படிப்பில்லாதவன் செழிப்பாயும் (பணமுடையவனுகவும்) படித்தவன் வறுமையிலும் உழலும்படி நேரிட்டிருக்கிறது. கல்வியானுலும் சரி, பணமானுலும் சரி, மற்றவர்களை துன்புறுத்தியோ, இடைஞ்சல்ப் பண்ணியோ பெற்ருல் தவிர்க்கமுடியாதபடி கெட்ட கர்மத்தைக் கொடுக்கும். இதற்கு மாருக, நல்ல நிலமையிலுள்ளவர்கள், தங்களைப் பார்க்கிலும் கீழ் நிலையிலுள்ளவர்களின், துன்பங்களைப் போக்க முயல்வார்களானுல் அவர்களுக்கு நல்ல கர்மம் விளையும். உண்மையுடன் மக்கள் பணியாற்றுபவர்கள், மலைபோல் நற்கர்மம் தேடிக்கொள்வார்கள். இப்பிறவியில் உழைப்பில்லாமலே செல்வம் நிரம்பியவர்கள், முற்பிறவியில் ஈகைக்குணம் படைத்தவர்களாகியும், பணத்தை நல்வழியில்ச் செலவழித்தவர்களும்தான். ஆனுல் செல்வத்துடன் மகிழ்ச்சியும் பொருந்தியிருக்குமாவென்பது மீண்டும் கர்மத்தைப் பொறுத்ததுதான். பெருஞ் செல்வத்திற்காசைப்படுவதை மறைஞானம் கண்டிக்கிறது. அதற்கொரு காரணம், பெருஞ் செல்வம் கிட்டும் பிறவியில், செல்வத்தின் மேலுள்ள ஆசை குறைந்துவிடும். அதனுல் அச்செல்வம் பிரயோசனமற்றதாய்விடும். தங்களுக்கு வேண்டாத (பிள்ளைகுட்டியில்லாத காரணத்தால்) பல வீடுகளையும் எல்லையற்ற நிலங்களையும் வைத்திருப்பவர்கள், தங்களுக்குத் தேவையில்லாதவைகளை வைத்துக்கொண்டு, பராமரிக்கக் கஷ்டப்படுவதைக் காண்கிருேம். விரும்பத்தகாத ஆசையின் பயன்தான் இது. மேலும், குடும்பப்பெருமையிலும், பழமையான வம்சக்கீர்த்தியிலும் ஆசை கொள்வதும் இதைச்

சேர்ந்ததுதான் ஓர் செல்வமுள்ள குடும்பத்தில்ப் பிறந்து மீண்டும் என்றென்றைக்கும் இக்குடும்பத்திலேயே பிறக்க வேண்டும் என்ற நினைவு கொள்பவர்களின் கர்மம், மறுபிறவியில் அதேகுடும்பத்தில்ச் செல்வமெல்லாம் போனபின் பிறக்கும்படி நேரிடும். இதனுல் ஏற்படும் இடையூறு என்னவென்றுல், ஒவ்வொரு பிறவியிலும் பிறவி முன்னேற்றம் தடைபட்டுப் போகும். பலவிதமான குடும்பங்களில் பிறக்கும்படி கர்மசட்டம் செய்வது பலவிதமான பாடங்கள் படிப்பதற்காகவே அதை விட்டுவிட்டு மீண்டும் மீண்டும் ஒரே குடும்பத்தில் பிறப்பதால் அவன் ஆன்மா சோம்பேரித்தனத்தையடைந்து விடும். இனப் பெருமையோ, அல்லது தேசப்பற்ருே அளவிற்கு மீறி கொள்வோருக்கும் இதே சங்கடம் நேரிடும். மற்ற தேசமக்களையெல்லாம் தங்களுக்குக் கீழாகக்கருதும், குறுகிய மனப்பான்மை கொண்ட நம்மவர்களில் பலர், மற்ற தேசவழக்கங்களை நம் தேச வழக்கங்களோடு ஒப்பிட்டு, ''நான் இப்புண்ணிய பூமியில்ப் பிறந்ததற்காகப் பெருமையடைகின்றேன்'' என்று சொல்லிக் கொண்டிருந்தால், தங்கள் குறுகிய புத்தியினுலேற்பட்ட கர்ம பலனையடைந்தே தீர்வார்கள். இக்கருமத்தைத் தமிழ் நாட்டில் சைவர்கள் என்பவர்கள்தான் அதிகம் செய்திருக்கிறுர்கள். சைவசமயத்திற்கு மேலானது உலகிலேயேயில்லை பென்னும் மதவெறியுடையவர்களாக யிருக்கிறுர்கள். சைவநூல்களில் எது சொல்லவில்லையோ அதை இவர்கள் ஒப்புக்கொள்கிறதில்லை. இன்னும் ''சிவஞான போதத்திலிது சொல்லவில்லை. ஆதலால் நான் அதை ஒப்புக்கொள்ளமாட்டேன்'' என்று சொல்பவர்கள் இருக்கிறுர்கள். இவ்விதம் இனப்பெருமையோ அல்லது மதப் பெருமையோ கொள்வது, தேசபக்தியுமல்ல, மதபக்தியுமல்ல இன இறுமாப்பு, மதஇறுமாப்பு என்றுதான் சொல்லவேண்டும் இனஇறுமாப்பு சகோதர தத்துவத்திற்கு (Brotherhood) நேர் எதிரிடையானது. சகோதரதத்துவம் உணர்ச்சி மெய்பாடு (Sentimental ideal) மட்டுமல்ல, உண்மையான இயற்கைச் சட்டமுங்கூட என்று மறைஞானம் போதிக்கிறது, இச்சட்டத்தை மீறுவதுதான் கடுந்துன்பமெல்லாம் உண்டாக்குவது. உலகத்தில் எல்லாப் பிராணிகளும் இயற்கையுடன் ஒத்துழைத்து வேலை செய்யும்போது, மனிதன் மட்டும் ஒத்துழையாது தன் மனம்

போன போக்கில் நடக்கிறான், அதனால் சமநிலை(Equilibrium) பெரிதும் பாதிக்கப்படுகிறது.

இச் சமயத்தில் ஓர் மறுப்பு ஏற்படலாம். அதாவது "மனிதன் எப்பவோ ஓர் பிறவியில்ச் செய்து, பின் செய்ததையே அடியோடு மறந்து நிற்கும்போது, அதற்காக அவன் துன்பப் படுவது நியாயமா?" என்று கேட்கலாம்.

இந்தக் கேள்வி, மனிதனையும் ஆன்மாவையும் பற்றிச் சரியாகத் தெரியாததினால் எழுந்ததேயொழிய வேறில்லை.

கர்ம சட்டம் நியாயமானது. அவரவர்கள் நல்வினை தீவினைகளால், அவரவர்களுக்குச் சேரவேண்டியவைகளை கணக்குப்படி கொடுக்கும். ஒருவரும் தனது முயற்சியால் எய்த முடியாத வெகுமதியை அனுபவிக்க முடியாது. மற்றொருவர் செலவில் இன்னொருவர் மேம்பாடடைய முடியாது.

கர்மம் குருட்டுச் சட்டமல்ல, சரியான கட்டளையில்லாமல் நடப்பதுமல்ல. கர்மத்தின் பல்வேறு வழிகளை ஒழுங்காய் நடத்தவும், மறுபிறப்புக்குரிய, நேரம், வகைமுறை, இடம் முதலியவைகளை நடத்தவேண்டியிருப்பதால், ஓர் பூரண அறிவு கர்மத்தின் பின்னிருந்து நடத்துகிறது. அப்படித்தானிருக்கவும் வேண்டும்.

## 5. ஆன்ம நினைவும் கர்மமும்

மக்களில்ப் பெரும்பாலோர்க்கு ஸ்தூல உடல் மூலம், (Physical Body) சுய நினைவில் ஓர் பகுதிதான் வெளிப்படு கிறது, என்பதை முதலில்த் தெரிந்துகொள்ள வேண்டியதவசி யம்; உடல் உறுப்புக்களின் உதவியில்லாமல், ஆன்மாவிற்குத் தன் நினைவு உண்டாய் (ஏற்பட்டு) அதில்க் கொஞ்ச நினைவை நம் உடலுக்குப் பிறவியில்க் கொடுக்கிறது.

நமது ஞாபகசக்தி எப்போதும் பூரணமானதல்ல வென்பது நமக்குத் தெரியும். சில வேளைகளில், நமது ஞாபகசக்தி தவறு தலாகவுமிருக்கிறது. ஆனல் ஆன்மாவின் ஞாபகசக்தி அப்படிப் பட்டதல்ல. ஆன்மா எத்தனை பிறவி எடுத்தபோதிலும், அந் தந்தப் பிறவியில் நடந்த சங்கதிகள் அனைத்தையும் அறியும் முழுஞாபகம் அதற்குண்டு. அச்சக்தி அதற்கெப்படி ஏற்பட்ட தென்பதை, நாம் இப்போதிருக்கிற நிலைமையில் (பக்குவத்தில்) அறிவது கஷ்டம். ஆனல் ஒன்றைமட்டும் இப்போது திரும்ப வும் அழுத்தமாய்ச் சொல்லவேண்டியிருக்கிறது. ஞாபகம் என் பது, மூளையின் உயிரணுக்களால் (Brain cells) உண்டாவது. ஒவ்வொரு பிறப்பிலும் புதிய புதிய மூளை உண்டாகும் போது, முந்தினதின் துடர்பு விட்டுப்போகிறது. ஆன்மாவிற்கு அப்படி யில்லாததினல் துடர்பு விடுகிறதில்லை.

மனிதனுக்கு ஸ்தூல உடலின் குறுகிய நினைவினல், முற் பிறப்பில் நடந்தவைகளை உணர முடியாது. அதன் விளைவினல் மட்டும் சங்கடப்பட நேரிட்ட போதிலும், உண்மை மனதாகிய ஆன்மா எல்லாம் அறியக்கூடும். ''அப்படியானல் அந்த ஆன்மா குறுகிய நினைவு கொண்ட மனிதன் மூளையில் ஏன் அந்த நினைவை உண்டாக்கி அவன் அறியும்படி செய்யக் கூடாது'' என்று கேட்கலாம். ஆன்மா நுண்ணிய சரக்குகளால் ஆகிய உறுப்பானதால், மனிதன் தன் மனதையும் நுண்ணிய தன்மையாக்கிக் கொண்டாலொழிய, அந்த எண்ணத்தை இவன் மூளையில் பதியவைக்கமுடியாது. ஆன்மா மனிதனை இன்னமாதிரிதான் நடக்க வேண்டும் என்று தூண்டத்தான்

செய்கிறது. மனச்சாட்சி என்னும் அதன் வார்த்தையால், முன் தவறுதலாய் நடந்ததை நீ திரும்பச் செய்வது மூடத்தனம் என்று எச்சரிக்கத்தான் செய்கிறது. ஆன்ம சக்தியின் இச் செய்கை, பண்படாமலும், சில சமயங்களில் மாறுபாடாகவும் போய் விடுகிறது. மனிதன் தனது மனத்திலும், உணர்ச்சியிலும், ஆன்மா பிரதிபலிக்கும்படி (கண்ணுடியில் தோற்றுவது போல்) செய்தபோதுதான், அவனுக்கு ஆன்மாவின் முழுஞாபகமும், ஆன்மாவின் அறிவு உண்டாகும் சக்தியும் ஏற்படும். இதுதான்மறைஞான பழக்கத்தின் விளக்ககாரணம்(raison d' etre). மிகத் தேவைபட்டதும் (desideratum) இதுவே.

மனது ஆன்மாவைப் பிரதிபலிக்கவேண்டும் என்று சொன்னேம். அதுகூட அவ்வளவு சரியான அர்த்தமில்லை. ''ஸ்தூல உடலும் ஆன்மாவும் வேறுபாடில்லாமல், இரண்டறக் கலந்து விடவேண்டும்.'' அவ்விதம் கலந்தால் (அந்த நிலையெய்திஞல்) நாம் ஸ்தூல உடலிலிருக்கும் போதே, ஆன்மாவின் மகிழ்ச்சியை (ஆத்மானந்தத்தை) இடைவிடாது அனுபவித்துக் கொண்டிருக்கலாம்.

ஆன்மா எப்போதும் மகிழ்ச்சி நிலையிலேயேதானிருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டியது முக்கியம். ஆன்மா அபூர்வமான நுண்ணிய வஸ்துக்களின் சேர்க்கையாலுண்டானதால், அது மகிழ்ச்சியில்லாமலிருக்க முடியாது. இயற்கையின் சட்டமும் அது அவ்விதம் இருக்க வேண்டியதுதான் என்பதும் கூட. எந்த உறுப்பு ஆவிரூப நிலையை நெருங்குகிறதோ, அது மகிழ்ச்சியைத்தான் அனுபவிக்கும். கனத்த சட்டைகளான பலவித உடலில் அமையும் போதுதான், துன்பமும் மாறுபாடுகளும் ஏற்படும். பிறவி முன்னேற்றத்திற்கு முயற்சிக்காத அநேக சோம்பலுள்ள ஆன்மாக்கள் இருப்பது உண்மைதான். இந்தச் சோம்பலால் அவைகள் துன்பப்படுகின்றன என்று நினைக்கக்கூடாது. அவைகள் சொப்பனசுகம் போல் ஓர் சுகத்தையனுபவித்துக் கொண்டுதானிருக்கிறது. எனினும் ''தெய்வீக அதிருப்தி'' (divine discontent) என்னும் நிலை அதற்கு ஏற்பட்டு, அந்தச் சோம்பல் ஆன்மாவை, பிறவிமுன்னேற்றத்திற்குரிய வழி தேடும்படி தூண்டுகிறது. இதனுல்த்தான்

ஆன்மா, மனிதன் உடல், மனம், உணர்ச்சி முதலியவைகளுக்கு தனது அறிவில்ச் சிறிது செலுத்தும்படி ஏற்படுகிறது. அதன் (ஆன்மாவின்) நோக்கம் அனுபவ வளர்ச்சியடைய வேண்டு மென்பதே. முன்னேற வேண்டுமென்ற ஆசையால்த் தூண்டப் பட்ட ஆன்மா, ஊழிகாலம் சொப்பன சுகத்தோடிருப்பதை விரும்பாமல், தனது அறிவின் ஓர் பாகத்தால், மனிதனின் உடல், மனம், உணர்ச்சி முதலியவைகளைக் கொண்டு, பரீக்ஷை செய்ய ஆரம்பிக்கிறது. எவ்வளவிற்கெவ்வளவு துணிச்சலுட னும் காரியத்தில் பலத்துடனும் பரீக்ஷை செய்கிறதோ அவ் வளவு அறிவும் தகுதியும் அதற்குண்டாகும். இவ்விதம் பரீக்ஷை செய்யும்போது தவறுதல் ஏற்படக்கூடும். நன்மை போலவே கெடுதியையும் உண்டாக்கக்கூடும். ஆனால் அதன் தனிச் சுபாவம் இன்பமேயாதலால், அது தன் தவறுதல்களையும், தோல்விகளையும் கண்டு கலங்குவதில்லை. வெற்றிகளைப் பார்க் கிலும், தோல்விகளினாலேயே, அடிக்கடி பெரும் பாடங்கள் கற்க வசதியுண்டென்பது அதற்குத் தெரியும்.

எப்படியிருந்தபோதிலும், ஓர் குறிப்பிட்ட ஆன்மா, விரை விலா அல்லது மெதுவாகவா முன்னேற்றமடைகிறதென்பது அவ்வான்மாவின் மனோ வலிமையையும், பொதுத் தகுதியை யும் பொறுத்தது. சாதாரணமாக ஆன்மா பாலப்பருவத்தி லிருந்தால், பருவத்திற்குத் தகுந்தபடி சோம்பலுடையதாக யிருக்கும். முதிர்ந்த ஆன்மா சுறுசுறுப்பாகயிருக்கும். இதன் காரணம் என்னவென்றால், எவ்வளவிற்கெவ்வளவு ஆன்மா பக்குவம் (முதிர்ச்சி) அடைந்திருக்கிறதோ, அவ்வளவிற்கு அதற்கு சக்தியும், அறிவும், அனுபோகமும் உண்டாகி, தனது உடலாகிய மனிதனிடத்து எண்ணங்களைப் பதிய வைக்கவும், அவனை அடக்கியாளவும், நல்ல வழிச் செலுத்தவும் முடியும். மனிதன் தவறுதலாக நடக்கும்போது, தனது (ஆத்மாவினது) உணர்ச்சியை அவனிடமிருந்து பின்வாங்கிக்கொள்ளாமல், அவனுடனேயேயிருந்து, அவனுக்கு தைரியத்தை உண்டாக்கி, சகிப்புத் தன்மையளித்து, விடாமுயற்சியையும் உண்டு பண்ணும். "சோதனைகளையும், கடுந்துயர்களையும், தெய்வீக அமைதியுடன் தாங்கிக்கொண்டிருப்பதுதான் பக்குவமடைந்த

பெரியோர்களிடம் நாம் கண்கூடாகக் காணும் தன்மை.'' அவர்கள் இத்தன்மை எப்படி எய்தினர்கள் என்றல், அவர்கள் ஆன்மாவானது, தனக்கு இயல்பாக அமைந்துள்ள மகிழ்ச்சியைக் கொண்டு, அவர்கள் மனதைப் பிரகாசிக்கும்படி செய்து (மனத் தெளிவு) அவர்களுக்கு இந்த அமைதியையுண்டுபண்ணு கிறது.

ஆன்மாவின் இன்ப நிலையைப்பற்றி இரண்டு விதமான வாதம் எழலாம். அவைகளைப்பற்றிச் சிறிது கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. முதலாவது, ஆன்மா எப்பொழுதும் இன்பகரமாகயிருப்பதற்கு நியாயமில்லை. ஏனெனின், ஓர் மனிதன் தனது ஏவலாள்களைத் துடர்ந்து உலகத்திலேற்படும் கஷ்ட நஷ்டங்களோடு போராடும்படிக்கும், அதனலேற்படும் துன்பங்களையெல்லாம் அவர்களே அனுபவிக்கும்படி செய்து விட்டு, தான் வீட்டிலேயே சுகமாயிருந்து, அவர்களுக்கு உத்தரவிட்டுக்கொண்டும், அதனலேற்படும் லாப நஷ்டங்களைக் கணக்குப் பார்த்துக்கொண்டும் இருப்பதுபோல் இருக்கிறது. இது நியாயமற்றது போலத் தோன்றுகிறது. ஆனல் இந்த வாதத்திற்கு மறுப்புமிருக்கிறது. ஆன்மா உயிரின் ஒரு பாகம் என்று வைத்துக்கொண்டாலும், உலகம் முழுவதும் உண்டாக்கியதற்கு ஓர் காரணஸ்தர் இருப்பதுபோல், ஆன்மாவைப் படைத்ததற்கும் ஒருவர் உண்டல்லவா? அது யார்? அதைக் கடவுள் என்றே, மற்றென்ன பெயர்கொண் டழைக்கிறேமோ அதுதான். ஆன்மா இன்பகரமாகயில்லா விட்டால், அக்கடவுள் நியாயமற்று கொடூரமாக நடத்துகிறர் என்று சொல்லக்கூடிய வாதம் பொருத்தம்தான். துன்பத்திற் கேதுவான ஒன்றைத் தோன்றச் செய்வது, அன்புருவாகிய கடவுள் செயல் அல்லதான். அப்படியானல் மனிதனுக்கு ஏற்படுகிற துன்பத்தின் காரணத்தை எப்படி விளக்குவது? முதலாவது நல்வினைத் தீவினைகளைச் செய்யும் முழு உரிமை (பரிபூரண சுதந்திரம்) மனிதனுக்கு அளித்திருப்பதால்த்தான். இரண்டாவதாக மனிதன் ஆன்மாவல்ல. மனிதன் ஆன்மாவின் கையில் ஓர் ஆயுதம் போன்றவன். இந்த ஆயுதத்திற்கே, முழு உரிமையளிக்கப்பட்டிருப்பதால், அது செய்யும் கருமத்திற்

கேற்றபடி அதன் விளைவுகளை அது அனுபவிக்க வேண்டியது தான்.

பக்குவமடையாத ஆன்மாக்களுங்கூட தனது ஆயுதமாகிய மனிதனின் மூடச் செய்கையை நல்லதாக்கக்கூடிய தன்மை யுடையதானாலும், அவன் தவறுதலாக நடப்பதை விரும்புகிற தில்லை. ஆன்மா பக்குவமடையாத காரணத்தால், போதுமான அளவிற்கு மனிதனை அடக்கியாளத் திறமையற்றிருக்கிறது. எவ்விதம் ஓர் சக்தியற்ற தகப்பன் தனது அடங்காப் பிள்ளையை அடக்க முடியாமலிருக்கிறானோ அதுபோலத்தான். அடங்காப் பிள்ளையின் தகப்பன்போல், இந்தப் பக்குவமடையாத ஆன்மாவும், தனது வாரீஸ் ஆகிய மனிதனை, நல்வழிப் படுத்தும் முயற்சியில் அலுத்துப்போய், அவன் சேட்டைகளும், தந்திரங்களும் பண்ணும்படி சிலகாலம் விட்டுவிட்டுத், தான் தனது உலகத்தில் சொப்பனசுகத்திலாழ்ந்து விடுகிறது. இதற்கு மாறாக, பக்குவமடைந்த ஆன்மா, தனது பொறுப்பைக் கழிக்காமல், மிகுந்த முயற்சி கொண்டு மனிதனை (தனது வாரீஸை) திருத்துகிறது.

பிறவியில் மிகவும் முன்னேறியுள்ள ஆன்மாக்கள் தான் மேலே சொன்னவிதமாய் மனிதனைக் கிட்டத்தட்ட பூரண நிலைக் குச்சரிக்கட்ட முடியும். ஆன்மாவின் நுண்ணிய தன்மையறிய, ஜென்ம ஜென்மங்களாக எடுத்த உடல்களைப் பழக்கப்படுத்தி, ''கடைசியாக, ஆன்மாவிற்கும் உடலுக்கும் கலப்புத்துடர்ச்சி யேற்பட்டுவிடுகிறது.'' இது ஆன்ம முயற்சியடைந்தவர்களின் அனுபவம். இந்தக்கலப்பு அனுபவம் மனித சுபாவத்தை நன்கு அறியமுடியாதபடி பலவிதமாய்த் தோற்றமளிக்கும்.

கர்ம சித்தாந்தத்தைப் பின்னோக்கிப் பார்க்கும்போது மக்கள் துன்பத்திற்கெல்லாம் காரணம், அவர்களின் முழுஉரிமை [பூரண (Free will)சுயேச்சை] தான் இதில்த்தான் எல்லா இக் கட்டும் இருக்கிறது. மக்களுக்கு முழு உரிமையில்லையானால், மக்கள் யந்திரங்கள்போல் எப்போதும் ஒழுங்காகவே நடந்து வருவார்கள். அவ்விதம் நடந்து பூரணத்தையடைந்தால், அது

பூரணமாக மாட்டா. இறவாத்தன்மையுடைய ஆன்மா எப்போதும் இன்பத்திலிருக்கும்போது, அதன் ஆயுதமாகிய இறக்கும் தன்மையுடைய மனிதன் துன்பத்திற்குள்ளாகிருனே என்று வருந்தலாம். இந்த உலக முழுவதையும் வேறே அமைப்பின்படி அமைத்தாலும், அப்போதும் எங்கேயாவது ஓர் ஓட்டையிருப்பதுபோல் (**Apparent Snag**) நமக்கு தோன்றத் தான் செய்யும். நமது குறுகிய பார்வையால் தெய்வ அமைப்பில் குறைபாடுகள் இருப்பது போல்த் தோன்றினுலும் நாம் ஞானக் கண்ணுல்ப் பார்த்தால், அது முற்றிலும் சரியெனத் தோன்று மென்பதை ஞானுசிரியர்கள் சுட்டிக்காட்டியிருக்கிருர்கள்.

நமக்குப் புரிந்து கொள்ள முடியாத சங்கதிகள் பலவற்றை மறைஞானம் விளக்கும் என்பதைப்பற்றி இனி ஆராய்வோம்.

# 6. பிறவியின் இரு வகை வளர்ச்சிகள்

சென்ற நூற்றாண்டின் கடைப் பகுதியில் "ஹாக்கல்" (Haeckel) என்பவர், ஒரு பொருளிலிருந்துதான் இயற்கை விகற்பங்கள் (பல்வேறு உறு) வெளிப்பட்டிருக்கிறது, என்று உலகத்தில் மறைந்து நிற்கும் அறிவை நிரூபித்தார். அவர் சொன்னது மறைஞான தத்துவத்திற்கு முற்றிலும் பொருத்த மானதுதான். ஆனால் அவர் ஓர் தவறு செய்துவிட்டார். எப்பொருளிலிருந்து மற்றப் பொருள்கள் எல்லாம் விரிந்து காணப்படுகிறதோ, அப்பொருளை, ஐம்புலனால்க் காணப்படும் பொருள்களுக்குள் அமைத்துக்கொண்டார். ஏனெனில், வேறு விதமாகக் காணக்கூடிய பக்குவம் அவர் அடையவில்லை. உயிரற்ற பொருள் என்பது ஒன்றும் கிடையாதென்பதை அவர் ஒப்புக்கொள்கிறார். ஆனால் இறுகின பொருளிலிருந்து நுண்ணிய (ஆவி ரூபமான) பொருள்கள் உண்டு என்பதை அவர் கவனிக்கவில்லை. மறைஞானத்தின்படி நுண்ணிய பொருள்கள் உண்டு என்பது உண்மை. மறைஞானிகள் சடப்பொருள்கள் (Physical Matter) மட்டுமல்ல. மனப் பொருள்களும் (Mental Matter) உண்டு என்பதை நிலை நிறுத்தியிருக்கிறார்கள். மனப் பொருள்களைத் தத்துவஞானிகள் "மனச்சரக்கு" என்று சொல்கிறார்கள். நமது மூளையினால் மனதில் ஓர் உருவத்தை உண்டுபண்ணும்போது, குயவன் களிமண்ணினால் (ஜடச்சரக்கு) எப்படி உருவம் அமைக்கிறானோ அதேபோல், நாம் நமது மனச்சரக்கைக் கொண்டு அமைக் கிறோம். எண்ணங்கள் மூளையின் வேலை. மனிதனின் அதிசய யந்திரமான மூளை, குயவன் செய்வதுபோல் மனச்சரக்கைக் கொண்டு செய்கிறது.

இந்த எண்ணங்களை உருவ வடிவத்தில், ஞானக்கண்ணால் (Clairvoyant Sight) மனவெளியில்ப் பார்க்கலாம். அது (எண்ணம்) எவ்வளவிற்கு நன்றாய் அமைக்கப்பட்டிருக்கிறதோ அதைப் பொறுத்தது. மேலும், பலமாயும், தெளிவாயும், அழுத்தமாயும் அமைந்த எண்ணங்கள், நீண்டகாலம் அழியாம லிருக்கும். எப்படி ஜடப்பொருள்கள், இறுகுவதற்கு வேண்டிய

தன்மைகள் வேண்டுமோ, அப்படித்தான் மனப்பொருளாகிய எண்ணத்திற்கும். ஆயிரக் கணக்கான எண்ணங்கள் நம் மூளையில்த் தோன்றி அடிக்கடி மறைந்துவிடுகின்றன. ஏனெனில் அவைகள் இறுகி நிற்கும் தன்மைகொண்டவை களல்ல. காய்ந்த மணலைக் குவித்தால் எப்படி நிற்காமல்ச் சரிந்துவிடுமோ அதுபோல்த்தான். மணலுக்கு இறுகி நிற்கும் தன்மை கிடையாது. மனதினாலாவது, உணர்ச்சியினாலாவது பலப்படுத்தப்பட்ட (இறுகின) எண்ணங்கள், நீண்டகாலம் அப்படியே நிற்பதோடல்லாமல், நன்மை, தீமைக்கு உபயோகப் படக்கூடிய சக்தியாகவும் ஆகிறது. சாபங்கள் ஏன் பலிதமாகிற தென்பது இதனால் அறியலாம்.

எனவே உலகத்தில் ஜடப்பொருள் என்றும், ஆவிப் பொருள் என்றும் இரண்டுவிதமான பொருள்கள் உண்டு என்பது தெளிவு. ஜடப்பொருள் கண்ணால்ப் பார்க்கக்கூடியது. ஆவிப்பொருள் ஊனக்கண்ணால் (Physical Eye)ப் பார்க்க முடியாதது. மனிதன் ஜடப்பொருளும், ஆவிப் பொருளும் கலந்தவன். அவன் பிறவியில் முன்னேற வேண்டுமானால், இரண்டு பொருள்களிலும் சேர்ந்துதான் முன்னேற வேண்டும். எனவே பிறவி முன்னேற்றம் இரு வகைப்படும். ஒன்று காணக் கூடிய உலக ஜடப்பொருளால், மற்றொன்று, காணமுடியாத (மறைந்து நிற்கிற) அபூர்வ ஆவிப் பொருளால். ஆனால் இவ்விரு வகை முன்னேற்றங்களும் ஒரே காலத்தில் நடைபெறுகின் றன. ஒன்று காணக்கூடியதாலும், மற்றொன்று காணக்கூடாத தாலும், இவ்விரண்டிற்கும் சம்பந்தமில்லையென நினைக்கக் கூடாது. நாம் இவ்விதம் சொல்லும்போது, நம்மேல் வாசகர் களுக்குச் சிறிது நம்பிக்கை குறையலாம். ஆனால், இயற்கையின் அபார சக்திகள், நமது ஐம்புலன்களாலும் அறிய முடியாதவை கள். அவைகள் செய்யும் பயனைத்தான் கண்களால்ப் பார்க்க முடியுமேயொழிய, அச்சக்திகளைப் பார்க்க முடியாதென்பதை ஞாபகமூட்டுகிறோம். உதாரணமாக, நீராவியினால் ரயில் ஓடுகிற தென்று சொல்லும்போது, நீராவியின் சக்தியை மறந்து, கண்ணால்த் தெரிகிற நீராவியைத்தான் பார்க்கிறோம். வான

வெளியில் பலவிதமான கிரணங்கள் ஒளி வீசிக்கொண்டிருப்பதையும், ஒலி அலைகள் உண்டு என்பதையும், நாம் கண்ணால் பார்க்க முடியாமல், அதன் விளைவைத்தான் அனுபவிக்கிறோம். இதனால் வெறும் வெளிபோல்த்தோன்றுகிற வானவெளி, ஒன்றுமில்லாததல்ல என்பது நன்கு புலப்படுகிறது. அதில் பலவிதமான கிரணங்களும் (Rays) சக்திகளும், நீர்காற்றோட்டங்களும் (Currents), உள்நோக்கி ஓடும் சக்திகளும் நின்று, ஒன்றோடொன்று மோதிக்கொள்ளாமல், ஒரே நேரத்தில் அதன தன்வேலைகளைச் செய்துகொண்டிருக்கின்றன. இச் சக்திகள், வானவெளியில் மட்டுமல்ல, மரங்கள், வீடுகள், மக்கள் முதலியவைகள் இருக்கும் இடங்களிலும் வேலை செய்கின்றன.

விஞ்ஞானிகள் முக்கியமானவைகளைப் புதிதாய்க் கண்டு பிடித்திருக்கிறார்கள். ஆனால் பரந்த ஆகாய வெளியில், பிறவி முன்னேற்ற வேலையில், மிகப் பெரிய பங்கெடுத்து வேலை செய்யக்கூடிய புலனறிவுள்ள உயிர்கள் பலவிதமாய் பெருந்திரளாய் அமைந்து நிற்கின்றன என்பவை போன்றவைகளைத் தற்கால விஞ்ஞானிகள் கண்டுபிடிப்பதற்கு வெகு காலத்திற்கு முன்னே, மறைஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள். அதில் ஓர் வரிசையில், கனிப்பொருள் (லோகங்கள் Minerals) மரங்கள், புழுப்பூச்சிகள் முதலியவைகளைக் கவனிப்பதற்காக, சிறிய அளவு படைத்தவைகளும், மற்றோர் வரிசையில், நம் அண்டத்திற்குரிய சட்டங்களைக் கவனிப்பதற்காக, நினைக்க முடியாத அழகும் ஒளியும் கொண்ட அறிவுடைய உருவங்களும் இருக்கின்றன. எனவே, வனதேவதைகள், தேவ தூதர்கள், கின்னரர், கிம்புருடர், வசுக்கள் முதலானவர்களிடத்தில் நம்பிக்கை கொள்வதற்கு நியாயமுண்டு. இவைகளெல்லாம் மனிதனது கற்பனைக் கட்டுக்கதைகளல்ல. மறைஞானத்தின்படி தேவர்கள் என்று அழைக்கப்படுபவர்கள், நாம் படங்களில்க் காண்பவைகள் போன்றனவல்ல. தீயில்லாமல்ப் புகையுண்டாகாதாகையால், உண்மைக்கு மாறாக மக்கள் திரித்துக் கூறப்படும் இவ்விஷயங்களில்ச் சிறிது உண்மையிருக்கத்தான் செய்கிறது.

ஆகையால் பிறவி முன்னேற்றத்தில் இரு வகைகள் இருக்கின்றன. ஒன்று ஜடவடிவைப் பொறுத்தது (Form aspect) மற்றொன்று, ஆவி வடிவத்தை பொறுத்தது. ஜட உடல் வேலையும் ஆவி உடல் வேலையும் இருப்பதாக நாம் ஒப்புக்கொண்டால், பிறவி முன்னேற்றத்திற்குரிய வேலைக்காக, ஆவி உடல்களின் சக்தி, அதன் தகுதிக்குத் தகுந்தவாறு சொற்ப அளவு கொண்டும், பெரும் அளவு கொண்டும் இருக்கிற தென்பது தெரியலாம். இங்கே கவனிக்க வேண்டியது, நாம் வாழ்க்கையில் அவைகள் என்னென்ன செய்கின்றனதென்பதே. கர்ம சக்தியின் மறைப்பு வேலையைச் சரிக்கட்டியும், செலுத்தியும், முன்னேறுவதற்காக, ஆன்மா பிறப்பதற்கு இடம் தேடியும் தருகிறது. இவ் வேலை செய்யக் கூடிய பெரியவர்கள் இக் கூட்டத்தில்த்தான் இருக்கிறார்கள். அவர்களும் இந்த மாதிரி முறையினாலே முன்னேறியவர்கள்தானே யொழிய, தெய்வத் தால்த் தனிக்கருணை காட்டப்பட்டவர்களல்ல என்பதை எப் போதும் நினைவிருத்திக்கொள்ளுங்கள்.

•

நமது ஸ்தூல உடலுடன் சேர்ந்தே, நமது ஆவி உடல் களும் முன்னேறுகிறது என்று சொல்வதை நம்பக் கொஞ்சம் கஷ்டமாகத்தானிருக்கும். ஆனால் உண்மையில், நமது ஆவி உடல்களில் சில பாகங்கள், நமது ஸ்தூல உடலைவிட முன்னதாகவே விருத்தியடைகிறது. இதை நம்ப முடியாமல் நாம் கஷ்டப்படுவதற்குக் காரணமென்னவென்றால், நாம் எந்தப் பொருளையும் மூன்று விதமான அளவு (Three dimensions) கொண்டு, அதாவது நீளம், அகலம், உயரம் என்ற அளவைக் கொண்டுதான் பார்க்கிறோம். உண்மையில் மூன்றுவித அளவைத் தவிர நாலாவதாக ஓர் அளவு இருக்கிறது. அது நமது சாதாரண கண்ணுக்குத் தெரியாது. எனினும், சில கணித நூல்வல்லார்கள் மேலே சொன்ன மூன்றுவித அளவைத் தவிர, நாலாவதாக ஓர் அளவு உண்டு என்று சொல்வது (Fourth Dimension) பொருத்தமுடையதுதான் என்று நிலை நிறுத்தியிருக்கிறார்கள். மூன்று விதமான அளவிருக்குமானால்,

ஏன் நான்கு ஐந்துவிதம்கூட இருக்கக்கூடாது? இவ்விஷயத்தைப்பற்றி எழுதும்போது, (C. H. Hinton) ஹின்டன் என்பவர் பின்வருமாறு குறிப்பிடுகிருர். "ஒரு பொருளின் நீள, அகல, உயரங்களைத் தவிர, அதற்கு மற்ருெருவித அளவுமிருக்கிறது. அதை (அந்த அளவை) குறிப்பிடுவதற்குச் சரியான வார்த்தையில்லாததினுல், "முழுதும் கொண்டது" (Throughth) என்ற வார்த்தையைக் கொண்டு குறிப்பிடவேண்டியிருக்கிறது. "அந்த அளவை யூகிக்கப் பின்வரும் உதாரணத்தைக் கவனியுங்கள். ஓர் பூந்தொட்டியில் நிறைய மண்ணிருக்கிறது என்று நினைத்துக் கொள்ளுங்கள். அதில் கொஞ்சம் தண்ணீரை நாம் ஊற்றுகிருேம். மண்ணிலுள்ள விஷேசத் தன்மையினுல், அது, மண், தண்ணீரைத் தனக்குள்ளே ஊடுருவிச் செல்லும்படி இடம் கொடுக்கிறது. மண்ணும் தண்ணீரும் ஆகிய இரண்டும், ஒரே இடத்தை உறைவிடமாக்கிக் கொள்கிறது. இதனுல் நாம் மேலேசொல்லிய "முழுதும் கொண்ட" அளவை யூகித்துக் கொள்ளலாம். மறைஞானிகள், கண்ணுக்குப் புலப்படாத அபூர்வ வஸ்துக்களின் சேர்க்கையாலுண்டானவைகளுக்கு, இந்த ஊடுருவிச் செல்லும் தன்மையுண்டெனச் சொல்கிருர்கள். விஞ்ஞானிகளும். உலகத்தில் இறுகின பதார்த்தங்கள்போல்க் காணப்படும் ஜடப் பொருள்களும் உண்மையில் இறுகினவைகளல்லவென்று சொல்லுகிருர்கள். இதனுல் நாம் யூகித்துக்கொள்ள வேண்டியதென்ன? கண்காணுப் பொருள்கள், நமது ஸ்தூல உடலை ஊடுருவிச் செல்லும் தன்மை வாய்ந்தவைகளால் உண்டாக்கப்பட்டிருக்கிறது என்பதே. இவ்விதமிருப்பதால் இரண்டுவிதமான பிறவி முன்னேற்றங்கள் (காணப்படுவதும்—காணமுடியாததும்) துடர்ந்து ஒரே சமயத்தில் நடக்கிறதென்று சொல்வது மிகவும் பொருத்தமானதேயாம். இறுகின ஜடப் பொருள் நமக்கு வேறுவிதமாய்த் தெரிவதால்த்தான், வேதாந்திகள், ஜடத்தை (உடலை) "மாயை" (Illusory) என்று சொல்லுகிருர்கள். இங்கு மாயை என்ருல் இல்லாதது என்பதல்ல, ஏமாற்றமான தோற்றம் (உருபுமயக்கம்) (Deceptive) அளிக்கிறது் என்பது பொருள்.

இச்சமயம் ஓர் முக்கிய சங்கதி குறிப்பிடவேண்டியிருக்கிறது. அதாவது :— ஆவி உருவத்தைப் பார்க்கும் சக்திவாய்ந்தவர்களுக்கு (ஆவேசம் கொள்வோர்களுக்கு) அந்த ஆவி உருவம்; வெளிச்சம் ஊடுருவிச் செல்லக்கூடியதான (பிரகாசமான) (Diaphonus) தோற்றமாய்த் தோன்றும். அதே சமயத்தில் ஆவி உருவங்களுக்கு நமது உடலும் அதேபோல் பிரகாசமாகத் தோன்றும். ஒன்றிற்கொன்று ஆவி உருவமாகத் தோன்றும். இந்த வேடிக்கையான சங்கதியை, மறைஞானிகள் நிரூபித்திருக்கிறார்கள். இதை ஆவி உருவ உபாசகர்களும் (Spritualists) உண்மையென ஒப்புக்கொள்கிறார்கள்.

அபூர்வச் சரக்குகளிலான உடல்களுக்கு, ஊடுருவிச் செல்லும் தன்மையிருக்கிறது என்பதை ஆராய்ந்தறிந்தபின், நமக்கு இப்போது மனிதனின் நுண்ணிய உடல்களையும், அவைகளுக்கும் நமது உணர்ச்சிக்கும் உண்டான சம்பந்தத்தையும் தெரிந்துகொள்ள வசதி உண்டு. மறுபிறவித் தத்துவத்தைப்பற்றி முன் நாம் சொல்லியபோது மனிதனை, ஆன்மாவும் உடலும் கொண்டவன் என்று சொன்னோம். அது பொதுவாய் மனிதனின் தன்மை தெளிவுபடுத்துவதற்காகச் சொன்னது. ஆனால் அந்த விளக்கம் போதாது என்பது இனித் தெரியவரும். அவ்விதம் தெரிவதற்கு முன்பிறவி சம்பந்தமான சில தவறான எண்ணங்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதிருக்கிறது.

அதாவது :— லோகாயுத விஞ்ஞானிகள் (Material Scientisit), மனிதன் குரங்கிலிருந்து பிறவி முன்னேற்றமடைந்தவனென்றும், மனிதன் கடவுளின் தனி சிருஷ்டி (படைப்பு) அல்லவென்றும் சொல்கிறார்கள். அவ்விதம் அவர்கள் சொல்கிறபடி யிருந்தால், குரங்கிற்கும் மனிதனுக்கு முள்ள "துடர்புச்சங்கிலி"யை (Missing Link) என்னவென்று அவர்கள் நிரூபித்திருக்க வேண்டும். அவ்விதம் அவர்கள் செய்யவில்லை. எனவே அவர்கள் சொல்வது தவறு. மறைஞானிகள், மனிதன் கடவுளின் தனி சிருஷ்டிதான் என்பதை மெய்ப்பித்திருக்கிறார்கள். கடவுள் ஓர் திட்டம்(Plan)போட்டால்,

அத்திட்டம் முன்னேற வேண்டியதற்காகச் சமயத்திற்குத்தகுந்த படி அதற்கு உதவி செய்வதற்காக வேண்டும் புது சிருஷ்டிகளை தனது மனதில் முதலில் உள்ளே நினைத்து (உண்டாக்கி) பின் ஸ்தூலமாக்குவார் என்றும் மறை ஞானம் போதிக்கிறது.

இதனால் மனிதனை நாம் இக்காலத்தில் என்ன உருவ அமைப்போடு பார்க்கிறோமோ, அதே உருவ அமைப்பில்த் தான் (உருவங்கொண்டவனாகத்தான்) சிருஷ்டி காலம் துடங்கியே இருந்தான் என்று சொல்வதாக அர்த்தமில்லை. ஆனால் அவன் கடவுளின் தனி சிருஷ்டி உருவத்துடன், பிறவி முன்னேற்றத்தின் வளர்ச்சியால் ஏற்பட்ட உருவமும்கொண்டு தோன்றுகிறான். Max Heindel என்பவர், ''மனிதன், என்றும் நாம் காண்கிற மிருகங்களில் எதைப் போலவாவது, அல்லது மனித குரங்கு (Orang outtang) வடிவத்துடனாவது இருந்த தில்லை. உறுப்பில் மனிதனும் குரங்கும் ஒன்றுபோலிருப்ப தாலும், முன்னேற்றத்தின் தூண்டுதல் எப்போதும் விருத்தி யிலேயிருப்பதாலும், மனிதன் குரங்கிலிருந்து உதித்தவன்தான் என்று விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். ஆனால் மனிதனுக்கும் குரங்கிற்குமுள்ள துடர்புச்சங்கிலியை (Missing Link) நிரூபிக்க முடியாமல்த் திகைக்கிறார்கள்'' என்று சொல்லியிருக் கிறார்கள். என்ன காரணத்தால் அவர்கள் அவ்விதம் திகைக்கிறார்கள் என்றால், குரங்குகள் (Apes) மனிதனிலிருந்து கீழ் நோக்கிய பிறவியாதலால்த்தான். அதாவது மனிதன் குரங்குப் பிறவியிலிருந்து முன்னேறியவனல்ல. குரங்குதான் மனிதப் பிறவியிலிருந்து கீழிறங்கிய பிறவி. எனவே மறை ஞானம் துடர்புச் சங்கிலியாகிய புதிருக்கு (Enigma) விடை தருவதோடு, மனிதன் புகழ்பெற்ற குரங்குதான் என்னும் இழிவையும் போக்குகிறது.

துர் அதிர்ஷ்ட வசமாகப் பல யுகங்களுக்கு முன்னால், மனித இனத்திற்கும், மிருக இனத்திற்கும் ஓர் பெரும் போராட்டம் (Clash) நடந்தது. மனித வர்க்கம் உலகத்தில் பெரும் அளவிற் குண்டானபோது, அக்காலத்திலுள்ள மிருகங்களால், மனித இனம் பெருமிதமாய் அழிக்கப்பட்டன. அதன் பயனாய், மிருக

இனம் மிகவும் கெட்ட கர்மத்தைத் தேடிக்கொண்டது. அதனால், மிருகங்களை வேட்டையாடுவதும். கடுமையாக வேலை வாங்குவதும் பாவமற்றது போல்த் தோன்றும்படி (ஆனால் உண்மையில் பாவந்தான்) இயற்கைச் சட்டம் இடங் கொடுத்திருக்கிறது. மனிதன் தனது இளைய சகோதரர்களாகிய மிருகங்களைத் துன்பப் படுத்தியழிக்காமலிருந்தாலும், மிருகங்களின் கெட்ட கர்மம் நீங்குவதற்கு வேறு வழியமைக்கப்பட்டிருக்கும். மனிதன், தனி சிருஷ்டியாயிருந்தபோதிலும், மிருகங்களை "நமது இளைய சகோதரர்கள்" என்று கூறுவது மிகவும் பொருத்தமானதுதான்.

தற் காலத்திய மிருகங்களின் ஆன்மாக்கள், அதிலும் வீட்டில் வளர்க்கப்படும் பிராணிகளின் ஆன்மாக்கள், பிற் காலத்தில் மனித உடல் எடுக்கக்கூடும்.

இனி ஆன்மா, உடல் என்னும் பதங்கள், போதுமான விளக்கத்தைத் தரக்கூடிய வார்த்தையல்ல வென்பதை விளக்குவோம்.

## 7. நுண் உடல்களின் விளக்கம்

ஒன்றிற்கொன்று எதிரான இரு விஷயங்களை ஒப்பிட்டுப் பார்ப்பதன்மூலம்தான், உண்மையையறிய முடியுமாதலால், உயிரைப்பற்றி இகத்திலுள்ளவைகளோடு (உலகத்திலுள்ள வைகளோடு) அடிக்கடி நாம் ஒப்பிட்டுப்பார்க்கவேண்டிய தாகிறது.

மனிதனின் உடலமைப்பை உலகத்தார் அறிந்திருப்பது, தங்களது குறைந்த அறிவைக் கொண்டுதான். உடல்நூல் காரர்கள் (Physiologist) தங்கள் குறுகிய பார்வையால், உடலமைப்பு இவ்விதம்தான் என்று சொல்லுவது; பொருத்த மாகயிருந்தாலும், மனிதன் அவர்கள் கண்டபடி மட்டுமல்ல. அவன் மொத்தத்தில்ச் சிக்கலான அமைப்புடையவன். அவன், இறுகின ஜடப்பொருளிலிருந்து நுண்ணிய ஆவிப்பொருள்கள் வரை கொண்டவன். அவனைப் பொதுவாக இருவிதமானவன் என்று சொல்லவேண்டும். சாதாரணக் கண்களுக்குத் தோன்றும் மனிதன் ஒன்று, ஊனக் கண்களுக்குத் தோன்ருது ஞானக் கண்களுக்குத் தோன்றும் மனிதன் ஒன்று. ஞானக் கண்ணுல்ப் பார்க்கும்போது (Clairvoyant sight) மனிதன், ஸ்தூல உடலும், மற்றும் சில நுண்ணிய உடலும் கொண்டவனுகத் தோன்றுவான். அந்த நுண்ணிய உடல்கள் ஒன்றிற்கொன்று ஊடுருவிப் பாய்ந்து. ஸ்தூல உடலையும் ஊடுருவி, ஸ்தூல உடலைச் சுற்றியும் நிற்பது தோன்றும். இவ்விதம் நுண்ணிய பொருள்களால் அவ்வுடல் அமைக்கப்பட்டிருப்பதால்த்தான், நமது சாதாரணக் கண்களுக்கு அவைகள் தெரிவதில்லை. ஏனெனில் அவ்வுடல்களின் அலைகள் (Vibration) வேகமாய் நடப்பதால்த் தெரியமுடியவில்லை.

இதில் முக்கியமாய்க் கவனிக்கவேண்டியதென்னவென்ருல், இந்த நுண்ணிய உடல்கள் ஸ்தூல உடலோடு சேர்ந்தபோது தான், மனிதனுக்குத் தன் நினைவு உண்டாகிறது. அவ் வுடல்கள், தூங்கும்போது தற்காலிகமாகவும், இறக்கும்போது நிலையாகவும் விலகிவிடுவதால், மனிதனுக்குரிய நினைவும்

அப்போது விலகிவிடுகிறது. இப்போது இடையில் நாம் ஒன்று சொல்லவேண்டியிருக்கிறது. அதாவது உடல் நூல்காரர்கள் மரணத்தைப்பற்றிய காரணங்கள் எவ்வளவோ சொன்ன போதிலும், இதுவரை தூக்கம் உண்டாவதற்குரிய அதிசய நிகழ்ச்சியைப்பற்றி நாம் திருப்தியடையும்படி காரணம் காட்டிச் சொல்லவில்லை. நிற்க.

மனிதனின் இருவிதமான தோற்றமளிக்கும் தன்மை, பிறவிமுன்னேற்றத்திற்குப் பொருத்தமானதுதானு வென்றால், பொருத்தமானதுதான். முன்னேற்றம் தெரியமுடியாமலிருப்பவர்களுக்கு, அதன் காரணத்தை இது நன்கு விளக்கும். மட்டமான ஸ்தூல உடல் விருத்தியடைவது போலவே, நுண்ணிய உடலும் விருத்தியடைகிறது. கீழ்த்தரமான பிராணிகளுக்கும் கூட, அதற்குத் தகுந்தவாறு நுண்ணிய உடல் உண்டு. அந்த நுண்ணிய உடல்களும் அப்பிராணிகள் தூங்கும்போது அதன் ஸ்தூல உடலைவிட்டு நீங்கியிருக்கும். சில பிராணிகள் மாரிகாலமுழுவதும் உறங்கும். அதற்கு "மாரிகாலத் தூக்கம்" (Hibernation) என்று பெயர். அப்போது அதன் நுண் உடல் மாரிகாலமுழுவதும் அதன் ஸ்தூல உடலை விட்டு நீங்கியிருக்கும். உயிர் நூல்க்காரர்கள் (Biologists) கண்காணுத ஒரு பொருள் மனிதனுக்கு உண்டு என்றால் அப்பொருள் எல்லாப் பிராணிகளுக்கும் ஏன் இருக்கக் கூடாது என்று கேட்கிறார்கள். மறைஞானிகள் முன்னமே சொல்லியபடி, அப்பொருள் இல்லையென்று சொல்லவில்லை. உண்டு என்றுதான் சொல்கிறார்கள்.

இப்போது மற்றொரு முக்கியமான சங்கதி கவனிக்கவும். நுண் பொருளான உடல்களின் அசையும் சக்தி எவ்விதமென்பது. ஆன்மா மிகமிக நுண்ணிய பொருளால் அமைந்தவையானதால், அதன் அலைகளும் (Vibrations) அச்சக்திக்குத் தகுந்தபடி வேகமாய் அமையப் பட்டிருக்கிறது. நுண் பொருள்களிலிருந்து கடினமான பொருள்களும் தரம் தரமாய்க் குறுக்கே அமையாவிட்டால், ஆன்மாவிற்கும் மூளைக்கும் துடர்பு ஏற்படாமல்ப் போய்விடும். மிக நுண்ணிய

பொருள் கனத்த பொருளை உறுத்த (impress) முடியா தென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஆகையினால், நுண்பொருள் தனக்கு அடுத்த தாழ்ந்த நுண்பொருளை உறுத்தும், அவ்விதம் உறுத்தப்பட்ட தாழ்ந்தபொருள், தனக்கு அடுத்த தாழ்ந்ததை உறுத்தும், இவ்விதமாய்ப் படிப்படியாக உறுத்தி(உணர்ச்சி உண்டாகும்படி செய்து)கடோசியில் ஸ்தூல உடலின் மூளையை உறுத்தும். இச் செய்கை கண நேரத்தில் நிகழ்வதால் இவ்விதமில்லையென்று சொல்லமுடியாது.

நுண் உடல்களின் விரிவான தன்மைகளையும், அத்துடன் மனிதர்களைச் சுற்றிச் சூழ்ந்து நிற்கும் ஒளிவீசும் தன்மை யுடைய கிரணம் (பிரபை-Aura) என்பவைகளைப் பற்றியும் நாம் விரிவாய் இங்கு சொல்லமுடியாது. மறைஞானம் அறிவதற்கு மேலே சொன்னவைகளை நிச்சயமாய்த் தெரிந்து கொள்ள வேண்டும் ஏதோ சொல்வதை நம்பித்தான் ஆகவேண்டும் என்று கருத வேண்டாம். மேலும் விண்ணுடல் இன்னதென்பது தெரியாமல் மக்கள் வழுவழுப்பாய்ப் பேசுகிறதினால், சில தவறான கருத்துக்கள் உண்டாகின்றன. அதைப் போக்க வேண்டியதற்காகத்தான், விண்ணுடல் போன்ற நுண் உடல் கள் உண்மையான உறுப்புக்கள் தான் என்றும், அவைகளுக்கும் ஆவிசம்பந்தமான உணர்ச்சி எண்ணங்களுக்கும், தொடர்பு உண்டென்பதை அறிந்துகொள்ளவேண்டி, சொல்லவேண்டிய தாயிற்று. எவ்விதம் ஓர் மனிதன் தேகப்பயிற்ச்சியால் தனது ஸ்தூல உடலை விருத்தி செய்கிறானோ, அவ்விதமே மனிதன் தனது விண்ணுடலை (Astral) உணர்ச்சியாலும், மனஉடலை (Mental) எண்ணங்களாலும் விருத்தி செய்ய முடியும். நமது எண்ணங்கள், உணர்ச்சிகளெல்லாம் ஸ்தூல உடலின் அவயவங் களினால் உண்டாகிறது என்று எண்ணியிருந்தோம். இப்போது ஞானப் பார்வையால், அவைகள் நுண் உடல்களின் விளைவு என்று தெரிகிறோம். இந்த ஞானப்பார்வை யில்லாவிட்டால் இவைகளைத் தெரிந்திருக்கவே முடியாது. இவ்விதமிருப்பதால், அந்த நுண் உடல்கள், நாம் இறந்தபின், சில முக்கிய தொழிலில் ஈடுபடுகின்றன. கர்மசட்டம் ஸ்தூல உடலோடு நின்று விடாமல் நுண் உடல்களையும் துடர்வதால், அந்த நுண் உடல்

கள் எவ்வளவு காலம் தங்கியிருக்குமென்பது, அவைகள் (அவ்வுடல்கள்)நம் வாழ்நாளில் எவ்வளவு விருத்தியடைந்திருக் கிறதோ, அதைப் பொறுத்தது. நுண் உடல்களுக்கு, எதிர்பா ராத ஆபத்து (Accident) பிணிகள், பசி, தாகம், அழுகல், முதலிய வகைகள் இல்லை. இவைகள் எல்லாம் ஸ்தூல உட லுக்குத்தான். ஆதலால் அவைகள்(நுண் உடல்கள்)எவ்வளவு காலம் நிலைத்து நிற்குமென்பது அவைகளின் சக்தியைப் பொறுத்தது.

தத்துவ ஞானிகளும், கவிகளும் இவ்வுடல்களையும், ஆன்மா விற்குச் சட்டைகள்தான் என்று சொல்லியிருக்கிறார்கள்.(இதைப் பற்றி நாம் முன்னமே எடுத்துக் காட்டியிருக்கிறோம்) அவ்விதம் சொல்லியிருப்பதைக் கொண்டு, இறந்தபின் நடக்கும் செயல் களைக் கவனிக்க அது நமக்கு உதவியாகயிருக்கும். ஒருவன் எவ்வளவிற்கெவ்வளவு கனத்த சட்டைகளை யணிகிறானோ, அவ் வளவிற்கவ்வளவு அவன், அசைய முடியாமல், இடைஞ்சலுக் குள்ளாகவுமிருப்பதை அவன் உணருகிறான். அதற்கு மாறாக, அவைகளில் (சட்டைகளில்)எத்தனையைக் களைந்துவிடுகிறானோ அத்தனை சுகம் பெறுகிறான். இங்கே சட்டையென்பது, நமது ஸ்தூல உடல். அது நம் நுண்உடல்களின் உணர்ச்சிகளை முழுவதும் உணரவொட்டாமல் அமுக்கி வைத்திருக்கிறது. அதாவது இருண்டகண்ணாடி (கறுத்தக்கண்ணாடி)வழியாய்சூரிய வொளி எவ்விதம் அமுங்கப்பட்டு (மங்கலாய்)த்தெரிகிறதோ அப்படி. நுண்உடல்கள் ஸ்தூல உடலுடன் சேர்ந்தே வேலை செய்யவேண்டிய காலம்வரை, நமது தன்நினைவில் ஓர் குறுகிய பாகம்தான் நம்மால் உணரமுடியும். நமது கனத்த சட்டையைக் களைந்துவிட்டபின் (இறந்தபின்), நமது உணர்ச்சியை எது தடைசெய்துகொண்டிருந்ததோ அது விலகிப்போகும். இதனால்த்தான், ஆவி உருவங்கள், அதைப் பார்ப்பவர்களிடம் தங்கள் உடல் மிகவும் இலேசாகயிருப்பதாகச் சொல்லுகிற தென, அனேக ஆவிஉபாசனைக்காரர்கள் (Spiritualisit) தெரிவிக்கிறார்கள். மறைஞானிகளும், யோகிகளும், தங்கள் சாதனையினால் இந்நிலையடைந்திருப்பதாகச் சொல்லுகிறார்கள்.

மரண காலத்தில் நாம் முதலாவது களையவேண்டிய சட்டை நமது ஸ்தூல உடல்த்தான் என்பது எல்லோருக்கும் தெரியும். அதன்பின் மனிதன் சிலகாலம் விண்ணுடலில் (உணர்ச்சியுடல் Astral body), ஓர்விதத் தட்டுத் தடங்கலில்லாமல் தன் நினைவை அனுபவிக்கிறான். அக்காலம் நீண்டும் குறுகியுமிருக்கும். இவன் இப்போது இந்த உலகத்தை மறந்து, வேறு உலகத்தில்த் (Astral world) தன் நினைவுடனிருக்கிறான். அந்த உலகத்திலிவனுக்கு முன்னமே தங்கி வாழ்கிற (முன் இறந்து அதை அடைந்த) நண்பர்களும் பந்துக்களுமிருக்கிறார்கள். அந்த உலகத்திலும், நம் உலகைப் போலவே தனிப்பட்ட இயல்புகளும், சட்டங்களும் உண்டு. நுண்ணிய உடல்கள் கொண்ட உலகமாதலால், அதன் அலைகள் (Vibrations) மிகுந்த வேகத்தில் நடக்கின்றன. அதில்க் காணும் நிறங்கள், மிகத்தெளிவாயும், பிரகாசமாயுமிருக்கும். எவ்விதம் நம் ஜடஉலகத்தில் இறுகினதும் இலேசாயுமுள்ள பொருள்கள் உண்டோ, அவ்விதமே அங்கும் உண்டு. மறைஞானத்தின் படி கனம் இலேசாயுள்ளவைகள் அங்கு ஏழுவிதமாக அமைந்திருக்கின்றன. எவ்விதம் நம் உலகத்தில் சிலர், தங்கள் நாகரீகமற்ற பழக்கவழக்கங்களாலும், மிகுந்த சிற்றின்ப நுகர்ச்சியாலும், விரும்பத்தகாத கரடுமுரடான உடல்களமையப் பெற்றிருக்கிறார்களோ, அதுபோலவே, அக்காரணங்கள் கொண்டு அவ்வுலகிலும் கரடுமுரடான விண்ணுடலுடன் கூடியிருப்பார்கள். ஆனால் ஓர் வித்தியாசம்மட்டும் உண்டு. நம் உலகத்தில் உடலமைப்பு எப்படியிருந்தபோதிலும், எல்லோரும் வித்தியாசமின்றி ஒரேயிடத்தில் வாழ்கிறார்கள். அங்கு அப்படியில்லை. அங்கு எந்தெந்த உடல்கள் எங்கெங்கு இருக்கவேண்டுமோ, அவ்விடத்திற்கு, தன்னையறியாமலே இழுத்துச் செல்லப்படுகிறது. ஓர் மனிதன் இவ்வுலகிலிருக்கும்போது பேராசை, பகைமை, மட்டுக்குமீறிய குடிப்பழக்கம், முதலியவைகளில் ஏதேனும் ஒன்றின் வயத்தனானால், விண்ணுலகில் (Astral World) இவ்வாசைகள் அவன் உடலை விட்டுச் சிதறும்வரை, அவ்வுலகின் கீழ்ப்படியாகிய ஏழாவது படியில்த்தானிருப்பான். இந்த ஆசைகள் தேயும் (மங்கும்) வரை அதில் மேலேற முடியாது. இந்த நிலமை விரும்பத்தக்கதல்ல. ஏனெனில், இந்த

உலகில் (Astral World) மனிதனுக்குத் தன் நினைவு பூரணமாக யிருப்பதால், நம் உலக மகிழ்ச்சிகரமான விஷயங்கள் அங்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுப்பது போலவே, நம் உலக துன்பங்களும் அங்கே பன்மடங்கதிமாகத் துன்பங் கொடுக்கும்.

விண்ணுடலைப் பற்றி (Astral World) இதற்கதிகம் நாம் சொல்ல விரும்பவில்லை. அதற்கு வேண்டிய தனிப் புத்தகங்கள் ஏராளமாகயிருப்பதால், வாசகர்கள் 'அதை' வாங்கி வாசித்துக் கொள்ள விரும்புகிறோம். இனி மன உலகத்தைப் (Mental World) பற்றியும், நாம் இறந்தபின் அது என்ன செய்யக்கூடும் என்பது பற்றியும், விளக்குவாம்.

நம் உணர்ச்சிகள் நமது அறிவாற்றல்களை விடக் குறைந்த தன்மையானதால், மனிதன் முதல் முதல், கண் காணு உலகத்தில் உணர்ச்சி உடலுடன்தான் (Astral body) தங்கக் கூடுமென்பதில் வியப்பொன்றுமில்லை. அந்த உணர்ச்சி உடலிலுள்ள சக்தி முழுவதும் செலவழிந்தபின்—அது சில வருஷங்களிலுமாகலாம், பல வருஷங்களிலுமாகலாம் — அது தானுகவே கரைந்து விடுகிறது. அதன் பின் மனிதன் தனது மன உடலில் நல்ல நினைவைப் பெறுகிறான். எவ்விதம் ஸ்தூல உடலிருக்கும் போது விண்ணுடல் (Astral body) நினைவு மங்கிப் போயிருந்ததோ, அவ்விதம்தான் விண்ணுடலிருக்கும்போது மன உடல் (Mental body) நினைவுகள் மங்கியிருக்கும். எனவே மனிதன் மனஉடல் அடையவேண்டுமானுல், விண்ணுடல்களைய வேண்டும். மன உடல் மகிழ்ச்சி அளவற்றதாக யிருக்கும். அது எவ்வளவு காலமிருக்குமென்பது, அவனவன் மனத் தகுதியைப் பொறுத்தது.

பெரிய தத்துவ ஞானிகள் மனஉடலில் நூற்றுக்கணக்கான வருடங்கள் இருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. உலகில் பெரும்பாலோர் தத்துவ ஞானிகளல்ல ஆதலால், அதைப்பற்றி நாம் இங்கு சிந்திக்க வேண்டாம. சாதாரண மனப்பாங்குடையவர்கள் கூட அதிக நாள் மன உலகில் இன்பமடைய ஏதுவுண்டு. அதன் அளவு அவர்கள் எண்ணங்களையும், ஒருமுகப்பட்டு நிற்கும் தன்மைகளையும், சுபாவங்களையும்

பொறுத்தது. மனஉலக வாழ்க்கை அகவியலாகவும் (Subjection) புறவியலாகவும் (Objective) நம் உலகத்தி லிருப்பதற்குக் கிட்டத்தட்ட சரியாகவுமிருக்கும். உதாரணமாக உலகத்தில் சிலர் தனிமையை (ஏகாந்தத்தை) நாடி, தங்கள் கற்பனைகள், எண்ணங்களுடனே இனிமையாய் வாழ்ந்துவரு வதைக் காண்கிறோம். மற்றும் சிலர், எல்லோருடனும் கூடி அளவளாவி அனுபவித்து வாழ்வதையும், பார்க்கிறோம். அது போல்த்தான் மனஉலகத்திலும். ஆனால் நம் உலகத்தில் எண் ணங்கள் எண்ணங்களாகவேயிருக்கின்றன. மனஉலகத்தில்எண் ணங்கள் உண்மையாய் உருவமாய்விடுகின்றன. மனஉலகத்தில், எவன் எதை நினைக்கிறானோ அதை, அப்படியே நினைத்தமாதிரி பார்க்க முடியும். இவ்வுலகிலிருக்கும்போது என்னென்னவித மாக யிருக்கவேண்டுமென்று நினைத்தானோ, அந்தந்தவித மாகவே அங்கே இருக்க முடியும். எனவே அது ஓர் இன்ப உலகம். அங்கு கலைஞர்கள், ஓவியக்காரர்கள், புலவர்கள், விஞ்ஞானிகள், பாடகர்கள் முதலானவர்கள், ஸ்தூல உலகத்தி லிருக்கும்போது எண்ணியவெல்லாம் உண்மையில் அனுபவிக்க முடியும். பாடகர்கள் தங்கள் காதுகளைத் திறந்து வைத்திருக்க வேண்டியதுதான், இனிமையான இசையை அனுபவிக்கலாம். இந்த விதமாக அங்கு மனிதன் தனக்கு வேண்டியவைகளை உண்டாக்கி அனுபவிக்கவும், அல்லது அங்குள்ள மற்றவர் களுடன் சேர்ந்து, அவர்கள் அனுபவிப்பதைத் தனக்கு இஷ்ட மானால் அனுபவிக்கவும் முடியும். அவ்வுலகில் அவன் தங்கி யிருக்கும் கால முழுவதும் ஒரே இன்பமயமாகவே யிருக்கும்.

அங்குள்ள அகவியலைப் பற்றிச் (Subjective) சொன்னோம். இனி அங்குள்ள புறவியலைப் பற்றி (Objective) கூறுவோம். அதாவது அங்கு வசிப்பவர்களின் தன்மை இன்னதென்று சொல்வோம். முன் ஒரு காலத்தில் நம் உலகத்தில் வாழ்ந்தவர் களில் சிலர், அங்கு காணப்படுவதோடு, நினைக்க முடியாத அழகுள்ள தேவர்கள் என்பவர்களையும் காணலாம். மிக மிக அருமையான தேவகானம் கேட்கலாம். சொற்களால் வர்ணிக்க முடியாததான பல விதமான மகிழ்ச்சிகளையுமடையலாம். அவ் வுலகில் (மனவுலகில்) பேசுவதற்கு வார்த்தை தேவையில்லை

எண்ணங்களைப் படங்களைப் பார்ப்பதுபோல்ப் பார்க்கலாம். மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற, ஐம்புலன்கள் தேவையில்லை. எல்லாப் புலன்களும் கண்ணிலடங்கி, கண்ணாலேயே ஐவகை உணர்ச்சிகளையும் அனுபவிக்கலாம். இதைத்தான் பெரியபுராணத்தில்ப் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது:—

*ஐந்துபேர் அறிவுங் கண்களே கொள்ள அளப்பருங்*
*கரணங்கள் நான்கும்*
*சிந்தையே ஆகக் குணமொரு மூன்றும் திருந்துசாத்*
*துவிகமே ஆக*
*இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த எல்லையில்*
*தனிப்பெருங் கூத்தின்*
*வந்தபேர் இன்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா*
*மகிழ்ச்சியி லமர்ந்தார்*

— பெரிய புராணம். பாட்டு 106.

மனஉலகையே சிலர் மோக்ஷ வீடென அழைக்கிறார்கள். ஏனெனில், இங்குதான் மனிதன் ஓர் பிறவி கழிந்து, மற்றோர் பிறவி எடுக்கும்வரை, ஓய்வெடுத்துக்கொள்கிறான். ஆனால் பக்குவமடையாத கீழ்த்தர மனிதர்களிற் சிலர், மனஉலகை அடையமுடியாதபடியால், அவர்களுக்கு மோக்ஷவீடென்பது, உணர்ச்சி உலகுதான் (Astrae world) இவ்விதமிருந்தாலும், மனிதன் அடையவேண்டிய உன்னத உலகம், மனஉலகமல்ல. அதற்கும் மேம்பட்டிருக்கிறது.

உருவமில்லாத உலகொன்றிருக்கிறது. அது தெய்வீகத் தன்மை வாய்ந்தது. அது மன உலகிற்கும் மேம்பட்டது. அதைத்தான் அடைய எல்லோரும் முயற்சிக்கவேண்டும். அதில் அடையக்கூடிய ஆனந்தம் (இன்பம்) தான், ''ஆத்மானந்தம்''. மிகுந்த பக்குவமடைந்த மறைஞானிகள், யோகிகள், தத்துவக்கியானிகள், அதை அடைந்திருக்கிறார்கள்.

மறைஞான தத்துவத்தில் இப்போது ஓர் முக்கிய கட்டத்திற்கு வந்திருக்கிறோம். அதன்படி மறைஞானிகள்

கொள்கைக்கும், மதபோதகர்கள் கொள்கைக்கும் எவ்வளவு வித்தியாசங்கள் இருக்கின்றன என்பதை அது நன்கு விளக்கும். மதபோதகர்களின் (எந்த மதபோதகர்களாஞலும் சரி) கொள்கைப்படி, மனிதன் இறந்தபின் அவன் ஆன்மா விண்ணுலகடைந்து, கடவுள் சந்நிதியில் நிறுத்தப்பட்டு. இவ்வுலகில் (ஸ்தூல உலகில்) அவன் நல்லது செய்திருந்தால் சுவர்க்கத்திற்கும், கெட்டது செய்திருந்தால் நரகத்திற்கும் போய்ச் சேருகிறுன் என்று சொல்லப்படுகிறது. இதில் பல மதங்களிலும் சிறிது சிறிது வித்தியாசங்கள் காணப்பட்டாலும், கடோசியில் எல்லா மதங்களினுடைய முடிவு இதுதான். இந்த எதிர்கால சம்பவம் சிலருக்கு மகிழ்ச்சியை உண்டாக்கக்கூடியதாகயிருந்தாலும், பலர் அதில் அவ்வளவு பிரியப்படுகிறதில்லை. இங்கே கவனிக்கவேண்டியது, மக்கள் பிரியப்படுகிருர்களா அல்லவாவென்பதல்ல. இக்கொள்கை உண்மைதானு? ஏற்றுக் கொள்ளத்தக்க பாவனையிலமர்ந்திருக்கிறதா? என்பதே நாம் கவனிக்க வேண்டும். உலகத்தைப் படைத்து, அதில் ஆன்மாக்கள் எழுபது எண்பது வருடங்கள் ஸ்தூல உடலில் வருந்தத்தக்கவைகளை அனுபவித்தபின், அவர்களை மேலும் மோக்ஷத்திற்குத் தகுதி உள்ளவர்கள்தானுவென, மீண்டும் கடவுள் சந்நிதியில்ச் சோதிப்பது அன்புருவாகிய கடவுளின் தெய்வீக வேலையாகுமா? மேலும் மதபோதகர்கள் வினையும் பயனும் என்பது பற்றியும், எண்ணங்களின் பலமுடைய சக்திகளைப் பற்றியும் போதுமான கவலைகொண்டு ஆராய்ச்சி செய்ததாகத் தெரியவில்லை. நாம் முன்னமே கர்மம் என்னும் அத்தியாயத்தில் இதைப்பற்றி விளக்கியிருந்த போதிலும் இப்போது இவ் விஷயத்தை வேறு நோக்குடன் ஆராயவேண்டி வருகிறது.

வினையும் பயனும் (கர்மம்) என்னும் மாற்றமுடியாத பலன் கொடுக்கும் சட்டத்திற்கிணங்க, எல்லா எண்ணங்களும்—அவைகள் நல்லன கெட்டனவாயிருந்தாலும், அறிவுடையதாகவும் அறிவில்லாததாகவுமிருந்தாலும் — விரைவிலோ அல்லது நாள்ச் சென்றே தவிர்க்க முடியாதபடி நிறைவேறிவிடும். அவைகள் எந்த உலகில் உண்டாயிற்றே அவ்வுலகிலேயே தான் நிறைவேறும். வேறு எந்த உலகிலும் நிறைவேற

வேண்டுமென்று ஒருவரும் நினைக்கவுமாட்டார்கள். உதாரண மாக, செல்வத்தையனுபவிக்க விரும்பும் மனிதன், அச்செல்வம் பின்னல் ஓர் கற்பனு உலகத்தில்க் கிடைப்பதை விரும்பான். இந்த உலகத்திலேயே அடையவேண்டுமென விரும்புவான். அளவிறந்த எண்ணங்கள், விரைவில் அல்லது குறுகிய நாள்க் களில்க் கிட்டுமென்பதிருந்த போதிலும், வேறு பல அளவிறந்த எண்ணங்கள் மனிதனின் ஆயுள் காலத்திற்குள் கிட்டாது. அப்படியிருந்த போதிலும், அவ்வெண்ணங்கள் வினையாய்ப் பயனுக்கு வரவேண்டிய தன்மை அடைந்துவிடுகின்றன. அதாவது அவைகள் ஓர் சக்தியை உண்டாக்கிவிட்டன. அச் சக்தி தற்காலிகமாகத் தடைப் பட்டுப் போயிருந்தபோதிலும், அதை நிறுத்திவைக்க முடியாது. மேலும் பலருக்கு ஓர் எண்ணம் முடிவடைந்ததும், (பூர்த்தியானதும்) வேறு சில வற்றின்மேல்ப் பேராசை ஏற்பட ஏதுவாகின்றன. இவ்வித எண்ணங்களின் சக்தி பலமேறிக்கொண்டே போகிறது. இது தவிர எல்லோருக்கும் அடிப்படையில் உயிரோடு நெடுநா ளிருக்க வேண்டும் என்கிற எண்ணமும் சேர்ந்துகொள்கிறது. ஆகையால் இதன் முடிவுதானென்ன? மன உடலிலுள்ள வலிமை முழுவதும் கரைந்தபின் மனஉடல் சிதைந்து, ஆன்மாவிற்குப் பழைய நினைவு உண்டாகி மீண்டும் ஸ்தூல உலகிற்கே அவன் எண்ணங்களின் சக்தியால், மனிதன் இழுக்கப்படுகிருன். உதாரணமாக, ஓர் மனிதனுக்குப் பண ஆசை இல்லாமலிருக்கலாம், ஆனல் அவன் வேறுசில முயற்சி களில் மேன்மையுற விளங்கவேண்டுமென்ற ஆசையிருக்கும். பெரிய அரசியல் வாதியாகவோ, அல்லது கலைஞனுகவோ, புலவனுகவோ, ஆகவேண்டுமென்ற ஆசை உண்டாய்ப் பல வித காரணங்களினல் அவன் ஆயுள் காலத்தில் அந்த ஆசை நிறைவேருமல்ப் போகலாம். எனவே அப்படிப்பட்டவன் தனது ஆசையின் காரணமாக மீண்டும் மன உலகத்திலிருந்து, இவ்வுலகிற்கு இழுக்கப்படுகிருன், இதிலிருந்து நாம் அறிவ தென்னவென்ருல் ஸ்தூல உடலிலிருக்கும்போது ஒருவனுடைய மனேபாவங்கள், எவ்வளவிற்கெவ்வளவு நல்லதாயும், செழிப் புள்ளதாயுமிருக்கிறதோ, அவ்வளவிற்கவ்வளவு காலம், அவன்

மன உலகில்த் தங்க வசதியுண்டு. இல்லையேல் மீண்டும் இவ்வுலகில்ப் பிறவி எடுக்க வேண்டியதுதான்.

இதை முடிக்குமுன் நுண் உடல்களுக்கும், மறைஞான தத்துவப் பயிர்ச்சிக்கும் உள்ள சம்பந்தத்தைப்பற்றி சில வார்த்தைகள் சொல்லவேண்டியிருக்கிறது.

மறைஞான தத்துவம் போதிக்கும் சில பள்ளிக்கூடங்களில், மாணுக்கர்களுக்கு, ஸ்தூல உடலைவிட்டு விண்ணுடலில் (Astral body) வேலை செய்யும் பழக்கம் கற்பிக்கப்பட்டு வருகிறது. பலர், "விண்ணுடலில்ச் சஞ்சரிப்பது" என்னும் வார்த்தையைக் கேள்விப்பட்டிருக்கலாம். அதன் அர்த்தமென்னவென்ருல், நமது தன்நினைவை (Consiousnes) ஸ்தூல உடலிலிருந்து, விண்ணுடலுக்கு மாற்றி (புகச்செய்து) அதனுல் நாம் நினைத்த இடத்திற்கெல்லாம் போகலாம் என்பதே. குரு நாதர்கள் இத்தன்மையடைந்திருப்பதால்த்தான், நாம் போக முடியாத இடங்களுக்கெல்லாம்கூட அவர்கள் தாராளமாய்ச் செல்ல முடிகிறது. அவர்களுக்கு எல்லை என்பதின் அளவே கிடையாது. ஏதாவது மாணுக்கனுக்கு அறிவூட்ட வேண்டுமென நினைக்கும் குருநாதர், தனது ஸ்தூல உடல் ஆயிரக்கணக்கான மைலுக்கப்பாலிருந்த போதிலும்; தனது மாணுக்கன்முன், நுண்ணுடலில்த் தெரிசனம் தந்து (தோன்றி) அவனுக்கு வேண்டியதைப் போதிப்பார். மாணுக்கன் ஞானப் பார்வை (Claivoyant Sight) பெற்றிருந்தால், குருநாதரை நுண் உடலில்ப் பார்க்கும் சக்தியேற்பட்டு, அவர் ஸ்தூல உடலுடன் பேசுவதுபோலவே பேசுவான். அவன் ஞானப் பார்வை பெறவில்லையானுல், அவனுக்குப் போதிக்க வேண்டிய அறிவைப் புகட்ட குருநாதருக்கு வேறு வழிகள் இருக்கின்றன. அவ்வழிகள் என்னதென்பது நாம் இனிச் சொல்லப்போவதிலிருந்து தெரியவரும்.

---

## 8. "மகா பரிசுத்த சகோதர சங்கம்"

நாம் மேலே சொல்லிய குரு நாதர்கள் என்பவர்கள் "மகாவொண் சகோதர சங்கம்" ("Great White Brotherhood") என்னும் சங்கத்தின் உறுப்பினர்கள். அச் சங்கம் தான் "தேவ அரசாங்கம்" என்ற "புனித அரசாங்கம்" (Hierarchy). அவர்கள் தெய்வ சக்திதான் நம்மை ஆளுகிறது, "அப்படி யானால், என்ன பரிதாபம்! அவர்களுக்கும் நம்மைவிட நன்ருக ஆளத் தெரியவில்லேயே? இவ்வுலகம் அவர்கள் ஆளுகையிலும் சதா துன்பத்திற்குள்ளாகத் தானே யிருக்கிறது" என்று கேட்கலாம். அதற்கு பதில் சொல்ல வேண்டியதற்காக நாம் மீண்டும் ஓர் சங்கதியை (முன்னமே சொல்லியதுதான்) வறுப்புறுத்த வேண்டியிருக்கிறது. மனிதனுக்குக் கொடுத்த பூரண உரிமையையும், அதை அவன் தவறுதலாய் நடத்துவதுமேயாகும். குருநாதர்களுக்கு மனிதனின் பூரண உரிமையில் (அதாவது அவனவன் நிலேத்தபடி நடப்பதில்) குறுக்கிடுவதற்கு அதிகாரமில்லே. குருநாதர்கள் நல்ல உபதேசம் செய்வார்கள், அறிவுரை கூறுவார்கள். குறிப்பாகத் தெரிவிப்பார்கள், ஆனல் வலுக்கட்டாயப்படுத்த மாட்டார்கள்.

மனித சட்டத்தினுல் ஆளப்படுவதுதான் இவ்வுலகம் என நினைத்திருப்பவர்களுக்கு, இவ்வுலகம் தெய்வ சட்டத்தினுல் அமுல் நடத்தப்படுகிறதென்றும், அவ்விதம் நடத்தப்படும் அரசாங்கத்தில் பதவி வகிக்க மனிதன் தகுதியுடையவனுகிக் கொள்ளலாமென்றும் சொன்னுல் நம்பமாட்டார்கள். ஆனுல், இது உண்மைதானுவென்று அறிய விரும்பியவர்களுக்கு, மறுக்க முடியாத சான்றுகளிருக்கின்றன. இது தவிர, ஒரு சங்கதியுடன் மற்றென்றை ஒப்பிட்டுப் பார்ப்பதினுல்த்தான் பொருத்தமான விஷயங்கள் பல நாம் அறியலாம். வியாபாரத்தில்க்கூட, ஒவ்வொரு கம்பெனிக்கும், அதைச் சரிவர நடத்துவதற்கு பொருப்பாளர் கூட்டம் (Board of Directors) ஒன்று அவசியம் இருக்க வேண்டும். ஒவ்வொரு ஆலேகளுக்கும்,

அதற்குத் தலைமையாளர்களும் மேற்பார்வையாளர்களும் இருந்தே தீரவேண்டும். நாட்டு மக்களின் வாழ்க்கையில், ஒவ்வொருதேசத்திற்கும் ஒவ்வொரு சர்க்காரும், (ஆட்சிக்குழு) சர்க்கார் இலாக்காக்களும், அதற்குரிய தலைமை தாங்கும் முக்கிய அதிகாரி போன்றவர்களிருக்க வேண்டும். இவ்விதமிருப்பதை நாம் வழக்கத்தில் பார்த்துவருவதால், சிறிய விஷயங்களுக் கிருப்பதுபோல்த்தான், 'பெரிய விஷயங்களாகிய அண்டத்திற்கும் இருக்கவேண்டுமென்று கருதுவது பொருத்த மற்றதாகுமா? மதபோதகர்களில்ப் பலர், கடவுளால் உண்டாக்கப்பட்ட இப் பெரிய உலகத்தை, அவரும் அவருக்குக் கீழ் உள்ள தேவர்களால்த்தான் ஆள முடியுமேயொழிய மனிதன் அதை ஆளத் தகுதியற்றவன் என்னும் கருத்துடனிருக்கிறார்கள். அவர்கள் (மத போதகர்கள்) பிறவி முன்னேற்றத்தின் தன்மையைச் சரிவர உணரவில்லையாதலால், அவர்கள் சொல்லும் காரணங்கள், அவர்கள் நிறை அறிவு பெறவில்லை யென்பதைத் தான் காட்டுகிறது. குருநாதர் என்பவர், சாதாரண மனிதனைவிட மிகவும் பிறவியில் முன்னேறியிருப்பதால், அவர், இந்த தன்னலமற்ற வேலையை வகிக்க மிகுந்த தகுதி உடையவராக யிருக்கிறார்.

குருநாதர்களில் சிலர், தங்கள் மாணாக்கர்களுக்கு உபதேசிப்பதற்காக லோக சஞ்சாரம் செய்து வந்த போதிலும், அவர்கள் வேலையிலப் பெருமளவு அவர்கள் சமாதி நிலையிலிருக்கும்போது, உள் மனதில் நடைபெறுகிறது. நாம் முன்னமே சொல்லியபடி குருநாதர் தனது சூக்ஷம சரீரங்கள் (நுண் உடல்கள்) எதிலாவது எங்கு வேண்டுமானாலும் போய் வரக்கூடிய தன்மையுடையவர்களாக யிருப்பதாலும், தனது எண்ணங்களைக் குறிப்பிட்ட யாரிடமாவது, அல்லது எங்காவது செலுத்தக்கூடிய சக்தி உடையவராதலாலும், குறுகிய நேரத்தில் பெரும் வேலைகள் செய்ய முடிகிறது. உதாரணமாக:— ஓர் குறிப்பிட்ட மனிதனிடம் ஓர் கருத்தைக் குருநாதர் ஏற்றுக்கொள்ளும்படி செய்ய நினைத்தால், அவர் அந்தக் கருத்தைக் குறிப்பாய் அவன் மூளையில்ப் பதியும்படி, செய்யக்கூடும். அவ்விதம் அது பதிந்து அந்த மனிதனை உறுத்தியவுடன், அவன் தன்னையறியாமலே அதையேற்று,

அதைச் செயலில்க் காட்டத் துடங்கிவிடுவான். ஆனால் இவ் விதம் ஓர் அறிவை ஓர் மனிதன் மேல்ச் செலுத்துவதற்கு, அம் மனிதனுக்குச் சில உணர்ச்சியும், கருத்துக்களை வாங்கக் கூடிய சக்தியும் சிறிது அமைந்திருக்க வேண்டும். குறுகிய மனப் பான்மையுடையவர்களிடம் குருநாதர்கள் தங்கள் யோசனையைப் பதியும்படி செய்யமாட்டார்கள். மனித முயற்சியில் திறமை சாலிகள், மேதாவிகளாக யிருப்பவர்களின் குணங்களைக் கவனித்தால், கருத்துக்களை வாங்கக் கூடிய சக்தியும், தெய்வீக ஊக்கமும், அவர்களிடம் அமைந்திருப்பதைக் காணலாம். கவிவாணர், எழுத்தாளர், ஓவியக்காரர், பாடகர், பேச்சாளி, புதியன கண்டுபிடிப்பவர், தத்துவக்கியானி, விஞ்ஞானி, முதலியவர்கள் எல்லோரிடமும் இச்சக்திகளை (கருத்து களையேற்று விருத்தியடையும் சக்தி) வெளிப்படையாகக் காணலாம். ''பில்லோ'' (Philo) என்பவர், பின்வருமாறு கூறியிருக்கிறார். ''மனதில் ஒன்றுமில்லாமல் நான் வேலைக்கு வரும் சில வேளைகளில், எனது மூளை திடீரென நிரம்பி விடுகிறது. கருத்துக்கள் எனக்குத் தெரியாமலே ஏதோ மேலிருந்து பொழிவதுமாதிரி இருக்கிறது'' மற்றும் ''இராபெல்'' (Raphael) என்னும் ஓவியர் பின்வருமாறு கூறுகிறார். ''ஒருவன் படம் வரையும்போது யாதொன்றையும் நினைக்கக்கூடாது. அப்படியானால் எல்லாம் சரியாய் முடியும்'' மேற்கூடிய இரு உதாரணங்களிலிருந்து கண்காணா உதவியேற்படுகிறதென்பது குறிப்பாய்த் தெரிவதோடு, எழுத்தாளர்கள், ஓவியக்காரர்கள், கருத்துக்களை வாங்கக்கூடிய நிலையில்த் தாங்கள் அமர்ந்து கொள்வார்களானால், மானஸதந்தி மூலம், வேண்டும் கருத்துக் கள் அவர்களுக்குக் கிடைக்கும்.

குருநாதர்கள் உபயோகப்படுத்தும் சக்திகளில், மானஸ தந்தி ஒன்று. இது தவிர மறைப்புச் சக்திகளையும் (Occult Forces) மின்சார ஓட்டங்களையும் (Magnetic Currents), கையாண்டு, தேவர்களையும் தங்கள் பணியில் ஈடுபடும்படி செய்ய அவர்களுக்குத் திறமையுண்டு. அவர்கள், தங்கள் தன்னலமற்ற சேவைகளுக்கு, உபயோகிக்கக் கூடிய சக்திகளை யெல்லாம் அறிய சாதாரண மனிதனுக்கு அறிவு பற்றாது. நாம்

முன்னமே சொல்லியபடி, இவ்வுலகில் நாம் எதையும் மூன்று விதமான அளவைக் (Three dimensional space) கொண்டு தான் அறியமுடியும். ஆனால் குருநாதர்கள் நான்குவித ஐந்து வித அளவைக் கொண்டு வேலைசெய்ய முடியுமென்பதை நாம் அறிவோமானால், அவர்கள் சக்தியை ஊகிக்க முடியும்.

இத்துடன் வேறொன்றும் இதோடு சொல்லவேண்டி யிருக்கிறது. அதாவது மனிதனது குறிப்பிட்ட வாழ்நாளுக்கு மேலாக குருநாதர்கள் வாழ்நாளை நீடிக்கச்செய்து, தங்கள் ஸ்தூல உடலை நிலைபெறச் செய்யவும் அறிந்திருக்கிறார்கள். அவர்களில்ச் சிலருடைய தற்போதைய வயதைச் சொன்னால் நம்புவது கஷ்டமாகயிருக்கும். தங்கள் உடலைக் ''காயசித்தி'' செய்யக்கூடிய தன்மையினால்த்தான், தாங்கள் எடுத்த வேலையை நெடுநாள்ச் செய்ய அவர்களால் முடிகிறது. பின் சொல்லப்போகும் விஷயத்தை நன்கு அறிவதற்கு இதை நன்றாகக் கவனத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.

இந்த நூலில்ப் பல குருநாதர்கள் பெயர்களையும், அவர்கள் வகிக்கும் வேலைகளையும் பற்றிச் சொல்லமுடியாது, அதில் முக்கியமான மூவர்களைப்பற்றித் தெரிந்தால்ப் போதுமானது. அவர்கள் மூவரும் பெரிய பதவி வகிப்பவர்கள். அவர்களில் முதலாவது ''மனு'' என்பவர் (இவர் மனுதர்மசாஸ்திரம் வகுத்த மனுவல்ல) இரண்டாவது ''உலககுரு''. மூன்றாவது ''மகாசோகன்'' மனு என்பவர் சிருஷ்டிக்கப்படும் இனங்களுக் கெல்லாம் முதல்த் தலைவர் ''உலககுரு'' மதம், பிறவி முன் னேற்றம் இரண்டையும் கவனிப்பார். மூன்றாவதான மகாசோகன் என்பவரின் பொறுப்பு மக்கள் அறிவு, நாகரீக வளர்ச்சி முதலியன.

மனுவைப்பற்றி எவ்வளவோ எழுதலாமென்றாலும், இங்கே மறைஞான தத்துவ சம்பந்தமாய், அதற்குப் பொருத்த மான இரண்டொரு குறிப்பை பற்றி மட்டும் கூறுவாம்.

அதற்குமுன், பின்வருவனவற்றை நன்கு தெரிந்து கொள்ளவேண்டும் அதாவது:— மனிதவர்க்கம் பிறவி

முன்னேற்றம் இன்னும் அடையவில்லை. காட்டுமிராண்டி ஜாதிகளுடன் நம்மை ஒப்பிட்டுப் பார்த்து, நாம் எவ்வளவோ மேற்பதவியடைந்து விட்டோம், இனி இதற்குமேலடைய வேண்டிய பதவியில்லை என நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால், உடல், மனம், பாவனை முதலியவைகளில் இப்போது நாமிருக்கும் நிலை திருப்தியளிக்கக்கூடிய வண்ணம் ஏற்பட வில்லை. இவைகளிலெல்லாம் முழுதும் பரிபூரணமடையா விட்டாலும், கிட்டத்தட்டப் பரிபூரண நிலையை நெருங்கும் நிலையை நாமடைவதற்கு, இன்னும் பல நூறுண்டுகளாவது செல்லும். ஆகவே சிருஷ்டிகர்த்தாவாகிய "மனு" என்பவரின் உள்ளத்தில் நம் இனம் முன்னேறுவதற்குரிய மாறுபாடுகளைப் பற்றி சதா சிந்தித்துக்கொண்டே யிருக்கிறார். "உள் எப்படியோ அப்படித்தான் வெளியிலும், மேல் எப்படியோ அப்படித்தான் கீழும்" என்பது ஓர் மறைஞான உண்மை. வெளிஉலகத்தில்த் தோன்றக்கூடியவைகளெல்லாம், முதலில்க் கடவுள் உள்ளத்தில் உருவானவைகள்தாம். அவ்விதம் உருவாய் வெளிப்படையாகத் தோன்றியவைகளில் மிக முக்கியமானது. தற்போது ஆஸ்திரேலியா, அமெரிக்கா, நீயூஸிலந்து, முதலிய கண்டங்களில் உருவெடுத்துவரும் புதிய மனிதவர்க்கம். இதற்கு ஆருவது அடிப்படை வர்க்கம் என்று பெயர். "காப்டன்பேப்" (Captain Pape) என்பவர் இதை ஆஸ்திரேலிய அமெரிக்க இனம் எனப் பெயரிட்டு இதைப் பற்றிப் பின்வருமாறு எழுதுகிறார். "இந்த வர்க்கத்தில்ப் பிறந்த குழந்தைகளிடம், அன்பிற்குப்பதில் அன்புகாட்டும் சக்தி வெளிப்படையாகத் தெரிகிறது. மேலும் இக்குழந்தைகள் விஷயங்களை எளிதில்ப் புரிந்துகொள்ளக்கூடிய அறிவு பெற்றிருக்கிறது. நுண்ணிய யுக்தி, சிறந்த செயல்வண்மை, உணர்ச்சி, நியாயக் கட்டுப்பாடு, பிறருக்கு உதவி செய்வதில் மிகுந்த ஆவல் முதலிய குணங்கள், பொருந்தியவைகளாக இருக்கின்றன. இக்குழந்தைகள் மாமிசம் முதலிய மட்ட உணவுகளில் வெறுப்பு காட்டுகின்றன. மற்ற விஷயங்களில் சாதாரணக் குழந்தைகள் போலவே காணப்படுகின்றன. ஆகையால் இக்குழந்தைகளுக்குக் கல்வி, மதம் முதலியன புது

மாதிரியாக அமைக்கப்படல் வேண்டும். இக்குழந்தைகளுக்கு அறிவும், இரக்கமும் நிரம்பிய உபாத்தியாயர்கள் தேவையிருக்கிறது''

சென்ற எழுபத்தியைந்து வருடத்தியக் குழந்தைகளுடன் இக்குழந்தைகளை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இவைகளின் குணதிசயங்கள் மிகவும் முற்போக்கடைந்திருப்பது நன்கு தோன்றும். இக்குழந்தைகளின் உடலில்த்தான் பக்குவமடைந்த ஆன்மாக்கள் மீண்டும் பிறவி எடுக்கிறது என்பது உண்மை. இக்குழந்தைகளுக்குத் தெய்விக ஊக்கமளிக்க, ''உலக குரு'' வின் ஆணைப்படி அதற்குத் தகுதிவாய்ந்த சில மேதாவிகள் அதை நடத்தி வருகிறார்கள்.

இனி முன் சொல்லப்பட்ட குருநாதர்களைப்பற்றி விளக்கம் தருவோம்.

மனு என்பவர் சீனஉடலிலிருக்கிறார். அவர் எங்கு இருக்கிறார் என்பதையும், அவருடைய வேலைகள் என்ன (பொறுப்பு) என்பதையும் சொல்வோம். மனு என்பவர் பிறவியில் சீனர். சீனமக்களில் உயர்ந்த வகுப்பில் பிறந்தவர். அவர் முகம் தந்தத்தில் செய்யப்பட்டதுபோல்த் தோன்றும். அவர் உயர்ந்த பொன்னுடையணிந்திருப்பது வழக்கம். அவர் ஆறு அடி எட்டு இன்ச் உயரமுள்ளவர். அங்கங்களெல்லாம் எவ்வெவ்விதம் அமைய வேண்டுமோ அவ்வவ்விதம் அமையப் பெற்றவர். முகத்தில் மிகுந்த ஒளி பொருந்தியவர். நீண்ட மூக்கும் பெரிய வளர்ந்த தாடியும், தவிடு நிறக் கண்களுமுடையவர். இமயமலையில் வசிக்கிறார். மனுவின் வேலை பிறவி சம்பந்தமானது. பிறவியில் எந்தெந்த இனத்திற்கு எப்படி எப்படி உடல் அமைய வேண்டுமோ, அதில் கவனம் செலுத்துவார். மக்கள் இனங்கள் இன்னின்னயிடத்தில் பரவ வேண்டுமென்பதும், அவர்கள் முன்னேறுவதற்கு வேண்டுவனவற்றையும் அவர் செய்வார்.

இனி உலக குரு (ஜெகத்குரு) என்பவரைப்பற்றிச் சொல்வோம். தற்கால உலக குருவிற்கு மைத்திரேயர் எனப்

பெயர். இவர் புத்தபகாவானின் உடன் பிறந்தவர். இவரைத் தான் கிருஷ்ணன் என்றும், கிருஸ்து நாதர் என்றும் சொல்வது, புத்தபகவான் இன்னும் மேலான பதவியை நாடிச் செல்ல வேண்டியதால், தனது உலக குருபதவியை மைத்திரேயரிடம் ஒப்புவித்துச் சென்ருர். அது முதல் அந்தப் பதவியை இவர் வகித்து வருகிருர். இவர் கிருஷ்ணன் என்னும் பெயருடன் நம் நாட்டில் இருமுறை தோன்றியிருக்கிருர். பாலஸ்தீன மலை நாட்டில் கிருஸ்துநாதர் என்னும் பெயருடன் தோன்றினர். இவர் தற்சமயம் செல்டிக் (Celtic Body) உடலில் இருக்கிருர் அவர் எல்லோரையும்போல் பிறந்திருந்தபோதிலும், தன் மாணுக்கர்களின் ஆத்மீக வளர்ச்சியால் பரிசுத்தப்படுத்தி வைக்கப்பட்ட தன் மாணுக்கர் உடலையும் தான் எடுத்துத் தனது பணிக்கு உபயோகப்படுத்திக் கொள்வார். மற்றவர்களின் உடலைத் தங்கள் பணிக்கா உபயோகப்படுத்திக்கொள்ளும் வழக்கம் சில மேலான குருநாதர்களால்த்தான் முடியும். அவர் முகம் அதிசயமான அழகு வாய்ந்தது. தலைமுடி செம் பொன் நிறத்தோடு தோளிற்கீழ்த் தொங்கிக்கொண்டிருக்கும். அவர் தாடி படங்களில்க் காணப்படுவது போல் வெட்டி விடப் பட்டிருக்கும். அவர் கண்கள் ஆழ்ந்த நீல நிறமுடையதாய், இரண்டு பூக்கள் போலவும், விண்ணிலுள்ள வான் மீன் போல வும், எக்காலத்தும் அழியாத அமைதியென்னும் நீர் நிரம்பிய தடாகத்தைப்போலிருக்கும். அவரது புன்முறுவலைப் பற்றி விளக்க வார்த்தை கிடையா. இவரிடமிருந்து வெளிப்படும் ஒளி (பிரணப — கிரணம்) சாதாரணகாலத்தில் இரண்டரை மைல்ச் சுற்றளவிற்குப் பாயும். அவ்வொளியில் ரோஸ், மஞ்சள், கட்டிப்பச்சை, நீலம், செந்நீல முதலிய நிறங்கள் தோன்றும்.

அவர் இமயமலையின் தென்சரகில் மனுவின் வீட்டிற்குப் பக்கத்திலிருக்கிருர். அந்த வீட்டைச் சுற்றி ஓர் அழகான தோட்டமிருக்கிறது. சில வேளைகளில் அவர், பல அறைகள் கொண்ட தனது வீட்டிற்கு முன் உள்ள பெரிய மண்டபத்தி உட்க்கார்ந்து, தனது தோட்டத்தையும் கீழத்தெரியும் பள்ளத் தாக்குகளையும் பார்த்துக்கொண்டிருப்பார். கரையில்ச் சரிகை வேலை செய்த பெரிய வெண் அங்கியுடன் (ஆடை) மாலை

நேரத்தில், நறுமணம் கமழும் தனது தோட்டத்தில் உலாவுவதைக் காணலாம். இத்தோட்டத்திற்குச் சிறிது தூரத்தில் மனு என்பவர் வசிக்கும் கல் கட்டிடம் அநேக தூண்களோடு விசாலமாகயிருப்பதைக் காணலாம்.

உலகத்தில் தோன்றிய மதங்கள் எல்லாவற்றையும் கவனிப்பதே இவர் முக்கிய வேலை. அந்த வேலைகளுக்கு அநேகமா இவர் நேரே தனது உடலில்ப் போவதில்லை. தனது மாணுக்கர்களைக் கொண்டு அவ்வேலையைக் கவனித்து வரும்படி செய்கிருர். பற்பல காலங்களில், ''நாகார்ஜ்சுனன்'', ''இராமானுஜர்'', ''மாதவாச்சாரியார்'' போன்ற மாணுக்கர்களை அனுப்பி வெவ்வேறு சமயப்பிரிவுகளை அமைத்து, அவைகள் மூலம், மதங்களின் மறைபொருளுண்மையை விளக்கியிருக்கிருர். இதில் முஸ்லிம் மதம் தோன்ற தனது மாணுக்கர் ஒருவரையும் அனுப்பினுர். எனவே மதசம்பந்தமான வேலைகள் முழுவதும் இவர் ஆணையின் கீழ்ப்பட்டது.

o

இனி மூன்ருவதான மகாசோகன் என்பவரைப் பற்றிச் சொல்வோம். சோகன் என்பது இராஜ புத்திய வார்த்தை. ஆங்கிலத்தில் நீதிபதிகளையும் குருமார்களையும் குறிக்கும் ''லார்ட்'' (Lord) என்பது போன்ற மரியாதைப் பதம். மகா சோகன் என்பவர் நம் தமிழ்நாட்டில் பிறந்தவர். உருவத்தில் உயரமாகவும், ஒடுங்கிய உடலமைந்தவராகவுமிருக்கிருர். அவரது நீண்டமூக்கு பார்ப்பதற்கு மிகவனப்பாகயிருக்கும். இவருக்குத் தாடி இல்லை. முகம் பளபளப்பாக இருக்கும். முகம் அதிகாரதோரணை வாய்ந்ததாகயிருக்கும். கண்கள் கூர்மையாகவும் ஆழமாகவும் தென்படும். இவர் அநேகமாகத் தொடர்ச்சியில்லாமல், போர்வீரன்போல்ப் பேசும் குணமுடையவர். இவர் நம்நாட்டு ஆடையே அணிந்திருப்பார். இவரிடமிருந்து வெளிப்படும் பிரபை இரண்டு மைல் சுற்றளவிற்குப் பாயும்.

மனுவின் வேலையும் உலககுரு வேலையும் தவிர மற்றெல்லா வேலைகளையும் கவனிக்கவேண்டியவர் இவரே. உலகம் தோன்றிய நாள் முதல், நாளது வரை, உலகத்தில் நடந்த

செய்திகளின் குறிப்பு இவரிடம்தானிருக்கிறது. மகாவெண் சகோதர சங்கத்தின் உறுப்பினர்களின் வேலைகளைக் கவனிப்ப வரும் இவர்தான். இவர் மக்கள் அறிவையும் நாகரீகத்தையும் சுழன்று வரும் கரும சட்டத்திற்கேற்றபடி நடத்துவார். குரு நாதர்கள், தங்கள் மாணுக்கர்களைப் பயிற்சிக்காகப் பொறுக்கி யெடுத்து, ஒவ்வொரு தீட்ச்சை செய்யும் போதும், ஷை மாணுக் கர்களை குருநாதர்கள், மகாசோகன் முன் அறிமுகப்படுத்துவார் கள். உடன் அம்மாணுக்கர் பெயரையும் தகுதியையும் என்றும் அழியாத தனது பத்திரத்தில் இவர் பதிந்துகொள்வார்.

இந்த மூன்று குருநாதர்கள்தான், கடவுளுக்கும் நமக்கும் உள்ள துடர்ச்சி.

இக்குருநாதர்கள் மூவரும் இவர்கள் போன்ற மற்ற குரு நாதர்களும் முத்தியையடைந்தவர்கள். அதாவது பிறவி யற்றவர்கள். இவர்கள் முத்திநெறியில் சாதாரணப் படிகளைக் கடந்தபின், ஏற்றமான படிகளையும் தாண்டினவர்கள். அவர்கள் உலகிற் கற்கவேண்டியவைகள் ஒன்றுமில்லை. தெய்வ ஒளி பாயப்பெற்றவர்கள். நாம் கடக்கவேண்டிய வழியை அவர்கள் முன்னமே தாண்டி, படிப்படியாக அதன் கரைகண்டு, தங்கள் அறிவை பரக்கச் செய்திருப்பதால், இந்த உலகமட்டுமல்லாமல் நிர்வாண உலகமென்று சொல்லப்படும் ஐந்து உலக அறிவை யும் கொண்டவர்கள். தன் ஒளி (சுயம்பிரகாசம்) என்று சொல்லப்பட்ட தனி ஒளி நம் எல்லோரிடமுமிருக்கிறது. அது தெரியாமற், சுற்றியிருக்கும் கண்ணுடி, நம்மிடம் அழுக்கடைந் திருக்கிறது. இம் மூவரும் தங்களிடமுள்ள கண்ணுடியைக் கழுவி விட்டதால் ஒளி வெளிப்படும் தன்மையுடையவர்களாக யிருக்கிருர்கள். இதற்குமேல் அவர்கள் தெய்வமாகவேண்டியது தவிர வேறொன்றுமில்லை.

இவர்கள் பிறக்கவேண்டிய அவசியமில்லாவிட்டாலும், மக்கள் உய்யும்பொருட்டு, இவ்வுலகில் வேண்டுமென்றே மானிட உடல்தாங்கி வருகிருர்கள். (அவதரிக்கிருர்கள்)

இவர்கள் தங்கள் புண்ணிய யாத்திரையை முடித்து விட்டதின் பயனாய் அவர்களுக்கு ஏழுவிதமான வழிகள் திறந்து விடப்பட்டிருக்கின்றன. அதில் ஓர் வழியான மீண்டும் பிறவி எடுத்து வேலை செய்தல், என்னும் வழியை மேற்கொண்டு இவர்கள் நமக்கு உதவி செய்கிறார்கள். மேலே சொன்ன ஏழு வழிகளில், எந்த வழியில் நாம் செல்வதென இவர்கள் கருதிக் கொண்டிருக்கும் காலம்; உலகத்தில் மக்கள், இருளிலிருந்தும், துன்பத்தினாலும், ஒழுக்க இழிவினாலும், துயருறுவது கண்டு; விவேகமில்லாமலும், நாதியற்றும், குருடாகக் கிடக்கும் நம் மேல் கருணைகொண்டு, மக்கள் மாணிக்கமாகிய இவர்கள், மீண்டும் உதவி செய்யப் பிறவி எடுக்கிறார்கள். இவர்கள் களைந்த சட்டையை மீண்டுமணிந்துகொள்வது நம்மைக் காப்பாற்றும் பொருட்டேயாம். இவர்கள் தூயவழியில் நடந்து பரிபூரணமடைந்து, இறப்பை (சாவை) யொழித்து, ஊழி காலமும் நிலைபெற்றிருக்கும் தன்மையடைந்து விடடதால், குறையுள்ள நமக்கு உதவுவான் வேண்டியே பிறப்பிற்குள்ளா கிறார்கள். முக்கால முழுமை அனுபவமுடையவர்களாதலால், அதை நாமுமடையும் வரை, நமக்காகக் காலத்தின் நிழலில் ஒதுங்கி நிற்கிறார்கள்; இவர்கள் பேரின்ப வீட்டின் கதவைத் திறந்தவர்களாதலால், அவர்களுக்கு முன் நாம் எல்லோரும் பேரின்பமடையக் கருதி, திறந்த அக்கதவின் பக்கம் தாங்கள் நின்றுகொண்டிருக்கிறார்கள். அக்கதவை முதலில் திறந்தவர் கள் இவர்கள்தான். ஆனால், அந்த இன்பத்தை மற்றவர்க ளோடுதான் அடைய வேண்டும் என விரும்புகிறார்கள்.

இந்த வகையில் இவர்கள் உணர்ச்சியைப் பற்றி ''வசந்தம்மையார்'' (Mrs. Besant) பின்வருமாறு எழுது கிறார்கள்.

''எங்கள் சகோதரர்கள் (மக்கள்) எல்லோரும் எங்கள் அமைதியில்ப் பங்கு கொள்ளும்வரை நாங்கள் அமைதியை ஏற்கமாட்டோம். எங்கள் சகோதரர்கள் விடுதலையடையும வரை நாங்களும் விடுதலை அடையோம். ஏனெனில் அவர்கள்

(மக்கள்) அந்த விடுதலை இன்பத்தை யனுபவியாமல் வருந்திக் கொண்டிருக்கும்போது, நாங்கள் அதை அனுபவிப்பது சரி யல்ல. எங்கள் சகோதரர்களை பிறப்பு இறப்புச் சுழலில்ச் சிக்கவைத்தும், அவர்களை அறியாமையிலும் இருளிலுமிருத்தி யும், உதவியில்லாமலும் தவறுதல்களோடும், தவிக்கும்படி விட்டு விட்டு நாங்கள் முத்தி (நிர்வாணநிலை) ஏற்றுக்கொள் ளோம். நாங்கள் ஞானத்தை யடைந்திருந்தோமென்றால், அது அவர்களுக்கு (மக்களுக்கு) அறிவு ஊட்டுவதற்கேயாம். நாங்கள் வலிமைபெற்றிருக்கிறோமென்றால், அது அவர்கள் பணி செய்வதற்கேயாம். மக்கள் வெந்துயர்கண்டு துடிக்கப் பழகி யிருந்தோமானால், மக்களுக்கு அத்துயர் நீங்குமுன் நாங்கள் மட்டும் இவ்வுடலைக் களைந்து அத்துயரில்லாதயிடம் சேர்வதால் என்ன பயன். ஆகையால், நாங்கள் மக்களுக்குப் பணியாற்றக் கூடிய இடத்திலேயே இருந்து மக்களுக்காக உழைப்போம். மக்களின் ஒவ்வொரு துன்பமும் எங்களைத் தாக்கட்டும். மக்கள் வெந்துயர் தீண்டி எங்கள் நெஞ்சைப் பிழியட்டும், மக்கள் அனைவரும் விடுதலையடையும்வரை அவர்கள் எல்லாத்தவறுதல் களும், அவர்கள் பாவங்களனைத்தும், அவர்கள் குற்றங்க ளனைத்தும் எங்களதாகட்டும்.''

# 9. தொலைவிலுணர்தல்

நாம் இந்நூலில் அடிக்கடி ஞானக்கண் பார்வையைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறோமாதலால் அப்பார்வை என்ன வென்றும் அதை எப்படி அடையக்கூடுமென்பதையும் சொல்ல வேண்டியது அவசியமாகிறது. எந்தவிதமான ஞானத்தை யடையவேண்டியபோதிலும் பகுத்தறிவு எவ்வளவு முக்கியமோ அதேபோல் ஞானப் பார்வையும் திறம்பட அடையவேண்டு மானல் பகுத்தறிவு முக்கியம் வேண்டும். ஆகையால் ஞானப் பார்வை (Clairvoyant Sight) பெறும் வழியை விஞ்ஞான முறையில் ஆராய்ச்சி செய்யவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அவ்விதம் செய்வதால் அச்சக்தியில் கீழ்த்தரம் மேல்த்தரம் என்பவைகளின் வித்தியாசம் தெரிவதற்கும், நம்பத்தகுந்த திற்கும் நம்பத்தகாததிற்கும் முள்ள வித்தியாசங்களைத் தெரிந்துகொள்ளவும் முடியும்.

இந்தத் தொலைவிலுணரும் சக்தி "(ஞானக்கண் பார்வை-Clairvoyant Sight) யாதனு சரீரத்தில் (Etheric Body) சில அமைப்புகளை (இடங்களை) அதிக உணர்ச்சிச்குள்ளாக்குவதால் (Stimulation) அது, (அவ்வுணர்ச்சி) நமது உடலிலுள்ள கபஞ்சுரக்கும் உருப்பையும், (Pituitary Body) நமது கண் ணுடன் துடர்ச்சியுள்ள உறுப்பையும் (Pineal gland) இயக்கி ஊனக்கண்ணுக்குக் காணமுடியாதவைகளைக் காணும்படி செய்கிறது.

இத்தத் தொலைவிலுணர்தலில் குறைந்த தரமானதுதான் எல்லோரும் கேள்விப்படும் "வருங்கால நிகழ்ச்சியை அறி விப்பது" என்பது. அதாவது சாதாரண சுவாமி ஆவேசங் கொண்டவர்கள் சொல்லுவதும், குறிகேட்பதென்பதும். இவைகள் அநேகமாய் நம்பமுடியாதவண்ணமிருப்பதால், ஞானப்பார்வை என்னும் கலைக்கே இதனல் இழுக்கேற்படும் வண்ணமிருக்கிறது. இவை முற்றிலும் உண்மையல்ல. ஆனல் சிலது உண்மைதான் என்று கருதுபவர்களும்கூட இப்பார்வை யால்ச் சொல்லுகிற குறிகள் பலிப்பதும் பலிக்காமல் போவ தையும் கண்டு திகைக்கிறர்கள்.

இருந்தாலும் மறைஞான மாணுக்கன் இவ்விஷயத்தில் மற்றவர்கள்போல் திகைப்படைவதில்லை. ஏனெனில் மனிதன் தற்கால பிறவி முன்னேற்றத்தை யடைந்திருக்கும் நிலைமையில் வருங்கால நிகழ்ச்சிகளைத் திட்டமாயறிவது தடைசெய்யப் பட்டிருக்கிறது. அதற்கு ஓர் தெளிவான காரணமுண்டு "வருங்கால நிகழ்ச்சி யறியும் சக்தி மனிதனுக்கு ஏற்பட்டால் அவன் ஓர் வேலையும் செய்யான்" என்று ஓர் குருநாதர் சொல்லி யிருக்கிறார். முயற்சியினுல் மனிதன் மேலேறி, பொருமை, பரந்த நோக்கம் முதலிய நற்குணங்களை யடையமுடியுமாதலால் அவன் வருங்கால நிகழ்ச்சியறியும் தன்மையடைந்து, அதனுல், தான் எடுக்கப்போகும் முயற்சி வீணுய்விடுமென்பதை யறிவானுயில், அவன் முயற்சிக்காமலே நின்றுவிடுவா னல்லவா? நாம் எடுக்கப்போகும் காரியம் பயன்தராதென்பதை முன்கூட்டியேயறிந்தால், யாராவது அதற்காக வேலைசெய் வார்களா? இது ஓர் தெளிவான விஷயம். இது தெளிவாக இருப்பதால்த்தான் அதை மக்கள் கவனிக்கிறதில்லை. குறி சொல்பவர்களிடமோ, அல்லது தேவ உபாசனை உடையவர் களிடமோ (சுவாமிகொண்டாடி), மக்கள் தங்களுக்கு உகந்த வைகளைக் கேட்கலாமெனச் சொல்கிறுர்கள். குறிசொல்பவர்கள் சொல்லும் சங்கதி பலிதமாகவில்லையானுல் குறைகூறுகிறுர்கள். சாதாரணமாக இப்படி இருந்தபோதிலும், தொலைவிணர்தலை (ஞானப்பார்வையை) சரியாகப் பார்க்கப் படித்து, உண்மை யிலேயே மக்களுக்கு உதவி செய்ய எண்ணங்கொண்டவர்கள் சொல்லும் வருங்கால நிகழ்ச்சிகளைச் சாதாரண குறிசொல் பவர்கள் கூற்றுப்போல் உதறிவிடக்கூடாது. இம்மேதாவி களின் அறிவுரைகளும் (Advice) முன்னறிவிப்புகளும் (Prognastications) மிகவும் பலனளித்த சந்தர்ப்பங்கள் பல இருக்கின்றன. குருநாதர்கள் தங்கள் மாணுக்கர்களுக்கு நேரடியாக உபதேசம் செய்யமுடியாத காலங்களில், தங்கள் கருத்துரைகளையும், எவ்விதம் நடக்கவேண்டுமென்பதையும் இம்மேதாவிகளின் வாக்கினுல் உபதேசிக்கும்படி செய்திருக் கிறுர்கள்.

தனிப்பட்ட மனிதனின் எதிர்கால நிகழ்ச்சிகளைப் பற்றித் திட்டமாய் ஏன் சொல்ல முடியாதென்பதற்குரிய முக்கிய காரணங்களைச் சொன்னோம். இது மறைஞானிகளுக்குத் தெளிவான விஷயம். ஆனால் இதைச் சாதாரண மக்கள் அறிய முடியாமல் இருக்கிறார்கள். வருங்கால நிகழ்ச்சிகள் அறிவிப்பதில் ஒன்று பலிப்பானேன் மற்றொன்று பலியாமல் போவதேன். என்பதை உதாரணமூலம் விளக்குகிறோம். தாழ்ந்து பறக்கும் விமானத்தில் ஓர் விமானியிருப்பதாக நினைத்துக்கொள்ளுங்கள். அவன் விமானத்திலிருந்து கீழே பார்க்கும்போது, நான்கு பாதைகள் சந்திக்கும் ஓர் இடத்தைப் பார்க்கிறான். அவன் பார்க்கக்கூடிய உயரத்திலிருந்து, நான்கு வெவ்வேறு பாதைகளிலிலும் வருகிறவர்கள், நான்கு பாதைகளும் சந்திக்குமிடத்தில் எப்போதுவந்து சேருவார்கள் என்பது அவனுக்குத் தெரியக் கூடும். அதை அவர்கள் நடந்துவரும் வேகத்தைக் கொண்டு விமானிகணக்கிடமுடியும். இந்தநிலைமையில் விமானிவிமானத்திலிருந்து நான்கு பாதைகளில் வரும் எவரிடமேனும், ''நீஇன்ன இடத்தில், இவ்வளவு நேரத்தில், இன்னாரைச் சந்திப்பாய்'' என்று சொல்லிவிட்டுப்போய் விடுகிறான் என்று வைத்துக் கொள்வோம். என்ன நடக்கும் என்பதை யோசியுங்கள். ஏதாவது அசந்தர்ப்பம் நிகழாவிட்டால், விமானி சொன்னது சொன்னபடியே நடக்கும். ஆனால் இன்னாரைச் சந்திப்பாய் என்று சொல்லப்பட்டவன், இந்த வழியை விட்டு இடையே வயல்களுக்குப் போகவேண்டும் என எண்ணிப் போனாலும், அல்லது சற்றுஉட்கார்ந்து இளைப்பாறவேண்டும் எனஎண்ணித் தாமதித்தாலும், விமானி சொன்னபடி சந்திக்க முடியாமற் போனாலும் போகலாம், அல்லது விமானி சொன்ன நேரங் கழித்தபின் சந்தித்தாலும் சந்திக்கலாம். மேலும் விமானி ஒரு நபரையல்லாது பல நபர்களைக் குறிப்பிட்டு இவ்விதமே சொன்னபோதிலும், அதில் சிலது விமானி சொன்னபடி நடைபெறலாம். சிலது நடைபெறாமல்ப் போகலாம். விமானி பலரைக் குறிப்பிடும்போது, அதிலொருவன் பூக்கள் கொய்வதற்காகத் தாமதிக்கலாம், மற்றொருவன் வழியிலுள்ள சத்திரத்தில்த்தங்கி விடலாம், எனவே இந்தமாதிரி நடக்குமென்பதை விமானி

கணக்கிட்டிருக்க முடியாது. இந்த உதாரணம் மிகச் சிறிய உதாரணந்தான், ஆனல் பொருத்தமானதுதான். இது ஞானப் பார்வை (தொலைவிலுணரும் சக்தி) விசால நோக்கமுடைய தென்பதை மெய்ப்பிக்கப் போதுமானது. இச்சக்தியின் சிறிய அளவைக் கொண்டு, அநேகமாய் நிகழக் கூடியவைகளைச் சொல்லமுடியும். திட்டமாய் இன்னபடிதான் நடக்குமென்பதைச் சொல்ல முடியாது. மனிதனுக்குப் பூரண சுதந்திரம் கொடுத்திருக்கும்போது அவன் செய்கையை எப்படித் திட்டமாய்க் கூற முடியும்? மேலும் ஆன்மா எவ்வளவிற்கெவ்வளவு முன்னேற்ற மடைந்திருக்கிறதோ, அவ்வளவிற்கவ்வளவு அதற்கு சுதந்தர உணர்ச்சியும் அதிகமாயிருக்கும், சாதாரண ஆன்மாவின் (Ordinary man) வாழ்க்கையமைப்பு (Life plan) அநேகமாய் இன்ன விதமாகத்தான் நடக்கும் என்பதை அறியமுடியும். முதிர்ந்த ஆன்மாவின் வாழ்க்கை (Advanced souls) அவ்வித மிராது. ஞானப்பார்வை பெற்றவர்கள் (Clairvoyants) ஏன் சிலரின் வருங்கால நிகழ்ச்சிகளை சரியாய்ச் சொல்லமுடிகிறது, ஏன் சிலருடைய நிகழ்ச்சிகளைச் சரியாய்ச் சொல்லமுடியவில்லை என்பதின் காரணத்தை இது விளக்குகிறது. உதாரணமாக, குருநாதர் ஒருவருடைய மாணக்கன் ஒருவன் கர்மவினையால் ஏற்பட்ட பிணியின் காரணமாக, நோய்வாய்பட்டு உடல்வலி (பலம்) குன்றியிருக்கும்போது, ஓர் ஞானப் பார்வையாளி (Clairvoyant) அவனை நோக்கி "நீ இன்னும் சிலருடன் கூடி சில முக்கிய பணிகள் ஆற்றவேண்டியதிருப்பதால் நீ குணமடைந்து விடுவாய்" என்று சொல்லியிருந்தான். ஆனல் அவன் (Clairvoyant) சொன்னபடி அவனுடன்கூடி வேலை செய்பவர்கள் வரவில்லை. அவன் சொல்லிய பணியும் நிகழாமல்ப் போய்விட்டதோடு நோயும் நீங்கவில்லை. இதைப்பற்றி மாணக்கன் தன் குருநாதரிடம் கேட்டபோது, குருநாதர் பின் வருமாறு மாணக்கனிடம் சொன்னர். "உனது கூடப் பணியாற்றவேண்டியவர்கள் தாமதித்துவிட்டபடியால், நீ, அந்தப் பணியாற்ற முடியாமற் போனய். எனவே உனது ஆன்ம உணர்ச்சி, இச்சமயத்தைப் பயன்படுத்தி, பிணி மூலம் உனது கர்மக் கடனை நிவர்த்தி செய்ய எண்ணங் கொண்டுள்ளது."

இனி, மேற்கொண்டு மற்றவைகளை ஆராயுமுன், ஒன்று சொல்லவேண்டியிருக்கிறது. அதாவது வருங்கால நிகழ்ச்சிகளை முன்கூட்டிச் சொல்வதில், முக்கியமான ஓர் இக்கட்டு என்னவெனில், அகப்பொருளுக்கும் (Subjective) புறப்பொருளுக்கும் (Objective) உள்ள வித்தியாசங்களைச் சரியாக அறிய முடியாததுதான். அதாவது எண்ணத்தாலுண்டான உருவங்களுக்கும் (Thought Forms) கண்களால்க் காணக்கூடிய உருவங்களுக்கும் உள்ள வித்தியாசம் தெரியாததுதான். இது எண்ணத்தாலேற்பட்ட தோற்றம், இது உண்மையான தோற்றம் என்பதைத் தெளிவாய்த் தெரிந்துகொண்டால், வருங்கால நிகச்சிகளைத் திட்டமாய்க் குறிப்பிடலாம். இல்லையேல், முன் சொல்லியபடி, சிலது பலிக்கும் சிலது பலிக்காது. உதாரணம் வேண்டில் பின்வருவனவாற் தெளிந்துகொள்ளுங்கள். குறிப்பிட்ட காரியம், இனி எப்படி நடக்குமென்பதையறியவேண்டி, மக்கள் குறி சொல்பவன் அல்லது தொலைவிலுணர்ப்பவனிடம் (Clairvoyant) சொல்கிறார்கள். தாங்கள் நினைத்துவந்த காரியம் இன்னதுதானென்று தெளிவாய்ச் சொன்னவுடன், அதிசயத்துடன் மகிழ்ச்சியடைகிறார்கள். ஆனால், இனி நடக்கப்போவது பலிக்கவில்லையானல், ஏமாற்றமடைகிறார்கள். இதற்குக் காரணம் மிகத் தெளிவானது: குறிகேட்கப் போகிறவர்கள், இன்ன விஷயமாய்க் கேட்கவேண்டும் என்ற மனஉறுதியுடன் போவதால், அவர்களின் எண்ணங்கள் அப்படியே உருவமாகி குறி சொல்பவனுக்குத் தோன்றுவதால், அவன் அதைத் தவருமல்ச் சொல்லிவிடுகிருன். அத்துடன் குறிகேட்கப் போகிறவர்களின் மற்ற எண்ணங்களும் (அதாவது அவர்களின் ஆசை, பயம் முதலியன) அவனுக்கு (குறி சொல்பவனுக்கு) உடன் தொன்றுவதால், இத்தோற்றங்கள் இன்னதாலுண்டானது என்பதைக் கண்டுபிடிக்க முடியாமல், அதையும் உண்மையென நினைத்து அதற்கேற்ற பலன் சொல்லுகிருன். இதன் வித்தியாசங்களைத் தெரிவதற்கு இக்கலையில் (தொலைவிலுணர்தல்) மிகுந்த பழக்கமும் அனுபவமும் வேண்டும்.

ஆகையால் இக்கலை மிகுந்த ஏமாற்றத்திற்கும் சிக்கலுக்கும் உள்ளாகியிருக்கிறது. இக் காரணங்கள் கொண்டுதான், குருநாதர்கள், மாணுக்கர்களை, இதிலதிக ஈடுபடும்படி செய்கிறதில்லை. இக்கலை சிரமப்பட்டுக் கற்றறிவதைக் காட்டிலும், ஜென்மாந்தர வாசனையில் வருவது நல்லது. இயற்கையில்ச் சிலருக்கு இது அவ்விதம் அமைந்திருக்கிறது. ஆனுல் அவ்விதம் அமையப்பெற்றவர்களிற் பலர், மறைஞானக் கல்வியில் நோக்கமில்லாதவர்களாக யிருப்பதால், இக்கலையை விருத்தி செய்ய அவர்கள் எண்ணங்கொள்வதில்லை. அவர்கள் தன்மை, கேள்விக்கியானத்தால் சங்கீதம் பயின்றவர்கள் தன்மையையொக்கும். கேள்விக்கியானத்தால்ப் பாடுகிறவர்களின் சங்கீதம் காதுக்கினிமையாகயிருக்கலாம், ஆனுல் அதைச் சங்கீத இலக்கணம் ஒப்பாது.

மனித உடலிலிருந்து வெளிவீசும் கிரணத்தைப் (ஒளி வட்டம் — பிரபை — Aura) பார்க்கக்கூடிய சக்தி, தொலைவிணுணர்தலின் மற்றொரு அம்சம் (தன்மை — Aspect) மனிதனின் பிரபை (அதாவது உடலிலிருந்து கிரணம்போல் வீசும் ஒளி) அவனது உடல் நலத்தையும் (Health) சுபாபத்தையும் (Character) நன்கு தெரிவிக்கும். இதை நம்பாதவர்கள் அவ்விதம் ஒன்றுமில்லையெனச் சொல்வார்கள். அவர்கள் கூற்று தவருனது. ஏனெனில், இரத்தமும் சதையும் கொண்ட ஓர் உடலிலிருந்து, வானவில்லிலுள்ள நிறங்கள் (Rainbow Colours) தோன்றுவானேன்? அவ்விதம் தோன்றுவதில், மஞ்சள் நிறம் மிகுதியாகக் காணப்பட்டால், அவர்கள் (ஆணுனலும் பெண்ணுனலும்) அறிவுள்ளவர்கள் என்றும், நீலம் தெய்வ பக்தியையும், கோரமான சிகப்பு சிற்றின்ப நோக்கத்தையும், மற்றும இவ்விதமே மற்ற நிறங்களும் அதனதற்குரிய குணங்களையும் காட்டுவானேன். இவைகளுக்கு, இதை நம்பாதவர்கள் பதில்ச்சொல்ல முடியாமலிருக்கிருர்கள்.

பிரபையைப் பார்த்துக் குணங்களைச் சொல்லும் திறமைக்கு மிகுந்த அனுபவம் வேண்டும். முன் சொன்னது போலவே, ஆன்ம வளர்ச்சிக்குத் தகுந்தபடி, பிரபையின் நிறங்களும்

சிக்கலாகக் காணப்படும். எவ்விதம் இரேகை சாஸ்திரத்தில், ஓர் இரேகை மற்ருெரு இரேகையின் குணத்தை மாற்றுமோ, அதேபோல்த்தான், பிறபையின் நிறங்களும், பல சுபாவங்களை யும் சேர்த்துக் காட்டும். பிரபை நிறம் திட்டமாய்ச் சரியாய்ச் சொல்வத்ற்குத் தொலைவிலுணரும் சக்தி மட்டும் போதாது. சொல்பவர் உளநூல் ஆராய்ச்சியாளராகவும் (Psycholigist) இருக்கவேண்டும். தொலைவிலுணரும் திறமையுடையவர்களில்ப் பலர், தங்களது ஞானப் பார்வையின் திறம்மட்டும் போதுமென வெண்ணி, உளநூலாராய்ச்சி யில்லாமலிருப்பதால், அவர் சொல்லும் குறிப்பு தவறிவிடுகிறது. சிலவேளைகளில், தாங்கள் குறிபார்த்துச் சொல்லப்பட்ட மனிதர்கள், தங்களுக்கு வேண்டி யவர்களாகயிருந்தால், அவர்கள்மேலுள்ள அன்பினுல், அவர் களிடம் காணப்படும் நற்குணங்களை அதிகமாகப் பயன்படுத்தி, அவர்களிடம் காணும் கெடுதியை நோக்காமல் பலன் சொல்லி விடுகிருர்கள். தங்கள் நண்பர்களின் பிரபையில்ச் சில கெடு குறிகளைக் கண்டபோதும், அத்துடன் வேறு சில நன்மை பயக்கும் குறிகளும் காணப்படுவதால், தாங்கள் அவர்கள்மேல்க் கொண்ட அன்பினுல், அதை மிகைப்படுத்திக் குணத்தையே சொல்லிவிடுகிருர்கள். பின்னுல்த் தாங்கள் சொல்லியது பலிக்காமல்ப் போனுல் தங்கள் குறியில் ஏதோ தவறு என்று சொல்கிருர்களேயொழிய, தாங்கள் அன்பு மிகுதியால்ச் செய்த தவறையொப்புக் கொள்கிறதில்லை. மேலும் நடிகர்களின் (நாடகக்கலை பயின்றவர்கள்) பிரபை அடிக்கடி மாறும் தன்மை யுடையதாதலால், ஞானப் பார்வையாளர்கள் இப்பேர்ப்பட்ட வர்களின் குணத்தைக் கண்டுபிடிக்க முடியாமல் மயங்குவது சாதாரணம். மனிதனின் அந்தராத்துமாவின் செயல்களை யறியக்கூடிய திறன் வாய்ந்தவர்களால்த் தான் அது சொல்ல முடியும்.

பிரபை பார்க்கும் சக்தி ஒருவருக்கு ஏற்பட்டுவிட்டால், அத்துடன், வனதேவதைகள், கூளி, குறளி, நீர்த்தேவதை கள் முதலியவைகளைப் பார்க்கும் திறனும் உடனடியாக வந்து விடும். இத்திறனுல் இவ்விதமான தேவதைகள் உண்டு

என்பதை நிரூபிக்க முடியுமேயொழிய இதனுல் வேறு பலன் கிடையாது.

நாம் முன் ஓர் இடத்தில்ச் சொன்னபடி, ஞானப்பார்வை யாளர்கள் (Clairvoyants) தங்கள் நோக்கை (பார்வையை) எண்ண உலகின்மீது (Astral World) செலுத்தி, அங்குள்ளவர்களின் குணதிசயங்களையும், அவ்வுலகில் வசிப்ப வர்களின் உடல்களையும் காணமுடியும். இது மிகுந்த உதவி பயக்கக்கூடிய காரியம். ஆனல் அவ்வுலகிலுள்ள மட்டரகமான உருவங்கள் (பேய் பிசாசு போன்றவைகள் — Elemental Essence) மனஉறுதியில்லாத ஞானப் பார்வையாளர்களை பயப்படும்படி செய்வதோடல்லாமல், சில கெடுதிகளையும் அவர் களுக்கு உண்டுபண்ணும். எதற்காக எல்லா வகைகளிலும் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும் (பல கலைகளிலும் ஆராய்ச்சி செய்திருக்க வேண்டும்) என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு. ஆசை உலகிலுள்ள பிராணிகளின் செய்கை, நம்பத்தகாதனவா யிருப்பதால், இவ்வுலகப் பார்வை மட்டும் (Astral Vision) கொண்டிருப்பவர்களுக்கு, இதனுல்ச் சில குறைகள் ஏற்பட லாம். ஏனெனில், ஆசை உலகிலுள்ளவர்கள், தங்களுக்கு விருப்பமான உருவங்கள் எடுக்க வசதியிருப்பதால், அவர் களில்ச் சிலர், ஜாக்கிரதையற்ற ஞானப்பார்வையாளர்களை, தங்களுக்கு இயற்கையாயில்லாத உருவமெடுத்து ஏமாற்றக் கூடும். தங்களுக்கு மிகுந்த சக்தியுண்டென்று மற்றவர்கள் நம்புவதில்ப் பிரியம் கொள்ளும் இவ்வுருவங்கள், சில வேளை களில் முற்றிலும் தவருன செய்திகளையும், கெடுதி விளையக் கூடிய புத்திமதிகளையும், சொல்ல முன்வந்து விடும். தோற்றத்தை மட்டும் (உருவத்தை — Personality) கண்டு உண்மையென நம்பும் ஞானப்பார்வையாளர்களை, நம்பும்படி செய்வதற்காக, "குரு நாதர்கள்" உருவங் கொண்டு இவைகள் தோன்றும். ஆசை உலகப் பார்வை (Astral vision) கொண்டு, அதற்கு மேலுள்ள மன உலகப் பார்வை (Mental vision) கிட்டாதவர்கள், இவைகளின் உண்மை யறியாமல்த் திகைக்கக்கூடும். எனவே, இக்கலைப் பயிர்ச்சிக்கு, (மன உலகப் பார்வைக்கு) நீண்டநாள்ப் பழக்கம் வேண்டும்.

அதாவது மனதை ஆசை உலக நடவடிக்கைகளுக்கும் அப்பாற் செலுத்தி, அவ்விடத்தில் நிலை நிறுத்திச் சிந்தனை செய்தால், மேலுலகிலுள்ள தேவதைகள் மூலமாகவோ, அல்லது குரு நாதர் மூலமாகவோ, நமக்கு வேண்டிய விஷயம் கிடைக்கும். அவ்விதம் கிடைக்கும்போது, ஆசை உலகிலுள்ளவைகள் அதில்க் குறுக்கிட முடியாது.

இனி நாம் நிறைந்த (குறைபாடில்லாத) ஞானப் பார்வை (Clairvoyance-pure) எது என்பதைக் கவனிப்போம். பல உலகங்களிலும் (ஆசை உலகு — மன உலகு போன்றவைகள் Astral plane, Mental plane) உள்ளவைகளை உணர்ந்து, மெய்ப் பொருளுக்கும் பொய்ப் பொருளுக்கும் உள்ள வித்தியாசத்தை அறிந்து நிற்பதுதான் உண்மை ஞானப் பார்வை பெறுவது என்பதின் பொருள்.

பலர் நுண் உடற் பார்வை, ஆசை உலகுப் பார்வை, மன உலகப் பார்வைகள் கிட்டியவர்களாகக் காணப்படுகிறார்கள். அவர்கள் அப்பார்வையை விஞ்ஞான வழியில் (Scientific investigation) உபயோகப்படுத்தும் வரை, அவர்கள் சொல்வது முற்றிலும் நம்பத்தகுந்தவைகளாக யிருக்கிறது. ஆனால் அவர்கள் இதைத் தங்கள் சுயநலத்திற்காக உபயோகப்படுத்த நேரிட்டால், இப்பார்வை அவர்களுக்குப் பிரயோசனம் அளிக்கிறதில்லை. தொலைவிலுணர்தல் என்னும் கலை, மிகவும் சூழ்ச்சியுள்ள கலையாகயிருப்பதால், அதைத் தொழிலாக நடத்துபவர்கள் பாரபக்ஷமற்றவர்களாக (Impersonal) இருக்க வேண்டியது அவசியம். இல்லாவிடில், அவர்கள் சொந்த எண்ணங்கள் அதில்ப் புகுந்து, அதைக் குளறுபடியாக்கிவிடும். சில மறைஞானிகள் இவ்விதம் தங்களது சொந்த எண்ணங்களை அதில்ப் புகுத்துவதால், அவர்களில் ஒரு கூட்டத்தாருக்கும் மற்றொரு கூட்டத்தாருக்கும் அபிப்பிராய பேதமேற்படுகிறது. மறை ஞானிகளுக்குள் அபிப்பிராய பேதமே யிருக்கக்கூடாது. இதைப் போக்கவேண்டுமானால், உண்மையாய் மறைஞானம் பெறவேண்டும் என்று நோக்கம் கொண்டவர்கள் ஒன்றாய்க்கூடி — அவர்கள் எண்ணிக்கை அதிகம் வேண்டும் என்பதில்லை — விஞ்ஞான ரீதியில் இக்கலையை ஆராய்ச்சி செய்து, தாங்கள்

ஒவ்வொருவரும் செய்த ஆராய்ச்சியின் முடிவை, மற்றவர்களின் முடிவுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் நல்ல பலன் கிடைக்கும். அவ்விதம் அவர்கள் ஏகோபித்துக் கண்ட முடிவுகளை புத்தக ரூபமாய் வெளியிட்டால் உலகிற்குப் பயன்படும். இவ்விதச் சங்கங்கள் பல நாடுகளில்த் தற்காலம் அமையப் பெற்றிருக்கின்றன. நம் நாட்டிலும் இதற்கெனச் சில சங்கங்கள் இருக்கின்றன. இக்கலை (தொலைவிலுணர்தல்) உலகத்திற்கு விஞ்ஞானத்தைப் போல் பயன் செய்வதில்லை யென்பதை மறுப்பதற்காகவே இதைப்பற்றி இவ்வளவு விரிவாக எழுதவேண்டிய அவசியம் ஏற்பட்டது. விஞ்ஞானம் உலகத்திற்கு எவ்வளவு முக்கியமோ அவ்வளவு, (ஏன் அதை விட முக்கியம் என்றுகூடச் சொல்லலாம்) இக்கலையும் உலகத்திற்கு முக்கியம்தான். இதை இதற்குள் வாசகர்கள் நன்கு உணர்ந்திருப்பார்கள் என்று நம்புகிறோம்.

தொலைவிலுணர்தலில் இன்னும் ஓர் வகையிருக்கிறது. அதற்கு இயற்கையின் ஞாபக சக்தி (Memory of Nature) அதாவது ரிஷிகள், முனிவர்கள், சித்தர்கள் முதலியவர்கள் பார்த்துச் சொன்ன "ஞான திருஷ்டி" என்பதுவே. இச்சக்தி உண்டென்பதற்கு ஆக்ஷேபனை இல்லை. ஆனால் அதை விளக்குவது கடினம். உதாரணமூலமாக இச்சக்தியை நிரூபிக்க முடியும். ஓர் விஷயம் நீங்கள் எல்லோரும் அறிந்திருக்கப் பட்டதுதான். அதாவது, தற்காலம் இரேகை சாஸ்திரம் பார்க்கப்பட்டவர்களில்ச் சிலர், பழைய ஓலைச் சுவடியிலிருந்து, ஓர் மனிதனின் வாழ்க்கை வரலாற்றையும், இனி அவனுக்கு நடக்கப்போவதைப் பற்றியும் வாசிப்பதைக் கேட்டிருப்பீர்கள். அதில் ஓர் முனிவர் மற்றொரு முனிவரை நோக்கி, "சுவாமி இன்னின்ன இரேகையுடையவனின். குணாதிசயங்களைக் கூற வேண்டும்" எனப் பிரார்த்திப்பார். அதற்கு அம்முனிவர் "நீர் கேட்கும் ஜாதகனின் பலன்களைக் கூறுகிறேன் கேளும்" என்று பதில்ச் சொல்லி ஜாதகனின் பிறப்பு வளர்ப்பு, அங்க அடையாளங்கள், செய்தொழில் முதலியவைகளைப் பற்றிச் சொல்வார். அது அநேகமாய்ச் சரியாக இருக்கும். இவை யொன்றும் நடக்கமுடியாத காரியமல்ல. ஏனெனில், இவ்வுலகம்

தோன்றிய நாள் முதல் நாளது வரை, நடந்த செயல்கள் அனைத்தும், ''மகாசோகன்'' என்று சொல்லப்பட்ட ''குரு நாதரால்'' பதியப்பெற்றிருக்கிறது. அதைப் பார்க்கும் சக்தி யுடையவர்கள் அதைப் பார்த்துச் சொல்லலாம். இம்முனிவர் களுக்கு அச்சக்தி ஏற்பட்டிருப்பதால்த்தான், அவர்கள் அவ் விதம் சொன்னார்கள். சாதாரண வழக்கத்தில் '' சித்திரபுத்திரன் குறிப்பு'' (சித்திரகுப்தன் என்பதுதான் சரியான பெயர்) என்று சொல்வதைக் கேட்டிருப்பீர்கள். ''தீயில்லாமல்ப் புகை கிளம்பாது'' என்பது பழமொழி. எனவே உலகச் ''செய்திக் குறிப்பு'' (World Dairy) ஒன்று உண்டென்பது தெரிய வருகிறது. இக்குறிப்பை என் திட்டவட்டமாகச் சொல்ல முடியவில்லையென்றால் அதற்குப் பல காரணங்களுண்டு. இக் குறிப்புகள் பதியப்பட்டிருக்கிற இடம் நமது ஸ்தூல உலகி லிருந்து (Physical World) வெகு தொலையிலுள்ள சூக்ஷம உலகிலிருப்பதால், ஸ்தூல உலகப் பார்வைகொண்டு அதைப் பார்ப்பதும், ஸ்தூல உலக வார்த்தை கொண்டு அதை விளக்கு வதும் மிகக்கடினம். ஆனால் மிக மேம்பட்ட உலக சம்பந்த மில்லாத ஆசை உலக (Astral World) சங்கதிகளை வேறு வழிகொண்டு சொல்லலாம்.

நமக்கிருப்பது போலவே ஒவ்வொரு பொருளுக்கும், அது அதைப்போன்ற நுண் உடல் (Astral Body) உண்டு அவ்வுடல்கள் மூல உடல்கள் அழிந்தபின்னும் அந்த உடல்கள் நெடுநாள் நிலைத்து நிற்கும். உதாரணமாக ஓர் கோட்டையின் நுண் உடல் (Astral Body) கோட்டை இடிந்து நெடுநாள் வரைக்கும் தோன்றிக்கொண்டிருக்கும், கோட்டையிடிந்து தரையோடு தரையாகப் போனபோதிலும், அந்தக் கோட்டையின் நுண் உடல் மட்டும், முன் கோட்டை எந்த நிலையில்க் காணப்பட்டதோ, அதே நிலையில்த் தோன்றிக் கொண்டிருக்கும். இடிந்து போன ஓர் பாலமும் இவ்விதமே தோன்றலாம். இங்கு, உண்மையில் நடந்த ஓர் உதாரணம் சொல்கிறோம். சிறிது காலத்திற்கு முன், ஓர் ஞானதிருஷ்டி (Astral Sight) பெற்ற பெண் ரோமாபுரிக்குப் போயிருந்தாள். ரோமாபுரியில் அழிந்துபோன சில பழைய பாகங்களை, அவள்

கண்கூடாக வர்ணிப்பதை, அவளைக் கூட்டிச் சென்ற ரோமாபுரி வழிகாட்டி (Guide) கேட்டு, அதிசயப்பட்டு, அவளுக்கு ரோமாபுரி பழைய தேச சரித்திர ஆராய்ச்சி மிக அற்புதமாக இருக்கிறது என்று பாராட்டினான். ஆனால் உண்மையில் அவளுக்கு ரோமாபுரி தேச சரித்திரம் தெரியவே தெரியாது. பின் அவள் எப்படிச் சொன்னாள் என்றால், அங்கு இருந்து அழிந்துபோன கட்டிடங்களும், பாலங்களும், சூக்ஷம தோற்றத்தில் அழியாமல்க் காணப்பட்டதால் அதைப் பார்த்துத்தான் அவள் சொன்னாள்.

ஓர் பொருளைக் கையில் வைத்துக்கொண்டு, அப்பொருள் சம்பந்தமான முன்நடவடிக்கைகளைக் கூறுவது(Psychometry) என்னும் ஓர்விதக் கலையிருக்கிறது. இதுவும், ''இயற்கையின் ஞாபகசக்தி'' என்னும் கலையுடன் ஒட்டியதுதான். புராதனமாயுள்ள ஓர் பொருளைக் கையில் வைத்துக்கொண்டு, மேலே சொன்ன கலை பயின்றவர்கள், நூற்றுக்கணக்கான வருடங்களுக்கு முன் நடந்தவைகளை, நேரில்க் காண்பதுபோல்க் கண்டு சொல்லமுடியும். இவ்விதம் ஓர் கலை உண்டென்பதை விஞ்ஞானிகள் ஒப்புக்கொண்ட போதிலும், அக்கலை எப்படிக் கற்பது என்பதை அவர்கள் கண்டுபிடிக்கவில்லை. குருநாதர்களிடத்தில், இக்கலையின் விபரம் தெரியவேண்டும் என்று மறை ஞானமாணுக்கர்கள் முறையிட்டபோது, குருநாதர்கள், ''தற்கால ஆன்ம வளர்ச்சியில் இக்கலை உயர்ந்த தீட்சை பெற்ற பெரியவர்களுக்கல்லாது, மற்றவர்களுக்கு இது கைகூடாது'' என்று சொல்லி விட்டார்கள்.

சென்ற காலத்தின் தொடர்பைக்கொள்ளும் இச்சக்தியே மிகவும் பிரமிக்கத்தக்கது என்றால், இனி, வருங்கால நிகழ்ச்சிகளையும் சொல்லமுடியும் சக்தி ஏற்பட்டால் எவ்வளவு யென்பதை யோசியுங்கள்.

மக்கள் நாகரீக வளர்ச்சிக்குப் பொறுப்பாகவுள்ள ''மகா சோகன்'' என்னும் குருநாதருக்கு (இவரைப்பற்றி முன்னமே குறிப்பிட்டிருக்கிறோம்), வருங்கால நிகழ்ச்சிகளனைத்தும்,

வெட்டவெளிச்சமாய் (அதாவது தெளிவாய்) விளங்கும். இவ்விதம் கட்டுப்பாடில்லாத தீர்க்கதெரிசனம் அவருக்குத் தெரியக்கூடிய காரணத்தை நாம் அறியமுடியாது. இங்கு ஓர் ஐயம் (சந்தேகம்) எழலாம். நாம் முன் சொல்லியபடி மனிதனுக்குப் பரிபூரண உரிமை அளித்திருக்கும்போது, அவன் அது கொண்டு இனிச்செய்யப்போவதை இவர், (மகாசோகன்) எவ்விதம் அறியமுடியுமென்பதே. அக்கேள்வி கேட்கும்போது நாம் ஒன்றைக் கருத்தில்க்கொள்ள வேண்டும். அதாவது, மனிதனுக்குக் கொடுக்கப்பட்ட பூரண உரிமை ஒரு தலையானது தான் (அரைகுறையானது-Partial). அதை ஓர் உதாரண மூலம் விளக்குவோம். ஓர் மனிதன் அவன் இஷ்டபடி (பரிபூரண உரிமையால்) இங்கிருந்து சிங்கப்பூர் செல்லவேண்டுமென எண்ணங்கொண்டு அவ்விதமே செல்கிருன் என்று வைத்துக் கொள்வோம். அவ்விதம் அவன் செல்வது அவனது பூரண உரிமையைக் காட்டுகிறது. ஆனல் அவன் பாதித்தூரம் சென்றபின் கப்பல் காப்பிட்டன் (Captain) இடம் போய் "எனக்கு இப்போது சிங்கப்பூர் செல்லும் எண்ணமில்லை, கப்பலைத் திருப்பி இந்தியாவிற்கே செலுத்து" என்று சொல்ல முடியாது. தனது பூரண உரிமையினல், ஒருவன் ஓர்தரம் ஓர் விருப்பங்கொண்டு அதில் இறங்கியபின், அந்த விருப்பத்தினலேற்படுபவைகளெல்லாம் அவன் அனுபவிக்கத்தான் வேண்டும். மேலே சொல்லிய பிரயாணி தனது உரிமையின் வரம்பு கடந்து நடக்காமலிருந்தால், அவன் கப்பல்ப் பிரயாணம் மகிழ்ச்சிகரமாகயிருக்கும். ஆனல் அவன் விருப்பத்தின்படி ஏறிய கப்பலிலிருந்து விலகமுடியாது.

இப்போது நாம் இந்த உவமையை, மனிதனின் எண்ணத்துடன் பொருத்திப் பார்க்காமல் கடவுளுடைய எண்ணத்துடனும், அவர் வகுத்த முறைகளுடனும் பொருத்திப் பார்ப்போம்.

நாம் இந்த நூல் முழுவதும் குறிப்பாய்க் காட்டியிருக்கிறபடி, கடவுள், பிறவி முன்னேற்றத்திற்காக, ஓர் அமைப்பை (Divine Plan) உண்டுபண்ணியிருக்கிருர். அதை நம்மிடையே செலுத்துபவர்கள் குருநாதர்கள். கடவுள் ஆணையைச் செலுத்த

நினைப்பவர்கள், அதைப்பற்றித் தெளிவாய்த் தாங்கள் தெரிந்திருக்க வேண்டியது அவசியமல்லவா? எனவே உயர்ந்த குருநாதர்கள் என்பவர்கள் அதை (Divine Plan) முழுவதும் ஏன் தெரிந்திருக்கக்கூடாது? இதை நாம் ஒப்புக்கொண்டால்த் தான் ''மகாசோகனின்'' செயல்களை அறிந்தவர்களாவோம்.

மனிதனின் பூரண உரிமை (Free will) கடவுளின் திட்டத்தை முறியடிக்கமுடியாது. ஆனால், அவன் தனது உரிமையைக் கொண்டாட அவனுக்கு பல சந்தர்ப்பங்களை யுண்டுபண்ணும் என்பதை இதனால் அறியலாம். கடவுள் திட்டம் நிறைவேறுவது காலத்தைப் பொறுத்திருக்கிறது. மக்களுக்குப் பூரண உரிமையளித்திருப்பதால், அவர்கள் அறிந்தோ அறியாமலோ இதைத் (Divine plan) தடைசெய்ய முடியும். ஆனால், அத்தடைகளெல்லாம், தங்கள் தலைமேல்த் தான் விழுமேயொழிய கடவுள் திட்டத்தை அசைக்கமுடியாது. உதாரணமாக, நாம் முன்சொன்ன கப்பல் பிரயாணி, தனது விருப்பத்தின்படி சிங்கப்பூர் செல்வதற்குப்பதில், முட்டாள்த் தனமாய் கப்பலைத் திருப்புவதற்கு மாலுமிகளுடன் போராடுவானால், மாலுமிகள் அவனை மடக்கிவிடுவார்கள். அதனாலேற் பட்ட கஷ்டங்களை அவன் அனுபவிக்க வேண்டியதுதான். தன்னுடன் சேர்ந்த மற்றப் பிரயாணிகளுடன் அவன் சிங்கப்பூர் சேருவது நிச்சயம். ஆனால் அவன் கப்பல் யாத்திரை மகிழ்ச்சி யளிக்காது. ஓர் தனி மனிதன், ஓர் கப்பல் பிரயாணம் போன்ற ஓர் சிறிய விஷயத்தை எப்படி மாற்றமுடியாதோ, அதேபோல்த் தான், எத்தனைபேர் சேர்ந்தாலும், கடவுள் திட்டத்தை மாற்ற முடியவேமுடியாது. அதற்குரிய அறிவும் திறனும். மக்களுக் கில்லை. ஆனால் மக்கள் சில செயல்களால் அதைத் தாமதப் படுத்த முடியும். அவ்விதம் நேரிடுங்கால், ''மகாசோகன்'' அதை முன்னறிந்து, அதற்கு வேண்டிய போக்குநீக்குகள் செய்து, அதை (கடவுள் திட்டத்தை) ஒழுங்காக நடைபெறச் செய்துவிடுவார். எனவே அவருக்குரிய வருங்கால நிகழ்ச்சி ஆற்றலைப் (தீர்க்கதெரிசனம்) பற்றி நாம் அறியமுடியாவிட்டாலும், அது அவருக்கு இருக்கவேண்டிய அவசியத்தை நாம் தெளிவாய் அறிந்துகொள்ளலாம்.

தொலைவினுணர்தல் அல்லது ஞானப்பார்வை என்னும் விஷயத்தை முடிக்குமுன் வருங்காலத்தைப்பற்றி இன்னும் சில சொல்லவேண்டி யிருக்கிறது.

அதில் ஒன்று "உள்ளுணர்வு" (Intuition) என்பது. உள் உணர்வு என்பது, ஓர் விஷயத்தின் உண்மையை, எவ்வித ஆராய்ச்சியுமில்லாமல், மனதால் உடனறியும் திறன் (சக்தி).

இச்சக்தி சாதாரணமாய் ஞானப்பார்வை என்ற தலைப்பின் கீழ் வராதிருந்தபோதிலும், இது, ஓர் வகையில் அதை யொட்டிய (ஞானப்பார்வையை) ஓர் உயர்ந்த தரமான கலை தான். குருநாதர்கள், தங்கள் கருத்தில்க் கொண்ட திட்டங்களை நிறைவேற்றுவதில், இக்கலையை ஓர் துணையங்கமாகச் சேர்த்திருக்கிறார்கள். மக்களில்ப் பெரும்பாலோர்க்கு இக்கலைத் திறன் கிட்ட, இன்னும் அநேக நூருண்டுகள் செல்லுமாயினும், நாம் முன்னமே சொல்லிய புதிய இனத்திலவதரித்திருக்கும் குழந்தைகளிடம் (New race born in Australia & New Zealand) இச்சக்தி முனைப்பாகக் (Pronouncedly intutive) காணப்படுகிறது. இந்த உள்ளுணர்வை உபயோகப் படுத்துவதால், யோசிப்பதற்காகச் செலவழிக்கும் காலம் வீணாகாமல்க் காக்கப்படுவதுடன், மனிதனுக்கு ஆவிதத்துவத்தின் விளக்கத்தையும் இது கொடுக்கும். ஆவியின் (Spirit) செயல்கள், காரணங்களால் விளக்கமுடியாது. அறிவால்த்தான் அறிய முடியும் அதை இது கூட்டுவிக்கும்.

குருநாதர்கள், மக்களின் வருங்கால நாகரீகத்திற்காக, வகுத்திருக்கிற வழிகளில், இதன் அபிவிருத்தியும் ஒன்று. மக்களுக்குப் பலதிறப்பட்ட கலைகளின் அறிவும் ஏற்படவேண்டும் என்று, முன்கூட்டியே ஒதுக்கி வைக்கப்பட்ட கலைகளில் ஞானப் பார்வை ஒன்றாகயிருந்தபோதிலும் இக்கலையும் அத்துடன் சேர்த்துக்கொள்ள வேண்டும். ஞானப்பார்வை என்பதற்குப் பதில் அதை "முனைப்பான தன்நினைவு" என்று சொல்வது மிகவும் பொருத்தமானது. தற்காலம் சாதாரண மனிதன், ஸ்தூல உடல் நிகழ்ச்சி மட்டும் அறியும் சக்தி பெற்றிருக்கிறான். முடிவாக அவன் நுண் உடல் நிகழ்ச்சிகளையும் அறிந்தாகவேண்டும். உதாரணமாக, அவன் ஓர் மலைக்காட்சியைப்

பார்க்கும்போது, அத்துடன் அதேபோல்க் காணப்படும் அம் மலையின் நுண் தோற்றத்தையும் (Astral Counter part) மற்றும் மலையில்த் தோன்றுகின்ற வனதேவதைகளையும், கடல், அருவி, தடாகம் முதலியவைகளில்க் காணப்படும் தேவ கன்னிகைகளையும், மரங்களிலும், பூக்களிலும், உறையும் தேவதைகளையும் காணவேண்டும்.

தூக்கத்தைப் பற்றி இச்சமயத்தில்க் குறிப்பிடவேண்டி யிருக்கிறது. தற்காலம் மிகுந்த அனுபவமுள்ள மறைஞானி கள் மட்டும்தான், தாங்கள் தூங்கிய காலத்தில் நடமாடின உலக சங்கதிகளை, விழித்தவுடன் உணரக்கூடும் சக்தியுடைய வர்களாக விளங்குகிறார்கள். சாதாரண மனிதனுக்கு இரவிற்கும் பகலுக்கும் இடையிலுள்ள நினைவு இல்லாமற் போய்விடுகிறது. அதற்குக் காரணம், எல்லோரும் தூங்கும்போது விண்ணுடலில்ச் சஞ்சரித்த போதிலும், விழிக்கும்போது நமது மூளையின் வழி நமது உடலுக்குள் பிரவேசிக்கத் தெரியாததுதான். மூளை வழி நுழையாததினால், நமக்குத் தூக்கத்தில் நடந்த விஷயங்கள் ஞாபகத்திற்கு வருகிறதில்லை. மறதி ஏற்பட்டு விடுகிறது. மூளை வழி நுழைந்தால் மறதி ஏற்படாது. சென்ற சில நூறாண்டு களாக மக்களில்ச் சிலர் இதைக் கற்றிருக்கிறார்கள். இனி அவர்கள் தூங்காமல் விழித்திருக்கும் நிலையிலேயே இச்சக்தி யடைவார்கள். அவ்விதம் ஏற்படும் காலத்தில், தூக்கத்தில் ஞாபக சக்தி இல்லை யென்ற மயக்கத்தை (Illusion) நீக்குவ தோடு, மரண பயத்தை நீக்கி, உற்றார் உறவினர் மரணத்தா லுண்டாகும் துயரத்தையும் களைவார்கள். உண்மையைச் சொல்லவேண்டுமானால், இனி, துக்கமென்பதே இருக்காது. ஏனெனில், இறந்தவர்களைக் காணவேண்டுமானால், நாம் தூங்கவேண்டியதைத் தவிர வேறொன்றும் செய்ய வேண்டிய தில்லை. தூங்கிய உடன் நமது சூக்ஷம உடல்கொண்டு இறந்தவர்களிருக்குமிடம் சேர்ந்து, அவர்களுடன் உறையாடி விட்டுக் காலையில் நம் உடலில்ப் புகுந்து கொள்ளலாம். மேலே குறிப்பிட்டபடி இப்போதும் அநேகர் இதைச் செய்துகொண்டுதா னிருக்கிறார்கள். ஆனால் அதன் நினைவை அவர்கள் பெற வில்லை. காரணம், மரணமென்பது ஒன்றுசேர முடியாத ஓர்

பிரிவு என்பது அவர்கள் புத்தியில் உறைந்து போயிருப்பது தான். பகல் ஓர் உடலிலும் இரவு ஓர் உடலிலும் பணியாற்றி வருகிறவர்களின் எண்ணிக்கை கூடிக்கொண்டே வந்த போதிலும், ஓர் மறைஞானி அவர்களுக்கு அதை விளக்கிக் காட்டாவிட்டால், அவர்களுக்கு அதைப்பற்றிய நினைவு உதிப்பதில்லை. மறை ஞானி சொல்லும்போது அதை அவர்கள் நம்பியபோதிலும், அதை அவர்கள் உண்மையில் உணர்கிற தில்லை. அவ்விதம் உண்மையாய் உணரும் சக்தியை இனி அவர்கள் அடைய முடியும். எவ்விதம் ஓர் தொழில் நடத்து பவன் ( Business man ) இருவகை வாழ்க்கை நடத்தி — ஆபீஸில் ஒன்றும் வீட்டிலொன்றுமாக — அதே சமயத்தில் அவ்விருவகை வாழ்க்கையின் நினைவும் அவன் மனதை விட்டகலாதிருக்கிறதோ, அதேபோல், இன்னும் மேலான நிலைமையில், இவனுடைய ஸ்தூல சூக்ஷம உலக வாழ்க்கை இனிக் காணப்படும். எவ்விதம் தொழில் நடத்து பவன், ஆபீஸிலிருக்கும்போது வீட்டுடன் "டெலிபோன்" மூலம் துடர்பு ஏற்படுத்த முடியுமோ. அதேபோல் இனி வருங் காலத்தில், இறந்துபோனவர்களுடன் துடர்பு ஏற்படுத்திக் கொள்ள முடியும்.

•

இவைகளெல்லாம் மனிதனுக்கு ஏற்படுவதற்கு நெடு நாளாகும். ஆனல் அதற்கு முன்பாகவே, விஞ்ஞான ரீதியாய் மிக நுட்பமாய் இயங்கக்கூடிய ஓர் இயந்திரத்தின் மூலம், இவ் விதத் துடர்பை உண்டாக்கிக்கொள்ளக்கூடிய வழி கண்டு பிடிக்கப்பட்டுவிடும். எனவே கடோசியாக, உடலுடனிருக்கப் பட்டவர்களுக்கும், உடலை இழந்தவர்களுக்கும் இடையே ஓர் பாலம் அமைக்கப்பட்டுவிடும். இது விஞ்ஞானத்தால் நிச்சயம் முடியும்.

---

# 10. விஞ்ஞானம் மருத்துவத்துடன் மறை ஞானத் துடர்பு

கெட்ட கர்மங்களையெல்லாம் களைந்துவிட்டு இயற்கைச் சட்டத்தை வழுவாமல் மனிதன் கடைப்பிடித்து வந்தால், அவன் ஆயுள்க் காலம் 250 வருடங்கள் வரை நீடிக்கும். அதாவது மனிதன் 250 வயது வரை வாழலாம் என்று ஓர் குருநாதர் சொல்லியிருக்கிறார். இக்கூற்று நம்பக்கூடியதாகயில்லையென்று தோன்றுகிறது. அதன் காரணம் இயற்கைச் சட்டங்களில் சிலதுதான் இதுவரை கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இயற்கைச் சட்டங்கள் முழுவதும் கண்டுபிடிக்கப்பட்டு அதன்படி நடந்தால், குருநாதர் சொல்லியபடி 250 வருடங்கள் வாழலாம் என்பதில் சந்தேகம் வேண்டாம். மனித இனம் தற்காலம் மிகவும் தன்னலத்தையே நாடும் சுபாவம்கொண்டதாகயிருக்கிறபடியால், இயற்கைச்சட்டங்களில் சிலவற்றை அறியும் வகையை மனிதர்களிடம் ஒப்புவிக்க குருநாதர்கள் தயங்குகிறார்கள். அதாவது இயற்கைச் சட்டங்கள் அனைத்தையும் அறிய மக்களுக்குப் போதிய பக்குவமில்லை. ஏனென்றால் விஞ்ஞானிகள் புதிய கண்டுபிடிப்புகளை (inventions) உலகிற்குக் அறிவித்தவுடன் மக்கள் அவைகளைக் கெட்ட காரியங்களுக்குப் பயன்படுத்திக்கொள்கிறார்கள். ஆகாயவிமானம் கண்டுபிடித்ததும் மக்கள் அதைப் பெரும்பாலும் அழிவு வேலைக்கே உபயோகிக்கத்துடங்கி விட்டார்கள். அணுசக்தி கண்டுபிடித்து அழிவு வேலை தவிற ஆக்கவேலை செய்ய மக்களுக்கு எண்ணமுண்டாகவில்லை. ''இவ்விதமிருக்கும்போது இச்சக்திகளை மக்களுக்கு ''புனித அரசாங்கம்'' (Higher Powers) கொடுப்பானேன்'' என்று கேட்கலாம். அழிவு வேலைக்கு உதவும் சக்திகளைக்கொண்டு ஆக்கவேலையும் செய்யலாம் என்பதை அறியும் பொருட்டே இவ்வித சக்திகள் மனிதனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. நமது பிள்ளைகள், புத்தியிழந்து கிரிக்கட் மட்டைகளையும், சிலம்பக் கம்புகளையும் கொண்டு, ஒருவர் மண்டையை மற்றொருவர் உடைத்துக் கொள்வார்களென்று எண்ணி நாம் அதை அவர்களுக்குக் கொடுக்காமலிருப்பதில்லை. அதைக்கொண்டு

என்னென்ன வேலைகள் செய்யமுடியுமோ அதை அவர்கள் அறியவேண்டும்என்னும் எண்ணத்துடன்தான் கொடுக்கிறோம். அவ்வித மிருந்தும்கூட குழந்தைகளிடம் இன்னின்ன சாமான் கள்தான் கொடுக்கலாம் என்பதற்கு ஓர் அளவும் உண்டு. துப்பாக்கியும் வெடிமருந்தும் நாம் குழந்தைகளிடம் கொடுக்க லாமா?

இரண்டாயிரம் வருடங்களுக்கு முன் ஓர் மகான் ''உலகம் சிறுபிள்ளைத்தனத்தோடுயிருக்கிறது அக்குணத்தை விட்டுவிட வேண்டும்'' என்று சொன்னார் அவர் சொல்லி இத்தனை வருடங்களுக்குப் பிறகும் உலகம் இன்னும் சிறுபிள்ளைத்தன மாகவேயிருக்கிறது. அதாவது நல்லது இன்னது கெட்டது இன்னது என்று தெரியாமல் இருக்கிறது. சராசரி வயதிற்கு மேற்பட்ட அளவு, மனிதர்கள் வாழ வேண்டிய வழிகளை மக்க ளுக்கு இக்காலம் உணரும்படி செய்தால் அவர்களை பக்குவம் ஏற்படாமலிருக்கும்போது பழுக்கசெய்த பலன்தான் ஏற்படும்.

மேலும், கர்மபலனையும் கவனிக்கவேண்டும். கர்மத்தாலேற் பட்ட கடனை நிவர்த்தித்துக்கொள்ள பிணி ஓர் வழியாய் இருப்ப தால் எல்லாப் பிணிகளையும் நீக்கவோ அல்லது வராமல்த் தடுக்கவோ உள்ள வழிகள் முழுவதையும் மக்கள் இனத்திற்கு இச்சமயம் அறிவிக்காமலிருக்கிறார்கள். அறிவிக்கவும் மாட்டார் கள். படிப்படியாகத்தான் அந்தக் கல்வியை மக்களுக்கு ஊட்டுவார்கள்.

அப்படியிருந்தும் சில ஆபத்தான பிணிகளைத் தடுப்பதற் காக, குருநாதர்களால் மக்களுக்குப் புகட்டப்பட்ட சில வழிகளை மக்கள் தவறான வழிகளில் உபயோகிக்கத் துடங்கிவிட்டார்கள். உதாரணமாக, ஒரு குருநாதர் தனது மாணாக்கராகிய ஜென்னர் என்பவர், (Jenner) ஒருவரிடம், அம்மைகுத்திக் கொள்வதால் (Vaccination) வைசூரி நோய் பரவாமல்த் தடுக்கலாமெனச் சொல்லி அதை அவர்மூலமாய் உலகிற்கு இதை வெளிப்படுத்தினர். அதனால் (ஊசி குத்திக்கொள்வதால்) தற்காலமேற்பட்ட பலனைக் கவனியுங்கள். சில மட வைத் தியர்கள் எல்லாப் பிணிகளுக்கும் ''ஊன் நீர்மருந்து'' (ஊசி மருந்து—Serums) போடுவதே வழக்கத்தில் கொண்டுவந்து

விட்டார்கள். மேற்படி மருந்து உபயோகிக்கக் கூடாத சில பிணிகளுக்கும்கூட உபயோகிக்கிருர்கள். தற்காலம் ஊசி மருந்து போடுவதே மருத்வ சித்தாந்தமாக (Medical Dogma) யிருக்கிறது. அது மிகவும் வருந்தக்கூடிய விஷயம். ஏனெனில் மேலே சொல்லிய இவ்விஷயத்தைப் போதித்த குருநாதரே, அம்மை குத்திக்கொள்வது, ஓர் தற்கால சாந்திதானென்றும், பின்னுல் ஓர் காலத்தில் இது நாகரீகமற்ற செய்கையாகக் கருதப்பட வேண்டிவருமென்றும் சொல்லியிருக்கிருர். குருநாதர் இதைச் செய்துகொள்ளச் சொல்லிய காலத்தில், உலகில் பலர் வைசூரியால் மரணமடையவேண்டிய நிலேயேற்பட்டிருந்தது. அதைத் தற்கால சாந்தியாக நீக்கவே, அவர் இந்த ஏற்பாடு செய்தார். ''குருநாதர்கள் இதைச் செய்யச்சொல்லிய காலத்திற்குமுன், உலகில் வைசூரிநோய் இல்லேயா? ஏன் அவர் இதை நெடுங்காலத்திற்கு முன்னமே வெளியிட்டிருக்கக்கூடாது'' என்று கேட்கலாம், டாக்டர்களின் அறியாமையன்றி அவர் களுக்கு (டாக்டர்களுக்கு) வேறு எவ்விதக் கெட்ட எண்ணமு மில்லாத இக்காலத்திலேயே, டாக்டர்கள் ஊசிமருந்தை விவேகமில்லாமல் உபயோகிக்கும்போது, செய்கைகளாலேற் படும் விளேவைப்பற்றி மனிதர்கள் கவலேயெடுத்துக்கொள்ளாத அந்தக்காலத்தில், குருநாதர்கள் இதை வெளியிட்டிருந்தால், அக்காலத்திய மக்கள் இதை மிகமிகத் தவருனவழிகளில் உபயோகப்படுத்தி விடுவார்களென்ற எண்ணங்கொண்டு அதற்கு உரிய காலத்திற்குமுன் வெளியிடவில்லே.

குருநாதர் மூலமாய்த்தான் ஜென்னர் (Jenner) என்பவர் அம்மைகுத்தும் வித்தை (Vaccination) கற்றுக்கொண்டார் என்று நாம் குறிப்பாகக் காட்டியபோதிலும், சில மேதாவி களுக்கு (அதாவது பிறவி முன்னேற்றம் அதிகம் அடைந்தவர் களுக்கு) குருநாதர் உதவியில்லாமலே சில அபூர்வமான விஞ்ஞானக் கல்விகள் கிடைக்கக்கூடும் என்பதை நாம் மறுக்க வில்லே. ஆனுல் அவ்வித மேதாவிகள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த சில அபூர்வக் கண்டுபிடிப்பை வெளியிடப்போகும் தருணத்தில், அதனுல் உலகிற்குக் கேடுவிளேயுமெனக் கருதி

குருநாதர்கள், அச்சக்திகளைக் கண்டுபிடித்தவர்கள் வெளியிடாதபடி தடுத்தோ, அல்லது அதை உபயோகிக்கமுடியாத வண்ணமோ செய்துவருகிறார்கள். இதை நம்புவதற்குத் தகுந்த காரணங்களிருக்கின்றன. அல்விதம் நடந்த ஓர் செய்தியும், மறைஞானிகளுக்கு (Occulists) நன்கு தெரிந்ததுமான ஓர் விஷயத்தை இங்கு சொல்லவேண்டி வருகிறது. அமெரிக்காவைச் சேர்ந்த "பிலாடெல்பியா" (Philadelphia) நகரவாசியான "கீலீ" (J. W. Keely) என்பவர் தன்னையறியாமலே (Unwittingly) குருநாதர்களுக்கு மட்டும் தெரிந்ததும், மறைஞானநூல்களில்க் கண்டிருப்பதுமான, ஓர் அபூர்வ சக்தியைக் கண்டுபிடித்தார். அவர் அச்சக்தியை ஓர் யந்திர மூலம் (Keely Motor) இயங்கப்பண்ணினார். அச்சக்தி ஆக்கவேலைக்கும் அழிவுவேலைக்கும் உபயோகப்படும்படியாக அமைந்திருந்தது. அதாவது அதைக்கொண்டு நன்மையும் தீமையும் பெருமளவில்ச் செய்யமுடியும். நன்மைசெய்யக்கூடிய வேலையில் அதற்கு, ஓர் இறந்த மனிதனை—அதாவது வைத்தியர்கள் எல்லோரும் இறந்துவிட்டான் என்று சொல்லப்பட்ட மனிதனை —இறந்து சில மணி நேரத்திற்குள் மீண்டும் உயிருடன் எழுப்பிவிடும் சக்தி உண்டு. அச்சக்தியினால் "பிளாவட்ஸ்கி அம்மையார்" (Madame Blavâtsky) மூன்றுதரம் காப்பாற்றப்பட்டாள். இது நடந்த விஷயம். அச்சக்தி அழிவுவேலையிலீடுபடுத்தினால், 100,000 மனிதர்களையும், 100,000 யானைகளையும் நிமிடநேரத்தில், ஓர் செத்த எலியைச் சுட்டுச் சாம்பலாக்குவது போலாக்கிவிடும். அணுக்குண்டு (Atom bomb) ஜலவாயுக் குண்டு (Hydrogen bomb) முதலிய தற்கால நாசக்கருவிகளை விடப் பல ஆயிரமடங்கு சக்திவாய்ந்தது. இவ்வளவு சக்திவாய்ந்த அந்த யந்திரம் (Motor) கையில்க்கட்டும் ஓர் கெடியாரத்தின் அளவுதானிருக்கும். ஆனால், அந்த யந்திரத்தை ஓட்ட "கீலீ" என்பவர் ஒருவரால்த்தான் முடியும். வேறு ஒருவர் அதை ஓட்டவேண்டுமானால், அவ்விதம் ஓட்டுபவரைக் "கீலீ" தொட்டுக்கொண்டு நிற்கவேண்டும். எனவே அதை ஓட்டக்கூடிய சக்தி கீலீயின் உடம்பில்த்தான் அமைந்திருந்தது. இவ்விதம் தனக்குக் கிடைத்த அந்த சக்தியையும்,

அந்த யந்திரத்தையும் கீலீ, உலகிற்கு அறிவிக்க யெண்ணிய போது, அவர் அவ்விதம் செய்ய முடியாமல்க் குருநாதர்கள் தடுத்துவிட்டார்கள். எனவே "கீலீ மோட்டார் கம்பேனி" (Keely Motor Co.) என்று பங்காளிகள் சேர்ந்து நடத்த ஓர் திட்டம் போடப்பட்டது பிரயோசனமில்லாது போயிற்று.

ஏனெனில், இவ்வகை ஆயுதம், போர் வெறியர்கள் கையில்ச் சிக்கினல், அதைக் கொண்டு அவர்கள் உலகத்தை நாசமாக்கி விடுவார்கள். உலகம் எப்படி நாசமாயிற்று என்று சொல்லுவதற்குக்கூட, ஓர் ஆள் இல்லாதபடி நாசமாய் விடும். இதை யார்தான் அனுமதிப்பார்கள். அதிலும் கருணையே வடிவமான குருநாதர்கள் இதையனுமதிப்பார்களா ?*

மறை ஞானம் தனது முக்கிய இரகசியங்களில் சிலவற்றை வெளியிடத் தான் செய்கிறது. அது தன் விலையுயர்ந்த முத்துக்களை, நெடுங்காலங்களுக்கிடையே இங்கொன்றும் அங்கொன்றுமாக வீசுகிறது. அதுவும் மிகுந்த கட்டாயத்தின்மேல்த் தான் வீசுகிறது. அது, பிறவி முன்னேற்றமடைந்த ஆன்மாக்களுக்கு அவசியம் நேர்ந்த போதுதான் கிட்டும். இந்த இரகசியங்கள், அதற்குரிய பக்குவமில்லாதவர்கள் கையில்ச் சிக்குமானல், அதனலுண்டாகும் நன்மையைவிடக் கெடுதிதான் மிக மிக அதிகமாகும். உதாரணமாக, "அணுக்குண்டு" "ஜலவாயுக் குண்டு" முதலியவைகளை எப்படி உபயோகப் படுத்துகிறர்கள் என்பதைப் பார்த்துக்கொள்ளுங்கள்.

மனிதனுடைய ஸ்தூல உடல் (Physical body) விண்ணுடல், (Astral body) மன உடல், (Mental body) தவிர, மனிதனுக்குச் "சாயா சரீரம்" (Etheric body) என்று வேறு ஓர் உடலுமுண்டு என்று மறை ஞான நூல்கள் கூறுகின்றன. இந்த உடல் மனிதனுடைய ஸ்தூல உடலை மிகவும்

---

* இந்த யந்திரத்தின் முழு விபரம் அறிய ஆவல்கொண்ட நேயர்கள், பிளாவட்ஸ்கி அம்மையார் எழுதிய "மரும சித்தாந்தம்" (Secret Doctrine by H. P. B.) Book I. C. X. P. 555 - 556) என்னும் புத்தகத்தில் இதனை வாசித்தறிய விரும்புகிறோம்.

ஒட்டியதும், மனிதனின் மரணத்தின் பின் கரைந்து போகக் கூடியதாகவும், மனிதன் சூக்ஷும உடல்களில் (ஆவி உடல்களில்) சஞ்சரிக்கும் காலத்தில், அதற்கு யாதொரு சம்பந்தமுமில்லை யாதலால்; அதைப் பற்றி இதுவரை சொல்லவில்லை. ஆனால் அது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த உடல்களிலொன்று. அது சூரிய கிரணத்தாலேற்படும் சக்தியை வாங்கி, தன்வயப் படுத்தி, (ஜீரணம் செய்து — assimilate) நமது ஸ்தூல உடலுக்குவேண்டிய அளவறிந்து, நமது உடலில்ச் செலுத்தும் தன்மையுடையது. சூரிய கிரணத்தால் (வெயிலால்) உடலுக்கு ஏற்படக் கூடிய நன்மைகள் எல்லோருக்கும் தெரிந்த விஷயம். சூரிய கிரண விளக்குகள் (Sun-Ray-Lamp) மூலம் அந்த சக்தியைத் தற்காலம் வைத்தியர்கள் உபயோகப்படுத்தி வருவதும் தெரிந்த விஷயம்தான். ஆனால் வைத்தியர்கள் சாயா சரீரத்தைக் (Etheric body) கண்ணால்ப் பார்க்கும்படி (Etheric Sight) பயின்றுகொண்டால், (அவ்விதப் பார்வை பெற முடியும்) சூரிய கிரண விளக்குகளை (Sun-Ray-Lamp) இன்னும் அதிகப் பலன் படும்படி உபயோகிக்கலாம். ஒருவனுடைய உடலுக்கு எவ்வளவு சூரிய சக்தி கொடுக்க வேண்டுமென்பது, அந்த விளக்கை உபயோகப்படுத்தும் வைத்தியர்களுக்குத் தெரியாது. உத்தேசமாக இவ்வளவு தேவையென யூகித்து, அதற்கேற்றபடி அதை உபயோகிக்கிறார்கள். சாயா சரீரப் (Etheric Sight) பெற்ற வைத்தியர்களின் சிகிச்சை, அப் பார்வையில்லாத சாதாரண வைத்தியர்களின் சிகிச்சையைவிட எவ்வளவோ அதிகமாகக் காணப்படுகிறது. சாதாரண வைத்தியர்கள், அச் சக்தி எவ்வளவு வேண்டுமென்பதைப் பிணியாளியின் தோலைப் (Skin) பார்த்து யூகிக்கிறார்கள். சாயா சரீரப் பார்வைகொண்டு செய்தால், இவ்வளவு தேவை யென்பது சந்தேகத்திற்கிடமில்லாமல்த் தெரிந்துவிடும் இது தவிர இப் பார்வையால் (சாயா சரீரப் பார்வை) பிணியாளியைப் பார்த்த மாத்திரத்திலேயே, பிணி இன்னதென்று தெரிந்து விடும். உடனே தைரியமாய் மருந்து கொடுக்கலாம். தற் காலம் ''கில்னர் ஸ்கிரீன்'' (Kilner Screen) என்னும் திரைப் படம் மூலம் சாயா சரீரத்தை, சாதாரண மனிதன் காணும்

வண்ணம், பெரிய ஆஸ்பத்திரிகளில் காட்டி வருகிறார்கள். எனவே இதுவரை நாம் சொல்லிவந்த நுண் உடல்கள் (அதாவது கண் காணு உடல்கள்) என்பது, மறை ஞானிகளின் மனோ கற்பனையைத் தவிர வேறில்லையெனச் சிலர் கூறி வந்த பொய்க்கூற்றை நிராகரித்து விட்டது.

இது நிற்க; சாயா சரீரத்தின் (Etheric Body) இதர சில தொழில்களைக் குறிப்பிடவேண்டியிருக்கிறது.

சாயா சரீரத்தில் சில அபூர்வ சக்தியை இயக்கும் சில ஸ்தானங்கள் அமைந்திருக்கின்றன. அவைகளைக் குறிப்பிட்ட சில முறைகளினால், வேலை செய்யுமபடி பூரித்தால், (தூண்டினால் — Stimulation) அது அநேகவிதமான மறைஞான சித்திகளை (Occult phenomena) நாம் அடையும்படி உதவும். தூலவிழுணர்தல் (Clairoyance) தூலவில்க் கேட்டல் (Clair-audience), கையில் ஓர் பொருளை வைத்துக்கொண்டு அப்பொருளின் முன்னைய சரிதம் கூறல், (Psychometry) முதலிய வித்தைகள் கற்க வசதியாயிருக்கும். எந்தெந்த வித்தை வேண்டுமோ, அதனதற்கு வேண்டிய மர்மஸ்தானங்களை சாயா சரீரத்தில் பூரித்தால், (தூண்டினால்) அந்தந்த வேலை செய்யும் சக்தியைக் கொடுக்கும். நமது புராதன நூல்களில் சொல்லப்பட்டிருக்கிற "குண்டலனி" சக்தியை இதன் மூலம் அடையலாம். அதனால் அஷ்டமா சித்திகளையும் பெறலாம். ஆனால் இந்த அப்பியாசங்கள்சாதாரண மனிதர்களுக்குக் கிட்டாது. அதையடைய வேண்டுமானால் அம்முறையில்த் தேர்ந்த குருநாதர் மூலம் நேரில்க் கேட்டு, அவர் ஒத்தாசையின் மேல்த் தான் அடையமுடியும். அவ்விதம் சித்தியடைந்தவர்கள் இப்போதும் இருக்கிறார்கள்.

இந்த வேலைகள் செய்யக்கூடிய ஸ்தானங்களுக்கு "உள் நோக்கிச் சுரக்கும் உறுப்புச் சுரப்பி" (Endocrine Glands) என்று பெயர். இத்தகைய ஸ்தானங்கள் எப்படி வேலைசெய்கிறதென்பதை, மேல்நாட்டு வைத்தியர்கள் தற்காலம் ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். டாக்டர் 'லூயி பெர்மன்' (Dr. Louis-Berman) என்பவர் இந்த சுரப்பிகளைப் (Glands) பற்றிக்

கூறும்போது, இதிலிருந்து வடியும் நீரால் மறுத்துவ சிகிச்சைகளில் பிரமிக்கத் தக்க குணங்கள் காணலாம் எனச் சொல்லியிருக்கிருர். இச்சுரப்பிகள் (Glands) சாயா சரீரத்தைப் போலவே, நெடுங்காலமாக மிகத் தேர்ச்சி பெற்றுள்ள மறை ஞானிகளுக்குத் தெரிந்த விஷயம். ஆனல் டாக்டர்கள் இவைகளை (இச்சுரப்பிகளை) பிரயோசனமற்ற உறுப்புகள் (Atrophied Gland) என்று அலச்சியப்படுத்தி வருகிருர்கள். தங்களுக்கு எது தெரிய முடியாமலிருக்கிறதோ அதை பிரயோசனமற்றது என்று கூறும் வழக்கம் டாக்டர்களிடம் காணலாம். உதாரணமாக, நமது உடலிலிருக்கும் புழுக்குடலை, (Vermiform Appendix) இப்போதும் டாக்டர்கள் பிரயோசன மற்ற உறுப்பு என்று சொல்லி வெட்டியெறிவதைக் காண்கிரேம். ஆனல், மறைஞானிகளுக்கு, இச்சுரப்பிகளின் நீர்ப் பெருக்கத்தைப் பொறுத்துத்தான், மக்களின் இகபர வாழ்வு அடங்கி நிற்கிறது என்பது தெரியும். தற்காலம் இச்சுரப்பிகள் (Glands) ஒன்றிற்கொன்று சம்பந்தமில்லாமலிருக்கிறது. மனிதன் பிறவிச் சுழலில் முன்னேறிவருங் காலத்தில், அவைகளுக்கிடையே துடர்பு ஏற்பட்டு நல்ல பலன் கிடைக்கும். அவ்விதம் இவைகள் இணைவது சாயா சரீரத்தின் உதவியினல்த் தான் என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

இந்த இடத்தில் நேயர்களின் கவனம் வேறு ஓர் விஷயத்தில்த் திருப்ப வேண்டிய அவசியம் நேரிடுகிறது, அதாவது தற்காலம் மேல்நாட்டு வைத்திய முறையைக் (Allopathy) கையாளும் வைத்தியர்கள், மனிதர்கள் உடம்பில், மிருகங்களின் (குதிரை, பன்றி, குரங்குகளின்) சுரப்பி நீர்களை (Animal Glandextracts) உள்ச் செலுத்தி வருகிருர்கள். மறைஞானக் கொள்கையின்படி, இது மிகவும் வருந்தத்தக்க விஷயம். இன்னும் சிறிது காலத்திற்குள் இது குற்றமான செய்கையெனக் கருதப்படும். மேல்ப் பிறவியடைந்த மனித உடலில், கீழ்ப் பிறவியிலுள்ள மிருகச் சத்தை யேற்றினல், அவனுக்கு அச் சத்தினல் மிருகத்திற்குண்டான சில கீழ்க் குணங்கள் (சுபாவங் கள்) ஏற்பட்டுவிடுமென்பதையறிய மறை ஞானம் பயில

வேண்டியதில்லை. இவ்வண்ணம் மிருகச்சத்து செலுத்தப்பட்டவர்களிற் பலர், முன்னிருந்ததைவிடச் சுபாவத்தில்க் கீழிறங்கிக் காணப்படுகிருகளென்பதற்குப் போதிய சான்றுகள் இருக்கின்றன. அதாவது சாந்த குணமுள்ளவன், இத்தகைய மிருகச்சத்தை உடலில் ஏற்றுக்கொண்டபின் முன்கோபியாக மாறிவிடுகிருன். கோபம் ஓர் மிருக சுபாவம். இதனுல் நல்லவர்கள் கொலை பாதகர்களாகக் கூட மாறலாமென நம்புவதற்குக் காரணமிருக்கிறது. ஓர் மிருகத்திற்கு, மற்ருெரு மிருகத்தைக் கொன்று தின்னும் சுபாவமுண்டென்பது நன்கு தெரிந்ததே. மனிதனுடைய பார்வை, பேச்சு, கேள்வி, எண்ணம் முதலியவைகளின் அலைகள் (Vibrations) மிருகத்தின் அலைகளினின்றும் (Animal Vibrations) முற்றிலும் மாறுபட்டது. எனவே இவைகளை (மிருகச் சத்துக்களை) நம் உடலில்க் கலக்கக்கூடாது.

மேலே சொன்ன சாயா சரீர விஷயத்தை நாம் நன்கு உணர்ந்துகொண்டால், நமது பழமையான நாட்டு வைத்தியமாகிய சித்த வைத்தியத்தின் பெருமையை நன்கு உணர முடியும்.

சித்தவைத்திய மருந்துகள் முறைப்படி "குருமுடித்து"ச் செய்தால் (அதாவது முப்பு என்னும் குருமருந்தைச் சேர்த்துச் செய்தால்) பிணிகளுக்கு கடுகளவு அல்லது சீரகத்தினளவு கொடுத்தால்ப் போதும். இவ்வளவு சிறிய அளவைத்தான் சாயா சரீரம் எற்றுக்கொள்ளும். பெருமளவில் (அதாவது அவுன்ஸ் கணக்கில்) மருந்தைச் சாப்பிட்டால் மருந்து ஸ்தூல உடலுக்குள்ப் போய்ச் சேருமேயொழியச் சாயா சரீரத்தைத் தீண்டாது. சாயா சரீர உதவியில்லாமல்ச் செய்யும் சிகிச்சை பலனேற்பட நாள்ச் செல்வதோடல்லாமல், ஏற்பட்ட பலனும் நிலைத்து நிற்காது. நுண் உடல் வேலைசெய்ய, மருந்தும் நுண்ணிய அளவில்த்தானிருக்கவேண்டும். சாதாரணமாய்ச் சாப்பிடும் உப்பை (Common Salt — Sodium Chloride) நுண்ணிய தன்மையாக்கி அதில்க் குன்றியளவு சாப்பிட்டால் அதற்குப் பெரும் சக்தி செய்யும் தன்மையுண்டு. 100 புடம்

1000 புடமெனச் சித்த வைத்திய மருந்துகள் புடமிட்டெடுக்கப் படலால், மருந்து நுண் தன்மையெய்துவதோடு மிகுந்த சக்தியை (வீரியத்தையும்) அடைகின்றன. மரம் செடிகள், நெற் பயிர் முதலானவற்றிற்கு, நாம் வண்டி வண்டியாய் உரம் போட்டாலும் அவைகள் தங்கள் வேரின்மூலம், தங்களுக்கு வேண்டிய சத்துக்களை நுண்ணிய அளவில்த்தான் எடுத்துக் கொள்ளும் (கிரகித்துக்கொள்ளும்). நாம் பயிர்களுக்கு மட்டிற்கு மிஞ்சி உரம் போட்டால், பயிர்கள் நாசமடைந்து விடுவதைக் காண்கிறோம். அதற்கு ''உரவேக்காடு'' என்று சொல்கிறார்கள். இயற்கை எதையுமே நுண்ணிய அளவால்த்தான் எடுத்துக் கொள்ளும். இதை விட்டு விட்டு மேல்நாட்டு முறைப்படி அவுன்ஸ் கணக்கில் மருந்து கொண்டால் பிணி நீங்குவது கடினம்,

இந்த சித்த வைத்தியத்தை ஒட்டியதுதான் 'ஹோமியோ பதி' (Homeopathy) என்னும் சிறந்த வைத்தியமும். சித்த வைத்தியத்தில் 1000-க் கணக்கான புடமிட்டு மருந்தை நுண் தன்மையாக்குவதுபோல், ஹோமியோபதி வைத்தியத்தில் ஓர் பங்கு மருந்திற்கு அதைவிட 10, 100, 1,000, 10,000 மடங்கு 'பால்ச் சீனி' (Sugar of Milk) சேர்த்து அச்சீனியில் இம் மருந்துகள் நன்றாய்க் கரையும்வரை அரைத்து, நுண் தன்மை யாக்கி உபயோகிக்கப்படுகிறது. ஆகவே 100,000 மடங்கு சீனி சேர்ந்த 'கெந்தகத்தை' ஓர் 'கிரைன்' (Grain) அளவு உட்கொண்டால் அந்த அளவில் 99,999 அளவு சீனியும் 1 அளவு கெந்தகமும்தானிருக்கிறது. அவ்விதம் பக்குவப் படுத்தினால்த்தான் சாயா சரீரம் ஏற்றுக்கொள்ளும்.

சித்தவைத்தியம் உலகிற்கு சித்தர்களால் (Adepts) போதிக்கப்பட்டது. சித்தர்கள் என்பவர்கள் குருநாதர்களுக்கும் (Masters) மேலானவர்கள், ஹோமியோபதி வைத்தியம் குருநாதர்கள் ''ஹானிமான்'' (Hanneman) என்னும் ஜெர்மானியரைக்கொண்டு உலகிற்கு வெளியிட்டார்கள். ஆனால் ஹானிமான் (Hanneman) என்பவருக்கு குருநாதர்கள் மூலம் தான், இது தனக்குக் கிடைத்ததாகத் தெரியாது. ஹானிமான்

மிகுந்த ஆராய்ச்சிக்காரர், தன்னலமற்றவர், எனவே, குருநாதர்கள் அவருக்குத் தெரியாமலே அவருக்கு வேண்டும் உதவியளித்து வந்தார்கள். நம் சித்தவைத்தியத்தைப்போலவே இதையும் (ஹோமியோபதி வைத்தியத்தையும்) மேல் நாட்டு வைத்தியர்களும், மேல்நாட்டு வைத்தியப் பட்டம்பெற்ற நம் நாட்டுவைத்தியர்களும் புறக்கணிக்கிருர்கள். புறக்கணிப்பதோடு மட்டுமல்லாமல், குறைகூறவும் செய்கிருர்கள். மேல்நாட்டு முறை கற்ற வைத்தியர்கள், இந்த இரண்டு வைத்தியங்களையும் சரியானபடி ஆராய்ச்சி செய்கிறதில்லை. ஆராய்ச்சிசெய்து பரீக்ஷைகாட்டக்கூடியவர்களிடமும் துடர்பு வைத்துக் கொள்வதுமில்லை. தங்கள் வைத்திய முறையைத் தவிர மற்றமுறைகள் பிரயோசனமற்றவைகள் என்ற திடசித்தாந்தங்கொண்டவர்கள். ''கண்ணை மூடிக்கொண்டு எதையும் பார்க்கமாட்டேன் என்று சொல்பவர்களைவிடக் குருடர்கள் வேறில்லை'' என்னும் பழமொழி இவர்களுக்குத்தான் பொருந்தும் இதில் ஹோமியோபதி வைத்தியத்தின் சிறப்பை உணருவதற்கு ஓர் உதார மென்னவென்ருல், ஐரோப்பிய, அமெரிக்க நாடுகளிலும், நம்நாட்டிலும், அதிலும் நம் நாட்டில் வடநாட்டிலும், **(Calcutta)** அலோபதி வைத்தியர்களிற் பலர் ஹோமியோபதி முறையைப் பரீக்ஷை பார்த்துத் தெளிந்தபின், தாங்கள் கற்ற அலோபதிக் முறையை அறவே விட்டுவிட்டு, ஹோமியோபதி முறையே சிறந்ததெனக் கையாண்டு வருவதே போதும். இந்த நூல் வைத்திய விஷயமாக எழுதும் நோக்கத்தை கொண்டதல்ல வாகையால் இதை இத்துடன் நிறுத்தி மேல் நம் விஷயத்தைத் துடருவோம்.

மறை ஞானத்தால் உலகிற்கு மற்ருெரு அரியகலை கிடைக்கும்படி குருநாதர்கள் செய்திருக்கிருர்கள். இக்கலையும் சாயா சரீர உதவியினுல்ப் பெறலாம். அதாவது ''கண்ணில்லாப் பார்வை'' (eyless sight) என்று அக்கலைக்குப் பெயர். இதனுல்க் குருடர்கள் தங்கள் கண்ணைக்கொண்டு பார்க்காமல் வேறு வழியில்க் கண்கொண்டு பார்ப்பது போலவே பார்வையை அடைகிருர்கள்.

சிறிது காலத்திற்கு முன் ''ஜூல்ஸ் ரோமெயின்'' **(H. Jules Romain)** என்னும் பிரஞ்சுக்காரர் நமது தோல் **(Skin)** மூலம்

எவ்விதம் பார்ப்பது என்பதைப்பற்றி ஓர்புத்தகம் வெளியிட்டார். இவர் கண்ணிழந்தவர்கள் (குருடர்கள்) அநேகருக்கு தங்கள் உடலிலுள்ள தோல் மூலம் பார்க்கும் வகையைக் கற்றுக் கொடுத்தார். ஆனால் அவருக்குச் சாயாசரீரம் என்று ஒன்று உண்டென்பதே தெரியாது. சாயசரீரத்தின் மூலம் பார்க்க முடியும் என்பது மறை ஞானிகள் அறிந்த விஷயம். இதையே அவர் தன்னையறியாமலே கண்டுபிடித்துச் செய்தார். இவருக்கு மேலாக ஓர் படி மறைஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள். அதாவது சாயாசரீரத்தின் மூலம், செவிடர்கள் கேட்கவுமுடியு மென்பதே. இவ்வண்ணம் பார்ப்பது, கேட்ப்பது என்பது எதனால் முடிகிறதென்பதை விளக்குகிறோம். சாயாசரீரம் என்பது உண்மையில் உணர்ச்சியுடல். அது நமது ஸ்தூல உடலுடன் சேராவிட்டால் நமக்கு உணர்ச்சியென்பதேயிராது. நமக்குக் 'குளோரோபாம்' (Chloroform) கொடுத்தவுடன் நமக்கு உணர்ச்சி போய்விடுகிறது. இது எதனால்? 'குளோரோபாம்' தற்காலீகமாக நமது சாயாசரீரத்தை, நமது ஸ்தூல உடலின்று அகற்றிவிடுகிறது. எனவே நமது உணர்ச்சியுமகன்றுவிடுகிறது. இந்த விஷயம் வைத்தியர் களுக்குத் தெரியாது. ஆனால் ஞானக்கண் பார்வைபெற்ற வர்கள் (Clairvoyant observeres) 'குளோரோபரம்' கொடுத்தவுடன், நமது சாயாசரீரம் நமது ஸ்தூல உடலை விட்டுப் பிரிந்து நிற்பதைக் காணலாம். சாயாசரீரத்திற்கு உணரும் சக்தி மட்டுமில்லை. காணும் சக்தியும், கேட்கும் சக்தியு மிருக்கின்றது. 'குளோரோபாம்' இல்லாமலே நமது ஸ்தூல உடலைவிட்டுச் சாயாசரீரத்தைப் பிரிக்கமுடியும். அவ்விதம் பிரிந்து சாயாசரீரத்தால் நாம் உலாவி மீண்டும் ஸ்தூல உடலிற் பிரவேசிக்கலாம். இந்த வித்தை அதற்குறிய கல்வி யினாலும், மனோதிடத்தினாலும், அப்பியாசத்தாலும் அடைய முடியும். குருநாதர்மூலம் இதைப் பயிலாதவர்கள் மிகுந்த ஆபத்திற்குள்ளாவார்கள். இந்த சித்தியைப் பெற்றவர்கள், தங்கள் ஸ்தூலஉடலைவிட்டுப் பிரிந்தகாலத்தும், தங்கள் ஐம் புலன்களும் (பஞ்சேந்திரியங்கள்) தங்கள் ஸ்தூல உடலுடன் கூடி வேலை செய்வதேபோல் வேலைசெய்ய முடியும். இதில்

முக்கியமாய்க் கவனிக்கவேண்டியதென்னவென்ருல், சாயா சரீரத்தில் ஓர் குறிப்பிட்ட ஸ்தானமூலமாய்த்தான் பார்க்கவோ கேட்கவோ வேண்டுமென்பதில்லை. இச்சக்தி சாயாசரீர முழுவதும் பரவி நிற்பதால், எவ்விதம் நமது ஸ்தூல உடலில் எங்கு தொட்டாலும் நமக்கு உணர்ச்சி உண்டாகுகிறதோ அதேபோல் சாயாசரீரத்தில் எங்கும் எல்லாப் புலனறிவும் பரந்து நிற்கிறது. எனவே சாயாசரீரப் பார்வை பெற்ருல்: ஊனக்கண் இல்லாமலே, ஞானக்கண்கொண்டு நாம் எதையும் பார்க்கமுடியும். இந்த பிரஞ்சுக்காரர் கண்டுபிடித்த வித்தையால் குருடர்கள் பார்க்கமுடிகிறது. இதை இன்னும் ஆராய்ச்சி செய்தால் செவிடர்களையும் கேட்கப்பண்ணலாம். மறைஞான உதவியினுல் வைத்திய சிகிச்சை செய்துவருபவர்களுக்கு (Spiritual-healers) இதனுலேற்படும் பலன் அளவிடத்தக்கதல்ல.

மலையாள தேசத்தில் அதிகமாக கையாளப்படுகிற 'வர்ம வைத்தியம்' என்பதும் சாயா சரீர உதவியினுல்ச் செய்யப்படுவதுதான், இந்த வர்ம வைத்தியம் செய்கிறவர்கள் அநேகம் பேருக்கு, உடற்கூறு (Anatomy) என்பது இன்னதென்றே தெரியாது. உடம்பில்ச் சில ஸ்தானங்களைத் தட்டிவிடுவதால், உடம்பிலுள்ள சில பிடிகள் போன்ற கோளாறுகளை இவர்கள் நிவிர்த்தி செய்கிருர்கள். இவர்கள் தங்களை அறியாமலே சாயா சரீரத்தின் மர்ம ஸ்தானங்களைத் தூண்டி உடலைச் சரியாக்கி விடுகிருர்கள். இவர்களுக்கு எலும்பு சம்பந்தமான பிடிகளை நீக்குவது தவிர வேறென்றும் தெரியாது. ஆனுல் மேல் நாட்டில் (England — America) ஆஸ்டோபதி (Oesteopatty) என்று இம்முறைக்குப் பெயரிட்டு, இதனுல்ப் பிடிகள் மட்டுமல்லாது மற்ற இதர உடற் பிணிகளையும் நிவிர்த்திக்கிருர்கள். இம் முறை பிரபலமடைய இன்னும் நாட்கள் செல்லும். முதுகிலுள்ள் 32 தண்டெலும்புகளின் (Spinal Vertebra) கோளாறு காரணமாக (அதாவது இருக்க வேண்டிய ஸ்தானத்தை விட்டு விலகியிருப்பதின் காரணமாக) அநேகம் வியாதிகள் நேரிடுகின்றனவென்றும், அதைச் சரிப்படுத்திவிட்டால் நோய் நீங்கி விடுமென்பதும் இம் முறையின் மேற்கோள். அவ்விதம் அந்த முதுகெலும்பு விலகி நிற்பதால்,

நரம்புகளின் வழி இரத்த ஓட்டம் சரியாய்ச் செல்ல முடியாதபடி தயக்க மேற்படுகிறது. அதைக் கையினுல்த் தடவி ஒழுங்கு படுத்துவதே இவர்கள் கையாளும் முறை. இது மறை ஞானிகளால் முற்றிலும் ஒப்புக்கொள்ளக்கூடிய விஷயம். முதுகிலுள்ள எலும்புகள் இருக்கவேண்டிய நிலையைவிட்டுச் சிறிது மாறினுலும், சாயா சரீரத்தின் தொழில்கள் பாதிக்கப்படும். எனவே பிணிகள் ஏற்படும் என்பதும் மறை ஞானிகள் கொள்கை. எனவே இவ்வகை வைத்தியமும் போற்றத்தக்கதுதான்.

குருநாதர்கள் சில புதிய வைத்திய முறைகளை, எண்ணங்களின் மூலம் (By Thought Force) சில வைத்தியர்களுக்கு அறிவிக்க விரும்பியபோது, அவ்வைத்தியர்கள் தங்கள் பழைய வைத்தியத்தை விட்டுப் புதிய முறையை ஏற்றுக்கொள்ளக்கூடிய சக்தியில்லாதவர்களாய்க் காணப்பட்டதால்; குருநாதர்கள் அவ் வைத்தியர்களை விட்டுவிட்டு, சாதாரண மக்களில்ச் சிலருக்கு அவ்வறிவைப் புகட்டி (எண்ணத்தின் மூலம் — By Thought Force) அம் முறைகள் உலகிற்கு பயன்படும்படி செய்திருக்கிருர்கள். அவைகள் பலவகைப்பட்டனவாகயிருப்பினும் அவற்றுள் மூன்றை மட்டும் சொல்கிருேம்.

முதலாவதாக; வெவ்வேறு ஏழுவகை நிறங்கொண்ட (Vibgyor) கண்ணுடி பாட்டில்களில், சுத்தமான குளிர்ந்த நீரை அடைத்து, வெயிலில் வைத்து (இவ்வளவு நேரம் என்று கணக்கிருக்கிறது) பின், அந்த நீரை அருந்திஞல்; இன்னின்ன நிறத் தண்ணீரால், இன்னின்ன பிணிகள் போகும் என்று ஒருவருக்குச் சொல்லி அவரால் உலகமறியும்படி செய்தார்கள்.

இரண்டாவதாக; நாட்டில் சர்வ சாதாரணமாக காணப்படும் பூக்களைத் பறித்துத் தண்ணீரில் ஊறவைத்து வெயில் முகம் காட்டி எடுத்து உட்கொண்டால் குறிப்பிட்ட பூக்களின் நீரால்க் குறிப்பிட்ட பிணிகள் நீங்கும் என்று மற்றொருவருக்குப் போதித்து வெளிப்படுத்திஞர்கள்.

மூன்ருவதாக ஒருவர் ஒரு நாள், வலை வைத்துப் பறவைகளைப் பிடித்துக் கொண்டிருந்தார். (அது அவர்

தொழில்) அவ்விதம் செய்யும்போது, ஓர் நாள் ஓர் பெரிய பறவை வலையில் தன் கால்களைத் தாறுமாருகச் சிக்கவைத்துக் கொண்டது. வலைக்காரர் அந்தப் பறவையின் கால்களை வலையிலிருந்து எடுக்கும்போது, அது துள்ளியதால், அப் பறவையின் கால்கள் ஒடிந்துவிட்டன. ஒடிந்த சப்தம் கேட்கும் போது, அதன் கண்ணில் ஓர் சிகப்புக்கோடு பாய்ந்திருப்பதைத் தற்செயலாய்க் கண்டார். உடனே அவருக்கு ஓர் எண்ணம் உண்டாயிற்று. அதாவது உடலுக்கு ஏதாவது தீங்கு நேர்ந்தால், உடன் கண் அதைக்காண்பிக்கக் கூடுமென்று. இந்த எண்ணத்தை வைத்துக்கொண்டு, பல ஆராய்ச்சிகள் செய்து பார்த்ததில், அது சரியென்று தெரியவந்தது. அதனுல் அவர் எந்த நோயையும் கண்களினுல்க் கண்டு பிடித்துக் குணப் படுத்தலாமென ஓர் புத்தகம் வெளியிட்டார். அதனுல் உலகத் திற்குப் பெரும் பயன் கிடைத்தது.

எனவே வைத்தியர்கள், குருநாதர்கள் புகட்டும் அறிவை ஏற்கமுடியாது போனுல்; அவ்வறிவை, உலகிற்கு வைத்தியர் கள் அல்லாதவர்களைக் கொண்டே அறிவிக்கும் சக்தி குரு நாதர்களுக்கு உண்டு. உதாரணமாக; ஓர் துறவியின் மூலம் தான் நிமிளையை (Antimony) உபயோகிக்கும் வழி, மேல் நாட்டிற்குக் கிடைத்தது. குளிர் காய்ச்சலைக் (Ague) குணப் படுத்தும் முறை ஓர் சாதாரண மனிதன் மூலம்தான் அறிந்தார் கள். கல்லடைப்பைக் குணப்படுத்தும் வழி ஓர் சந்நியாசி அறிவித்தார். சொறிநோய் (Scurvy) குணப்படுத்தும் முறை, ஓர் மாலுமியால்த் தெரிய வந்தது. காதடைப்பு நீங்கும் வழி ஓர் போஸ்ட் மாஸ்டர் தெரிவித்தார். தினவுக் கிரிமியை (Itch-insect) ஒளிக்கும் வகை காய்கறி விற்கும் பெண் ஒருவள் கண்டுபிடித்தாள். குணப்படுத்த முடியாத ஓர் வியாதிக்கு, மருந்து, ஜப்பானிய புறச் சமயி ஒருவரால் வெளியிடப்பட்டது. Lobelia-வின் (ஓர்வகைப் பூண்டு) உபயோகம் ஆப்பிரிக்கக் காட்டுமிராண்டி ஒருவன் சொன்னது. எனவே அதனதற்குரிய காலம் வந்தபோது, எதிர்பாராத வழிகள் பலவற்றின்மூலம் குருநாதர்கள் மக்களுக்கு அறிவைப் புகட்டுவார்கள் என்பது விளங்கும்.

இந்த நூலில் வைத்திய விஷயமாக இவ்வளவு அதிகம் சொல்லப்பட வேண்டியதிற்குக் காரணம் சாயா சரீரத்தின் மேன்மையை, நேயர்களுக்கு அறிவுறுத்தவேதான். ஆன்மா முன்னேறுவதற்கு முதலில் நமது உடலைப் பிணியில்லாது வைத்துக்கொள்ள வேண்டும். உடல்ப் பிணியால் ஆன்ம வித்தை கற்க வசதியில்லாது போகக்கூடாது. ''சுவரை வைத்துத்தான் சித்திரம்''. உடலை வைத்துத்தான் ஆன்மா முன்னேறும் வழி கற்க வேண்டும். எனவே உடலைப் பாது காக்கும் முறையைப் பற்றியும் இந்த நூலில்ச் சொல்லியாக வேண்டும். உடலைக் காப்பதென்பது, நோய் அணுகாமல் உடலைச் செவ்வனே வைத்திருப்பது. இது நாம் உட்கொள்ளும் உணவையும் தேகப்பயிற்சியையும் பொறுத்தது. உணவு மிகுந்த சத்துள்ளதாயிருக்கவேண்டும். பால், தயிர், வெண்ணை நெய், பழங்கள் முதலியன நிறையச் சேர்க்க வேண்டும். தினம் தேன் அருந்த வேண்டும். தேனுக்கு மிகுந்த குணங்கள் உண்டு. ஆங்கிலத்தில் ''தேனும் அதன் உபயோகமும்'' **(Honey & its Uses)** என்று ஓர் தினிப் புத்தகம் எழுதப் பட்டிருக்கிறது. எனவே தேனுக்கு எவ்வளவு பெருமை யென்பது நன்கு விளங்கும். அளவிற்கு மிஞ்சிச் சாப்பிட்டாலும் தேன் கெடுதி செய்யாது. என் அதைக் கவனிக்க வேண்டு கிறேம்.

தமிழ் நாட்டில், அதிலும் திருநெல்வேலி ஜில்லாவில் சைவர்கள் அதிகம். பரம்பரையாக மாமிச உணவைக் கண்ணு லும்கூடப் பார்க்க மாட்டார்கள். இவர்களுக்குப் பிணி அதிகம் நேரிடுகிறதில்லை. சைவர்களில்க் குட்டம், குறை நோய் பிடித்தவர்களைக் காண்பதரிது. ஆகையால் சைவ உணவே சாலச் சிறந்தது. ஆன்ம வளர்ச்சி தேட முயலுபவர்கள் மாமிச உணவை அறவேயொழிக்கவேண்டும். முட்டை சாப்பிடுவ தால்த் தீங்கில்லை, அது மாமிச உணவாகாது, என்று சிலர் சொல்லுகிறார்கள். அவர்கள் சொல்வது தவறு. முட்டையும் மாமிச உணவேதான். மக்கள் பிறவி முன்னேற்றத்தில் வளர்ச்சி யடையும்போது, அவர்களுக்கு உணர்ச்சி **(Power of Sense)** மிகவும் அதிகப்படுகிறது. அதாவது சாயா சரீரம் நன்றாக

வேலை செய்யத் துடங்கிவிடுகிறது. நாம் முன்னே கூறிய மாமிச சத்தே (Sereums), சாயா சரீரத்தைத் தடைசெய்யு மானல், மாமிசத்தை அப்படியே சாப்பிட்டால் அது எவ்வளவு தூரம் தடைசெய்யும் என்பதை அறிந்துகொள்ளுங்கள். மேல் நாட்டில் வழக்கமாக மாமிச உணவருந்தி வந்தவர்கள், அதை விட்டுவிட்டுக் காய்கறி உணவுதான் மேம்பட்டது என நினைத்து அதைக் கடைப்பிடித்து வரும்போது, நம் சைவ மக்களில் சில இளைஞர்கள் மாமிச உணவைச் சாப்பிடப் பழகிவருகிறார்க ளென்றால் இது எவ்வளவு வருந்தத்தக்க செய்கை.

தற்காலம் டாக்டர்கள் ஊட்டச்சத்து எனப் பெயரிட்ட (வைட்டமின் — Vitamin) பல சத்துக்களைச் சாப்பிட்டால் உடலுக்கு நன்மை செய்யும் எனப் போதித்து வருகிறார்கள். அவர்கள் அதற்கு முறையே A. B. C. D வைட்டமின் என்று பெயர் கொடுத்திருக்கிறார்கள். அவ்விதம் அவர்கள் தயார் செய்துவைத்த பொருள்களைச் சாப்பிடுவதைக் காட்டிலும், அச் சத்துக்கள் நிறைந்துள்ள சரக்குகள் எவைகளோ அவை களை, இயற்கையிலுண்டானபடி சாப்பிட்டால், அது அதைவிட மிகவும் நல்லது. கோதுமை, பழங்கள் முதலியவற்றின் சத்தைச் சாப்பிடுவதைவிட கோதுமையையும் பழங்களையும் அப்படியே சாப்பிடுவது நலம். உதாரணமாக; கருப்புக்கட்டி, சர்க்கரை, சீனிக்கிழங்கு முதலியவற்றிலிருந்து எடுக்கப்பட்ட சீனியை உட்கொள்வதைவிட, பாலிலோ, அல்லது நமக்கு வேண்டும் ஆகாரத்திலோ, கருப்புக்கட்டியையாவது சர்க்கரையையாவது அப்படியே சேர்த்துச் சாப்பிடுவது நல்லது. அரிசியை மில்லில்க் குத்தித் தவிட்டை அறவே போக்கி வெண்மையாக்கி சமைத்துக் கஞ்சியை வடித்துவிட்டுச் சாப்பிடுவதைக் காட்லும் கைக்குத்தரிசியைப் பொங்கி கஞ்சி வடிக்காமல்ச் சாப்பிடுவது நலம். விரிக்கிற் பெருகும்.

இனி உடற்பயிற்சியைப் பற்றி சொல்லுகிறோம். உடற் பயிற்சி சிறியவர்களுக்கு வேறு, முதியவர்களுக்கு வேறு. ஆனல்ச், சிறியவர்களும் முதியவர்களும் (அதாவது 18 வயதிற்கு மேற்பட்டவர்கள்) ஓர்விதப் பழக்கத்தை (அப்பியா சத்தை) கடைப்பிடிக்கலாம். அதாவது பிருணயாமம் என்னும்

சுவாசப் பயிற்சி. இப்பயிற்சியைத் தெரிந்தவர்கள்மூலம் கற்று, நாள்த்தவருமல்ச் செய்துவந்தால் நல்லது. நோயணுகாது. நாம் இந்த நூலில் அடிக்கடி தெரிந்தவர்கள் மூலம் கற்க வேண்டும் என்று வலியுறுத்தி வருகிருேம். ஏனெனில் ஓர் முறையை இவ்விதம்தான் செய்யவேண்டும் என்பதை நன் குணராதவர்கள், அதைக் கற்பித்துவருவது நம் நாட்டில் சர்வ சாதரணமாகிவிட்டது. யோகியென்று பலர் இப்போது நம் நாட்டில் திடீரென்று காளான்போல்க் கிளம்பி தவருன பாதையை மக்கள் அனுசரிக்கும்படிசெய்து கேடுவிளைவித்து வருகிருர்கள். பிருணுயாமம் சம்பந்தப்பட்டமட்டுமாவது சரியான குருவிடம் கேட்டுத் தெரிந்து அப்பியாசிக்கவேண்டும். சிறுவர்கள் தற்காலப் பள்ளிக்கூட விளையாட்டிலும் அதிகம் பங்கெடுத்துக்கொள்ள வேண்டும். முதியவர்கள் காலை மாலை நாள்தோறும் தவருது தூயகாற்றில் உலாவி வரவேண்டும். மூன்றுமைல் தூரம் போய்த் திரும்பிவரவேண்டும். போகவர ஆறுமைல் தூரத்திற்குக் குறைந்தால் பலனில்லை. இத்துடன் வருடத்தில்ச் சிறிதுநாள் மலைவாசமும், சிறிதுநாள்கள் கடற் கரை வாசமும் செய்தால் நலம். இத்தகைய வாசத்தினுல் அள விடமுடியாத பலன் உண்டு. மலைகளில் அருவியிருந்தால் அதில் அதிகாலை தினம் தவருது குளிக்கவேண்டும். கடற்கரை வாசம் செய்யும்போது வாரம் இருமுறையாவது கடல்ஸ்நானம் செய்யவேண்டும். கடல் ஸ்நானம் தினம் செய்வதால் தவ றில்லை. ஆனுல் அவ்வித ஸ்நானம் செய்யும் காலத்தில் வாரத்திற்கு ஒரு முறை எண்ணை தேய்த்து சுத்த நீரில் ஸ்நானம் செய்யவேண்டும். இவ்வித பழக்கங்களை முறையாய் அனுசரித்துவந்தால் உடல்நலமேற்படும். வைசூரி, கால்ரா, பிளேக், முதலிய தொத்து வியாதிகள், இவ்விதப் பழக்கங்களை வழக்கமாகக் கொண்டவர்களிடம் அணுகாது. தாம்பிரவர்ணி போன்ற ஜீவநதிகள் கரையோரம் வசிப்பவர்கள் காலையில்த் தவருது அந்நதிகளில் நன்ருய் மூழ்கியும் நீந்தியும் ஸ்நானம் செய்யவேண்டும். இம்முறைகளால்ச் சாயாசரீரம் தூய்மையடை யும். எனவே சாயாசரீரத்தை எவ்வளவு சுத்தமாக வைத்திருக் கிருேமோ அவ்வளவு நாம் ஆன்ம வளர்ச்சியில் முன்னேறலாம்.

## 11. குருநாதர்களைக் காணும் வழி

இந்த நூலை முடிக்குமுன் மேலே சொன்ன குருநாதர்களைக் காணும் வழியைப் பற்றிச் சொல்லாவிட்டால், நாம் எடுத்த வேலை முற்றுப் பெற்றதாகாது. குருநாதர்கள் ஸ்தூல உடலில்த் தற்காலம் இருக்கிருர்களென்று நேயர்கள் நம்பும்படி சொல்லி யிருக்கிரும், ஆனல் அவர்களிடம் துடர்பு கொள்ளும் வழியைப் பற்றி இதுவரை சொல்லவில்லை. கற்றறிந்தோர் களுக்குத் தங்கள் நினைவில்லாமலே, குருநாதரின் துடர்பு ஏற்பட்டிருக்கிறதென்பதையும் இந்நூலில்ப் பல இடங்களில்ச் சொல்லியிருக்கிரும். இதை வாசிக்கும் சகோதர சகோதரி களில்ச் சிலருக்காவது, குருநாதர்களிடம் துடர்பு வைத்துக் கொள்ள வேண்டும் என்னும் எண்ணம் எழலாம். அவர்களுக் காகத்தான் இந்த அத்தியாயம் எழுதுகிரும்.

குருநாதரைத் தேடி ஞானம்பெற விரும்புபவர்களுக்கு "மறை ஞான மாணவர்" என்று பெயர். நானும் (இதை எழுதுகிறவரும்) அக்கூட்டத்தைச் சேர்ந்த தாழ்மையான மாணுக்கர்களில் ஒருவன்தான். நேயர்களைவிட நான் ஏதோ மேல்ப்படியில் நிற்பதாகக் கருதவில்லை. அவ்விதமிருந்தும் இந்த நூலை எழுதுவதின் காரணமென்னவென்ருல், எனது சிறு பருவமுதலே, வேதாந்த விசாரணை செய்பவர்களிடம் மிக மிக நெருங்கிய பழக்கத்தாலும், பின்னர் (வயது வந்த பின்னர்) ஆங்கிலத்தில் மறைஞானத்தைப்பற்றி பல புத்தகங்கள் வாசித் ததினுலுண்டான பயனுலும், நான் கற்றதைப் பிறருக்கும் கொடுக்கவேண்டும் என்னும் எண்ணம் அடிக்கடி மனதி லுறுத்திக் கொண்டிருந்ததாலும்தான். நான் முப்பது வருட காலமாகச் சித்த வைத்திய ஆராய்ச்சியிலீடுபட்டவன் என்பது பலருக்குத் தெரியுமாகையால், நான் சித்தவைத்தியத்தைப் பற்றி நூல் எழுத வேண்டியதை விட்டு விட்டு, மறை ஞானத்தைப் பற்றி எழுதுவானேன் என்ருல், மறைஞானத்தில் அடங்காத கலை உலகில் எதுவுமில்லை. அதிலும் வைத்தியக் கலை மறைஞானத்துடன் மிக நெருங்கிய துடர்பு கொண்டது.

மேலும் சித்த வைத்தியத்தில், மறை ஞானம் அநேக இடங்களில்க் கையாளப்பட்டிருக்கிறது. எனவே வைத்தியத்தைப் புறக்கணித்ததாக நினைக்க வேண்டாம்.

மறை ஞான வழியின் மூலம் நாம் அடைய வேண்டிய லக்ஷியம் என்னவென்றால், தட்டுத் தடங்கலற்ற என்றும் அழியாத இன்பமே. சிலர் இவ்வுலக இன்பத்தை, முழுவதும் நம் வாழ் நாளிலேயே அடைவதை விட மேலானது ஒன்றுமில்லை என்று வாதாடுகிறார்கள். அது தவறு. மனிதன் தான் செய்யும் காரியங்கள் எல்லாம், தான் இன்பமாகயிருப்பதற்காகத்தான். வியாபாரி உழைத்து உழைத்துப் பணம் சேகரிப்பது முதல், காமாந்தகன், குடிகாரன், சூதாடி, சோம்பேறி, உழைப்பாளி வரை எல்லோரும் தங்கள் தங்கள் செய்கைகளில் இன்பமிருப்பதாகக் கருதியேதான் செய்கிறார்கள். லோபி சேமித்துப் பதுக்கி வைப்பதில் இன்பம் காண்கிறான். வள்ளல் கொடையில் இன்பம் காண்கிறான். கர்வம் கொண்ட பெண் தன் தலைச் செருக்கில் இன்பமடைகிறாள். பகட்டுக்காரி ஆண்கள் தன்னைச் சூழ்ந்து நிற்பதில் ஆனந்தமடைகிறாள். சிலர், டாக்டர்களால்க் குணப்படுத்த முடியாத வியாதி தங்களுக்கிருக்கிறது என்பதைச் சொல்லிச் சொல்லி அதில் ஓர் மகிழ்ச்சியடைகிறார்கள். (தவறான வழியிலேற்பட்ட மகிழ்ச்சிகளில் இது ஒன்று) எனவே சுருங்கக் கூறவேண்டுமானால், எல்லோரும் துன்பமில்லாமலிருப்பதையே விரும்புகிறார்கள். இன்பம் என்பது இவ்வகையாகயிருப்பதால், மறை ஞானிகள், மக்கள் தவறான வழிகொண்டு அழியும் இன்பத்தை விட்டு விட்டு, என்றும் அழியாத இன்ப நிலையைச் சரியான வழிமூலம் அடைய வழிகாட்டுகிறார்கள். உலக இன்பம் எப்படிப்பட்டதானாலும் அது சிற்றின்பமே. அது நிலைத்து நிற்கக்கூடியதல்ல. மறை ஞானிகள் காட்டும் இன்பம் பேரின்பம். அது கிட்டினால் அழியவே அழியாது. இது ஒவ்வொருவரும் தனித்தனிப் பிரயாசையெடுத்து முயன்றால்த்தான் கிட்டும். "அவ்விதமானால் குரு எதற்கு என்று கேட்கலாம்?" சரியான கேள்விதான். குருவால் நம்மைப் பேரின்ப நிலையில்த் தூக்கிக்கொண்டுபோய் வைத்துவிட முடியாது. அவர் வைக்கவும் மாட்டார். நம் முயற்சியால்த்தான் அதை நாம் பெற

வேண்டும் என மீண்டும் ஓர் முறை சொல்லுகிறேம். ஆனாலும் குரு வேண்டியதவசியம் தான். ஓர் மலே உச்சியிலேறி அங்கிருந்து காட்சிகளே நாம் பார்க்க வேண்டுமானுல் மலேஉச்சிக்கு நாம், நாமே ஏறினுல்த்தான் முடியும். ஆனுல் ஓர் வழிகாட்டி நமக்குக் கிடைத்தால், அவர் உதவியினுல் நாம் சுலபமாயும் சீக்கிரமாயும் மலே உச்சியிலேறிவிடலாம். அவ்வித வழிகாட்டி தான் குருநாதர் என்பவர்.

எனவே மிக முக்கியமான கட்டத்திற்கு நாம் இப்போது வந்துவிட்டோம். மேலே சொல்லிய வழிகாட்டியாகிய குருவுடன் நாம் எப்படித் துடர்பு கொள்வதென்பதே. உலக வழக்கம், நாம்தான் குருவைத் தேடிப்போகவேண்டும் என்பது. மறைஞான போதனே, நமது செயல்களினுல் குரு நம்மைத் தேடி வருவார் என்பது. அவ்விதம் அவர் நம்மைத் தேடி வருவதற்கு நாம் நம்மைத் தகுதியுடையவர்களாக்கிக் கொள்ள வேண்டும். அவ்விதம் நம்மைத் தகுதி செய்துகொள்ள, முன் கூட்டித் தேவையானது, இதுகாறும் நாம் வாழ்க்கையில் அனுசரித்து வந்த முறைகளே மாற்றிச் சில புதிய முறைகளேக் கையாளவேண்டும் நம்முடன் பழகியவர்களின் சுபாவத்தை, நம் கருத்திற்கிணங்க மாற்ற முயலுவதோ, அல்லது அவர்கள் நம் கருத்திற்கிசையவில்லேயே என வருந்துவதோ, அறிவுடையோர் செயல் அல்ல. ஆனுல் விவேகிகள் தாங்கள் உலகத்தோடு ஒட்டிப் போகும்படி தங்களேத் திருத்திக் கொள்வார்கள். "உலகத்தோடொட்ட வொழுகல் பல கற்றும் கல்லார் அறிவிலாதார்" என்று திருக்குறளில் தெளிவாய்ச் சொல்லியிருப்பதைக் கவனிக்கவும். முதலாவது மறை ஞான மாணுக்கன் இந்த நெறியைக் கடைப்பிடிக்க வேண்டும். அதன் பின் அவன் தெரிந்துகொள்ள வேண்டியது, தனது வாழ்நாள் தனக்காகவும், தான் அன்பு செலுத்தும் மனேவி மக்கள் போன்றவர்களுக்கு மட்டுமே உழைப்பதற்குத்தான், என்ற எண்ணத்தை நீக்கிவிட்டு, தனது வாழ்நாள் உழைப்பு மக்கள் எல்லோருக்கும் பயன்படும் விதமாய் இருக்கவேண்டும் என்ற எண்ணத்தை மேற்கொள்ள வேண்டும். பிறவிச் சுழலில் தான்

ஓர் ஜீவநாடி என்பதை உணர வேண்டும். இவ்வித எண்ணங்கள் அவன் (மாணக்கன்) மனதில் வேரூன்றுமானல், அவன் தன்னலம் (சுயநலம்) கருதுபவனுக இதுவரையிருந்தவனை, இனித் தன்னலம் கருதாதவனுக (சுயநலம் கருதாதவனுக) மாற்றிவிடும்.

தன்னலம் கருதாமை என்னும் வார்த்தைக்கு, பல தவருன அர்த்தம் உலகில் வழங்கி வருகிறது. தன்னலம் கருதாமை என்னும் செய்கை, ஏதோ தங்களுக்கு இயற்கையாகப் பிடித்தமில்லாத செய்கையை அடுத்தவர்களின் நன்மைக்காகச் செய்வது என்று கருதுகிருர்கள். ஆனல் தன்னலம் கருதாமையென்பது அவ்விதமானதல்ல. நமக்கு ஓர் மன மாற்றத்தைத் தவிர வேருென்றுமில்லை. அதற்காக நம் வாழ்க்கையே மாற்றிக்கொள்ள வேண்டிவருமென்பதல்ல. அதற்காக நாம், எல்லாம் துறந்த சந்நியாசியாய்விட வேண்டும் என்பதுமல்ல. வாணிபம் ஒழுங்கான முறையில்ச் செய்யும் முதலாளி ஒருவன், தன் வாழ்நாள் முழுவதும் மக்களுக்காகவே உழைப்பவனைப் போல்த் தானும் இருக்கலாம். எப்படியெனில் வாணிபம் உலகத்திற்கு அவசியம்தான் என்றும், அத்துறையும் மக்கள் முன்னேறும் வழியில் ஒன்றுதான் என்றும், ஆகையால் அதை நடத்தும் தான், (முதலாளி) எவ்விதத்திலும் மக்களை ஏமாற்றக்கூடாதென்றும் கருதி, அதன்படி நடப்பானுயின், அதுவே தன்னலமற்ற செய்கையாகக் கருதப்படும். இந்த மனமாறுதல் வாழ்க்கையில் எல்லாத் துறைகளிலும் காணப்பட வேண்டும். அநேகம் வழிகளில் மாணக்கன் இதைக் கடைப்பிடித்தொழுகலாம். தன்னலம் கருதாமை என்பதைச் சுருங்கக் கூறவேண்டுமானல், தனது சக்திக்கு ஏற்றபடி பிரதிப்பிரயோசனம் கருதாமல், தான் மற்றவர்களுக்கு உழைக்க வேண்டுமென்பதுதான்.

சில மறைஞான நூல்களில் இத்தகைய மனமாற்றத்தையே ''இருதய சுத்தி'' (Purity of heart) என்று சொல்லப்பட்டிருக்கிறது. எதற்கும் துர் அர்த்தம் கற்பிக்கும் சிலர், இந்த இருதயசுத்தி என்பதைப் பெண்ணுசையொழித்தல் என்று

தவருக அர்த்தம் கொண்டு மக்களை அதன்படி நடக்கச் செய்வதால், அதனுல் அநேக குழப்பங்களும் கெடுதிகளும் விளைகின்றன. ஆனுல்; மக்களுக்கு உழைக்கவேண்டும் என்னும் எண்ணத்தை விவேகத்தோடு மேற்கொள்ளவேண்டும். அதாவது மாணுக்கன் தனது ''ஜோலி''யை (பணியை)ப்பார்க்க வேண்டுமேயல்லாது, மற்றவர்களின் விஷயங்களில் அநாவசியமாகத் தலையிடக்கூடாது. தான் எடுத்த வேலை மக்களுக்கு நல்ல பலனளிக்கும் என்று தான் நம்பியிருந்தபோதிலும், அது தான் எதிர்பார்த்த பலன் கொடுக்கவில்லையானுல், பாடுபட்டும் பலனில்லையேயென அவன் மனம் நோகக்கூடாது. பலனுக்கும் தனக்கும் சம்பந்தம் வைத்துக்கொள்ளாமல், ''தாமரையிலைத் தண்ணீர்மாதிரி,'' தனித்து நிற்கவேண்டும். ''என் கடன் பணிசெய்து கிடப்பதே'' என்றதை மேற்கோளாகக் கொண்டொழுகவேண்டும். நம்மை நாம் திருத்திக்கொள்ளலாமேயொழிய, மற்றவர்களைத் திருத்துவது நமது வேலையல்லவென்றும், அது நமது சக்திக்குட்பட்டதல்லவென்றும், கருதவேண்டும். நம்மை நாமே திருத்தி நற்பணியில் இறங்கிவிட்டால், மற்றவர்களும் நம்மைப்பார்த்துப் பின்பற்ற முயலுவார்கள்.

இத்தகைய மனமாற்றத்தினுல் (இருதயசுத்தியினுல்) மாணுக்கனது சூக்ஷம சரீரத்தில் (Etheric body) சில குறிப்பிடத்தகுந்த விளைவுகள் (Effects) உண்டாய், அவை முன்னிருந்ததைவிட அதிக ஒளியுடையதாய் (தேஜஜ்)க் காணப்படும். இருட்டில் வெளிச்சம் காணப்படுவதுபோல்த் தோன்றும். இந்த தேஜஜ் குருநாதர்களின் கவனத்தை இழுக்கும். இந்த ஒளிகள் மறைஞானம் பயிலும் மாணுக்கனிடமிருந்துதான் வெளிப்படும் என்பதில்லை. மறைஞானத்திற்குச் சிறிதும் சம்பந்தமில்லாதவர்களாக யிருந்தாலும், அவர்கள் தன்னலம் கருதாச் செய்கையுடையவர்களாக யிருந்தால், அவர்களிடமிருந்தும் வெளிப்படும். பரோபகாரிகள், கலைவாணர்கள், விஞ்ஞானிகள், வைத்தியர்கள். மத குருக்கள், அரசியல் வாதிகள், முதலியவர்கள், தன்னலம் கருதாமை கொண்டொழுகினுல், அவர்களிடமும் இந்தத் தேஜஜ் காணப்படலாம். மேற்

சொன்ன எந்தத் துறையிலாவது, மாணுக்கன் தனது தேஜஜ் மூலம் குருநாதர்களின் கவனத்தை இழுப்பாணுயின், குருநாதர் களுக்கும் அவனுக்கும் துடர்பு ஏற்பட்டுவிடும். அத்துடர்பு மூலம், அவனவன் மேற்கொண்டுள்ள பாதையில், வழிகாட்டி யாகவும். துணையாகவுமிருந்து, அவனுக்குக் குருநாதர்கள் உதவி செய்வார்கள். இதில் முக்கியம் என்னவென்ருல், குரு நாதரின் உதவி எவ்வளவு கிடைக்குமென்பதே. அந்த அளவு, மாணுக்கனையும் அவன் கர்மத்தையும் பொறுத்தது. மாணுக்கன் கருத்துச் செருக்குள்ளவனுனுலும் (Too self opiniated) (அதாவது தான்கொண்ட எண்ணம்தான்சரியெனக் கருதுவது) விடாப்பிடி கொண்டவனுனுலும் (Fanatical) அவனுடைய எண்ணஉடல் (Astral.body) மன உடல் (Mental body) ஒன்றிற்கொன்று சம்பந்தமில்லாமல் குருநாதர்கள் கருத்துக் களை வாங்கும் சக்தியற்றதாக யிருந்தாலும், இக்காரணங் களால், அவன் தன்னையறியாமலே குருநாதர்களுக்கும் தனக்கும் ஓர் தடை ஏற்படுத்திக் கொள்வான். அத்தடையைச் சில அபூர்வ சந்தர்ப்பங்கள் தவிர்த்து மற்றவேளைகளில், குருநாதர்களாலும் ஊடுருவிச் செல்லமுடியாது. இந்தக் காரணங்களுக்காகத்தான் மணுக்கன் தன்னலம் கருதாச் செய்கையுடன் நுண்உடல்களேயும் பக்குவப்படுத்திக்கொள்ள வேண்டும் என்று சொல்லியிருக்கிறது. அவ்விதம் செய்து கொண்டால் உண்மைக்கு மாருனதெதுவும் அவன் கருத்தில்ப் புகாது, மட்டிற்குமிஞ்சி எதுவும் அவனை அணுகாது. அவன் குருநாதரின் சரியான பணியாளனுகத் திகழ்வான். மதக் கொள்கையில் விடாப்பிடியான பற்றுதல்கொண்ட தன்மை, முற்காலத்திற்குப் பொருத்தமானதாகயிருந்திருக்கலாம். எல்லா வகைகளிலும் முக்கிய மாறுதல்கள் எற்பட்டு வருமிக்காலத்தில் அது பொருத்தமற்ற செய்கை. ஓர் தலைமுறையில்க் கையாண்ட பழக்கம் மற்றத் தலைமுறைக்குப் பொருந்தாது. முன்காலத்தில் உண்மையெனக் கண்டவைகள் எக்காலத்தும் உண்மைதான் என்று வெறித்தனத்தோடு குரங்குப்பிடியாய்ச் சாதித்து வருபவர்கள் தோல்விதான் அடைவார்கள். தோல்வியடையா விட்டாலும் முன்னேற்றத்தில்த் தடைப்பட்டுப் போவார்க ளென்பது உறுதி.

சூக்ஷமசரீர தேஜஜ் உடன் குருநாதர் கவனமும் பட்டு விட்டால் மாணுக்கன் தான் இதுகாறும் அடைந்த இன்பங்களை விடச் சிறிது மேலான இன்பநிலை அடைவான். (a happier state of consciousness) அதனுல் அவன் தனக்கு ஏற்பட்டிருந்த இடர்களினின்றும் விடுபட்டு முன்னேறுவான்.

எல்லா மாணவர்களுக்கும் இயற்கையில் ஏற்படக்கூடிய இடர்கள் இரண்டு உண்டு. அவை அவனது சொந்தக் கர்மமும், அவன் இனக் கர்மமும். (Racial Karma) உலகில் ஒவ்வொருவரும் எந்த இனத்தில்ப் பிறக்கிருர்களோ, அந்தந்த இனத்திக்கு ஓர் கூட்டுக் கர்மம உண்டென்பதை மறந்துவிடக் கூடாது. முற்பிறப்பின் பயனுல் அவனவன் தகுதிக்குத் தகுந்த இனத்தில் பிறக்கும்படி நேரிடும். தனிப்பட்ட மனிதன், எவ்வளவு நற்கருமம் செய்திருந்தபோதிலும், தான், பிறந்த தேச இனக்கர்மம் அவனைப் பாதிக்காமல் விடாது. எனவே அவன், தன்னையறியாமலே, இனக்கூட்டுக் கர்மத்தால்ப் பிடிக்கப்படுகிருன். அக்கர்மங்கள் (மேலே சொல்லிய இரண்டு வகைகளும்) அவனது சாயா சரீரத்தில் சில இடங்களை (ஸ்தானங்களை)ப் பாதிக்கும். அவன் அதை அறியவும் முடியாது கடக்கவும் முடியாது. மறை ஞானம் பயின்று வரும் காலத்தில் இக்கர்மங்கள் நல்லவைகளையும் தீயவைகளையும் அவனுக்குச் கொடுக்கும். அவன் இயற்கையிலேயே முன்னேற்றமடைந்த ஆன்மாவாக விளங்கியபோதிலும் இக்கர்மங்கள் ஊடே புகுந்து தடை செய்யும். அதனுல், அவன் துடங்கிய மறை ஞானக் கல்வியைக்கூடக் கைவிடும்படி நேரிடும். இக்கர்மங்களுக்கு அவ்வளவு சக்தியுண்டு. இக்காலத்தில்த்தான், குருநாதர்கள் தங்கள் சீடர்களின் மூலமாய் அவனைக் கவனித்து அவனுக்கு உதவியும் செய்வார்கள். அவ்விதம் அவர்கள் செய்யும் உதவி மாணுக்கனுக்கே தெரியாது.

மாணுக்கன் தனது தேஜஜ்சால் குருநாதரின் கவனத்தைத் தன்பக்கம் இழுத்தபோதிலும், அவனுக்கு குருநாதரை நேரில்ப் பார்க்கும் (பிரத்தியக்ஷ தெரிசனம்) சக்தி உண்டாகாது. குருநாதரை ஸ்தூஉடலில்க் காணவேண்டு மென்ருல் மாணுக்கன்

இன்னும் உயர் நிலையடைய வேண்டும். உலகத்தில் குருநாதர் என்பவர்களின் எண்ணிக்கை மிகவும் குறை. உலகத்தில் பல வேறு பாகங்களில் வசிக்கும் மறை ஞான மாணுக்கர்கள் எல்லோருடனும் குருநாதர்கள் ஸ்தூல உடலில் தோன்றித் தெரிசனம் கொடுப்பதென்பது முடியாத காரியம். தவிர்க்க முடியாதபடி காரியங்கள் நேரிட்டாலொழிய, அவர்கள் நேரில்த் தோன்றும் வழக்கமில்லை. மேலும் அவர்கள் நேரில்த்தோன்றும் போது அவர்களின் தேஜஸைத் (Magnetic Force) தாக்கும் சக்தி சாதாரண மாணவனுக்கு உண்டாகாது. அவ்வித சக்தி யற்ற காலத்தில் மாணுக்கன் பார்க்க விரும்பினுல் அதனுல் நன்மை உண்டாகாது.

மறை ஞான மாணுக்கர்கள் குருநாதராலோ அல்லது அவர் சீடராலோ கவனிக்கப்படவேண்டியது அவசியம். மக்களுக்கு உதவிபுரிய வேண்டுமென்ற நோக்கத்தில் மிகுந்த மகிழ்ச்சி (உற்சாகம்) கொண்டு, அளவிற்கு மிஞ்சிய ஆர்வத் தால் நடுநிலைமை தவறி நிற்கும் மாணுக்கர்களையும், மறை ஞானம் விரைவில் அடையவேண்டும் என்ற ஆசையால் செயல் தெரியாமல்த் திரியும் மாணவனையும், சரிநிலை (நிதானமான நிலை — well Balanced) அடையச் செய்வதற்கு அவர்கள் உதவி (குருநாதர் அல்லது சீடர்) அவசியம்தான். மற்றும் சில மாணுக்கர்கள் தங்கள் மதக் கொள்கைக்கும், மறை ஞானக் கொள்கைக்கும் வித்தியாசமிருப்பது கண்டு எது சரியெனத் தெரியாமல்ச் சந்தேகமடைந்து, தவிக்கும் நேரத்திலும் அவர்கள் உதவி அவசியம் வேண்டும். இங்குதான் மறைஞான மாணவர்கள் தெளிவடைய வேண்டும். தாங்கள் இதுகாறும் அனுசரித்துவந்த மதக்கொள்கைதான் சரியென்று கருதினுலும், அல்லது, அதில் ஒரு கால், இதில் ஒரு கால், ஊன்றி நின்ருலும் முன்னேறமுடியாதாகையால், இச்சமயம் குருநாதர் தனது சீடர்களைக் கொண்டு மாணவனுக்கு மறைஞானக்கொள்கையை வலியுறுத்தி மேலே செல்லும்படி செய்வார்கள்.

மறைஞானத்தில் முன்னேற வேண்டுமென்ருல், ஓர்வகை மனஉறுதிவேண்டும். 'அது இல்லாமல் இனக்கட்டுப்பாட்டிலும்

மதக்கட்டுப்பாட்டிலும் தயங்கி நிற்பவர்கள் மறைஞான வழியில் தோல்விதான் அடைவார்கள். இந்த இரு கட்டுப்பாடுகளும் மறைஞானத்திற்கு எதிர்நிற்குமாயின் அவைகளை அறவே யொழிக்கவேண்டும். இந்தக்கட்டுப்பாடுகளை நீக்கத் துணிவில்லாதவர்கள் சிலர் இவ்வழியில்த் தோல்வியடைந்திருப்பதை நாம் பல புத்தகங்கள் மூலம் வாசித்திருக்கிறோம், இவைகளெல்லாம் துணிந்து விட்டுவிட வேண்டியதற்குக் காரணம் என்னவென்றால், மறைஞானம் தனிப்பட்ட ஓர் இனத்திற்கு மட்டுமல்லாமல், உலகத்திலுள்ள அனைவருடைய நன்மைக்கும் அடிப்படையாக நிற்பதால், மாணுக்கன் தனது சொந்த இன உணர்ச்சிகளினின்றும் மேலெழுந்து, உலக உணர்ச்சி (International consiciousness) அதாவது பரந்த மனப்பான்மை அவசியம் கொள்ளவேண்டும். அவ்வித உணர்ச்சி பெற்றால்த் தான், எல்லோரும் கடோசியில் அடையவேண்டிய லக்ஷியத்தை அவன் அடையக்கூடும்.

இப்பிறவியில் மறைஞானம் கற்க விருப்பம்கொள்வோருக்கு முற்பிறவியில்ச் சில மறைஞான அனுபவம் ஏற்பட்டிருக்கும். அது உறுதி.* இல்லாவிடில் அவர்களுக்கு இப்பிறவியில் இக்கலையின் எண்ணம் எழாது. பூர்வஜென்ம வாசனை சிறிதாவது இருக்கவேண்டும். அதனால்த்தான் குருநாதர்துணை அவசியம் வேண்டும் என்கிறோம். ஏனெனில் குருநாதர் மறைஞான மாணுக்கனின் சூக்ஷம சரீரத்தைத் தெரிந்து, இவனுக்கு இன்ன முறைதான் ஏற்றதென்பது தெரிந்து புகட்டுவார். அதைவிட்டு குருமார்கள் என்று சொல்லப்பட்டவர்களிடம் போனால், அவர்களுக்குச் சூக்ஷம சரீரப் பார்வையில்லாததினால், அவர்கள் எல்லோருக்கும் ஒரேவிதமாகக் கற்பிப்பார்கள். இக்காலம் யோகாப்பியாசம் என்பது அப்படித்தான் கற்பிக்கப்பட்டு வருகிறது. தவறுதலாகச் செய்கிற யோகாப்பியாசத்தால், சில இன்பநிலையேற்படலாம், அதனால் உலகஇன்பங்கள் பிரயோசன மற்றதுபோல்க் காணப்படலாம். ஆனால், அதை உண்மையாய்

---

* "நூதன விவேகிக்கு நுழையாதுள்ளம்"
— கைவல்யம்

அடையவேண்டிய இன்பம் என்றே கருதி, அவ்வித யோகாப் பியாசம் செய்கிற மாணவர்கள் தங்கள் லக்ஷியத்தை யிழக்கும்படி நேர்ந்துவிடும்.

மாணுக்கன் முற்பிறவியில் உழைத்ததின் பயனுக, ஆன்ம முதிர்ச்சி யடைந்திருந்தவனுக யிருந்தால், இப்பிறவியில் அவனுக்கு, தன்னையறியாமலே குருநாதரின் துடர்பு ஏற்பட்டு விடும் அதனுல், குருநாதர் தனது சீடர்களில் ஒருவனைக் கொண்டு மாணுக்கனுக்கு நல்வழி காட்டும்படி செய்வார், நாம் மேலே சொன்னவிதமாய் அவன் தவருன வழியைக் கடைக்கொண்ட நேரம், குருநாதரின் சீடர்கள், அவனுக்கு அவனது தவறைக் காட்டித் திருந்தும்படி செய்வார்கள். குரு நாதர்கள் மாணுக்கனை, சீடர்கள்மூலம்தான் திருத்தவேண்டும் என்பததில்லை. அவர்களுக்கு வேறு வழிகளுமுண்டு, அவை யென்னவெனில், தவருன வழியிற்செல்லும் மாணவனுக்கு ஓர் கஷ்டமான பிணியை உண்டாக்கி, அவன் தவறுதலாய்ச் செய் யும் யோகாப்பியாசங்களைச் செய்யவொட்டாமல்த் தடுத்துவிடு வார்கள். அவ்விதம் அவன் பிணிவாய்ப்பட்டிருக்கும் காலத்தில் குருநாதர்கள் அவன் பிறவி ஈடேறுவதற்குரிய வழியினின்றும் அவன் தவறிவிட்டானென்பதை அவனுடைய உள்ளறிவுக்கு (மெய்யறிவுக்கு-Higher self) உணர்த்துவார்கள். அதனுல், அம்மாணவன் பிணி நீங்கியதும், பழைய அப்பியாசங்களைத் துடர்ந்து செய்யாமல் நிறுத்திவிடுவான். தான் பழகிவந்த அப்பியாசங்களை நிறுத்தும்படி நேரிட்டதின் காரணம் அவ னுக்கே விளங்காது. அல்லது, தான் செய்துவந்த முறை பலன் தரவில்லையென்றும், அதைத் தனக்குக் கற்பித்தவர், அந்த அப்பியாசத்தால் தனது உடல் நல்ல நிலைமையிலிருக்கும் என்று சொன்னது, இப்போது பொய்த்துப்போய் விட்டதால், இனி அதைத் துடர்ந்து செய்வதில்ப் பலனில்லையென்றும் கருதுவான்.

இவ்விதமெல்லாமிருப்பதால் மாணுக்கன் நல்லது எது கெட்டது எது என்பதைத் தெரிந்து நடக்கவேண்டியதவசியம். மறை ஞான நீதி (போதனை) உலக மக்கள் எல்லோருக்கும்

பொதுவானதாக யிருந்தபோதிலும், முதன்முதல் மறைஞானப் பயிற்சி துடங்கும்போதாவது, மாணுக்கன் அவனது தகுதிக் கிசைந்ததும், அவனது இனத்திற்கிசைந்ததுமான முறையைக் கடைப்பிடிக்க வேண்டும். இது பல இனங்களுக்கும் பலவகைப் பட்டதாகயிருக்கிறது. இனக்கர்மத்தைப் பற்றி நாம் முன்னமே கூறியபோதிலும் மீண்டும் அதை நாம் இங்கும் வலியுறுத்து கிறேம். இவ்வித கஷ்டங்கள் எல்லாம் நீங்கும் பொருட்டு குரு நாதர்கள் இன்னும் சிறிது காலத்தில் (அநேகமாய் 1975 வருட வாக்கில் என்பது மறை ஞானிகளின் கருத்து) எல்லா இனத் தாரும் இன வேறுபாட்டுக் கஷ்டமில்லாமல் அனுட்டிக்கக் கூடிய ஓர் புதிய பொது வழியை உலகிற்குத் தெரிவிப்பார்க ளென நம்பப்படுகிறது. அவ்விதம் போதிக்கப்படும் முறை, முன்னைய முறையைவிட எளிதானதாக இருக்கலாம் எனவும் நம்பப்படுகிறது. அம்முறையால், மாணுக்கர்கள் குருநாதரிடம் துடர்புகொள்ளும் வழி வேறுவிதமாகயிருக்கும். பிறர் உதவி யில்லாமல்த் தானே அவ்வுரைக் கண்டுகொள்ளக்கூடிய வழியாய் அமையும்.

இப்புதிய முறை கிடைக்கும் வரை, நாம் பயிற்சியெடுக் காமல், அதை எதிர்பார்த்து நிற்க வேண்டுமென்பதில்லை. நாம் எல்லோரும் சுலபமாயும், அனுபவசாத்தியமானதாகவும் பயிலக்கூடியதான ஓர் முறை இருக்கிறது, அதன் விபரத்தைக் கீழே தருகிறேம்.

மாணுக்கன் தன்னலமற்ற பொது நலத்தை நாட மேற் கொண்டபின், குருநாதர் அவன் மனதில்ப் பதிய வைக்கும் எண்ணங்களை வாங்கத் தகுதியுடையவனுகி விடுகிருன். அதனுல், அவன் அறிவு பெருகி முன்னேற்றமடையச் சில தன்மைகள் அவனுக்கு அமைந்துவிடுகின்றன. அது முதல் அவன் குருநாதருக்கு உபயோகமான பணியாளனுகிவிடுகிருன். தான் மட்டும் வீடுபெறுவதே முக்கியம் (மோக்ஷமடைவதே) என்னும் கருத்து அவனுக்குத் தோன்ருமல், மக்களனைவரும் உய்யவேண்டும் என்னும் பரந்த நோக்கம் உண்டாய்விடும். ஆனுல் அவனும் வீடெய்துவான். தான் கற்ற கல்வி தனக்கு

மட்டுமல்ல, தனது கல்விப் பயனுல் உலகை வளமாக்கலாம் என்ற எண்ணம் உண்டாகி தனது திறனே உலகிற்குப் பயன் படுத்துவான். தான் எடுக்கும் முயற்சிகளிலெல்லாம் மிகுந்த பலன் கிடைக்கவேண்டும் என்றும், அப்பலனினுல், தான், ஆசையும் கர்வமும் அடையாமல், அதை உலகத்திற்கே அற்பணம் செய்யவேண்டும் என்ற கருத்தும் அவனுக்கு ஏற் படும். அவன், விஞ்ஞானியாகவோ, ஓவியக்காரனுகவோ, நூலாசிரியனுகவோ. வைத்தியனுகவோ, அல்லது வேறு எந்தத் தொழிலனுபவமுடையவனுகயிருந்தாலும் சரி, அவன் கற்ற அனுபவங்கள் எல்லாம் மறைஞான முன்னேற்றத்திற்குப் பயன்படக் கூடியதுதான் என்றே கருதுவான்.

இனி, இவ்வித உ ணர்ச்சிகள் எல்லாம் பெற அவர் செய்ய வேண்டியதென்ன? அவன் மணிக்கணக்காய்த் தியானம் செய் யவோ அல்லது உடலே வருத்தவோ வேண்டியதில்லே. அவன் செய்யவெண்டியதெல்லாம், தனது மனதைச் சரியான நிலேயில் வைத்துக் கொண்டு, தினம் ஓர் ஐந்து நிமிட நேரம், நாம் இனிச் சொல்கிறபடி சிந்திக்க வேண்டியதுதான். நற்காரியங் களுக்கெல்லாம் துணேபுரிய ஓர் குருநாதர் இருக்கிருர் என்பதைத் தெரிந்திருப்பதால், அவன் தனது சக்தி நிரம்பிய ஓர் எண்ணத்தை (A Powerful thought) அந்தக் குருவை நோக்கிச் செலுத்திப் பின் தன்மனம் வேறெங்கும் ஓடாமல் அக் குருவிடமே நிற்கும்படி செய்யவேண்டும். இதுதான் முதல்ப் பழக்கம் (அப்பியாசம்). இப் பழக்கத்தைத் தினம்தோறும் குறிப்பிட்ட வேளேயில், மாதக்கணக்காய் அல்லது வருடக் கணக்காய்ச் செய்து வரவேண்டும். இவ்விதம் தியானம் செய்யும் காலத்தில்க் குறிப்பிடக்கூடிய பலன் ஒன்றும் மாணுக்கனுக்குத் தெரியாதிருந்த போதிலும், மாணுக்கன் தனக்கும் குரு நாதருக்கும் ஓர் துடர்பு ஏற்படுத்திக்கொள்கிருன் என்பதுமட்டும் நிச்சயம். இந்த அப்பியாசம் செய்கிறவள் பெண்ணுயிருந்தால், ஆண்களேவிடச் சீக்கிரத்தில் அவளுக்குப் பலன் கிட்டும். ஏனெனில் ஓர் கருத்தை வாங்கி மனதில்ப் பதியவைக்கும் தன்மை, ஆண்களேவிடப் பெண்களுக்குத்தான் அதிகம்.

எனவே இப்பழக்கம் ஆண் பெண் இருபாலரும் மேற்கொள்ளலாம். இந்நூலில் ஆண்களுக்குச் சொல்லப்பட்டவைகளெல்லாம் பெண்களுக்கும் சேர்ந்ததுதான் என்பதை இங்கு அறிவுறுத்துகின்ருேம். ஞானத்தை அடையும் வழி ஆண்களுக்கு மட்டும் ஏற்பட்ட ஏகபோக உரிமையல்ல. பெண்களுக்கும் அவ்வுரிமை உண்டு. பெண்களிலும் ஞானமடைந்து முக்தி சேர்ந்தவர்களிருக்கிருர்கள். நிற்க; மேலே சொல்லிய விதம் தியானம் செய்துவரும் காலத்தில், குருநாதர் தெரிசனம் கிடைக்காவிட்டாலும், வேறு சில அனுகூலங்கள் உண்டாவது தனக்கே தெரியும். அதாவது அவன் தியானம் செய்யாமல்ச் சும்மாயிருக்கும் நேரத்தில், சில எண்ணங்கள் அவன் மனதில் உறுத்தும். அவன் உள்உணர்வுச் சக்தி (Intution) அதிகமாகி ஏதோ வெளியிலிருந்து சில எண்ணங்கள் தன் மனதில்ப் புகுத்தப்படுவது போலத் தோன்றும். பின் நாளடைவில் அவன் தியானம் செய்யும் நேரத்திலேயும் அவ்வித உணர்ச்சி ஏற்படும். அதனல் அவனுக்கு ஓர் புதிய சக்தி உண்டானது போல்த் தோன்றும். அதாவது தனது மனதாலேயே கிரகிக்கக் கூடிய ஓர் சக்தி ஏற்பட்டு விட்டதாகத் தோன்றும், அவ்வித தோற்றமேற்பட்டால், அவன் குருநாதருக்கும் தனக்கும் இடையே ஓர் ''மானஸத் தந்தியை'' (Mental Telepathy) (Wireless) ஏற்படுத்திக் கொள்கிருன். இந்த அப்பியாசம் மேலும் மேலும் பழக, ''ரேடியோ''வில் வேண்டிய நிலையத்திற்குத் திருப்புவது போல், அவன் தனது சக்தியைக் குருநாதர் இடத்தில் வேண்டிய நேரத்தில்த் திருப்பிக் கொள்ளலாம்.

இந்த இடத்திலும் மாணுக்கனை எச்சரிக்கவேண்டியிருக்கிறது. எவ்விதம் 'ரேடியோவில்' (வானெலியில்) நாம் கேட்கவேண்டிய நிலையத்தை (Station) விட்டுத் தவறுதலாய் வேறு நிலையத்தைத் திருப்புகிருேமோ, அதேபோல், இந்த ''மானஸத் தந்தி''யிலும், குருநாதர் நிலையம் (இடம்) தெரியாமல், போலிக் குருநாதர்கள் நிலயத்தைத் திருப்பும்படி நேரிடலாம். இதில் ஓர் ஆபத்து இருக்கிறது. அதை மாணுக்கன் அறிய முடியாமலிருக்கலாம். மாணுக்கன் தனது

சுயநலம் காரணமாகவோ, அல்லது வேறு புதிய அவாவின் (Curiosity) காரணமாகவோ, தவறுதலான நிலையத்தைத் தூண்டுவானாகில், அவன் குருநாதர் துடர்பு ஏற்படுத்திக் கொள்ள முடியாது. ஏனெனில், குருநாதர் இருக்கும் மேலான நிலையத்தில் (Higher Plane) அவன் எண்ணம் சேராமல்க், கீழ் நிலையத்திலிருப்பவர்களுடன் (Lower Plane) துடர்பு ஏற்பட்டுவிடும். அந்த நிலையத்திலிருப்பவர்கள் நல்லறிவைப் புகட்ட மாட்டார்கள். தவறுதலான அறிவையே (False Knowledge) புகட்டுவதுதான் அவர்களின் தொழில். அதாவது மக்களைத் தாங்கள் பெரிய குருநாதர்கள் தான் என்று நம்பும்படி செய்வதே கீழ் நிலையத்திலிருப்பவர்களின் (Lower Plane entities) செய்கை. எனவே மாணாக்கன் படிப்படியாய் முன்னேறும் காலம், நல்லது கெட்டதைப் பற்றி அறியும் பகுத்தறிவும் சமநிலையும் அவனுக்கு இருக்க வேண்டும் அவன் தனது தோல்வியினால் மனமுடைந்து போகாமலும், வெற்றியினால்த் தலைச் செருக்கடையாமலுமிருப்பானாயின், அவனுக்கு அத்திறன் உண்டாகிவிடும். அதனால்த் தனக்குக் கிடைக்கும் உபதேசம் எந்தக் குருநாதர் மூலம் கிடைக்கிறதென்பதைத் தெளிவாய் உணர முடியும். அவ்வித உணர்ச்சி யேற்பட்டு விட்டால் குருநாதர்களில் பலர், அவனுக்குப் பலவிதமான அறிவைப் புகட்டி, தங்களின் பலவிதமான வேலைக்கு அவனைத் தகுதி உடையவனாக்கி விடுவார்கள்.

மறைஞானக் கல்வி விஷயமாக எடுக்கப்பட்ட முயற்சி எதுவும் வீண்போகாது. நல்லெண்ணத்துடன் மறைஞானம் தேடுபவர்கள் வெறும் கையோடு போகமாட்டார்கள். குருநாதர்களிடம் சேவைசெய்ய விரும்பும் மாணவர்கள் எல்லோருடைய உடலும், ஞானப்பார்வை (Clairvoyance) பெறுவதற்கோ, அல்லது அசரீரி (Clairaudience) கேட்பதற்கோ தகுந்த தகுதி யுடையதாய் வாய்க்கமுடியாது. இவை இரண்டும் கிடையா விடினும், வேறு சில மனத்திறன்கள் (Faculties) உண்டாகக் கூடும். அத்திறன்களேற்படும் போது, குருநாதர்கள், அந்த மாணாக்கனுக்கு, அவனைவிட அதிகமுன்னேற்றமடைந்த ஓர் மாணாக்கன் துடர்பையையோ, அல்லது நாம் முன்னே

சொல்லியபடி பிறவி முன்னேற்றமடைந்த ஒருவருடைய உதவியோ கிடைக்கும்படி செய்வார்கள். அவ்விதமான துடர்பு ஏதோ தற்செயலாய் ஏற்பட்டதுபோல் மாணுக்கனுக்குத் தோன்றலாம். ஆனால் மறைஞானத்தில் தற்செயலாய் நடப்பது (By chance) என்பதே கிடையாது. அதிர்ஷ்ட வசத்தால் (By luck) ஏற்பட்டதென்பதும் கிடையாது. காரணமில்லாமல் ஓர் காரியமும் உலகத்தில் நிகழாது என்பதே மறைஞானக் கொள்கை. எனவே இம்மாதிரி விஷயங்களிலும் மாணுக்கன் தனது பகுத்தறிவுத் திறனை உபயோகிக்க வேண்டும். ஏனெனில் இவ்வித துடர்பு ஏற்பட்டவுடன், மாணுக்கன் தான், உலக காரியங்களில் ஏற்றுக்கொண்டு வருகிற பொறுப்புகள் எல்லாம் பிரயோஜனமில்லாத வீண் நேரப்போக்கு என்று கருதி, உலக விவகாரங்களை விட்டுவிட்டு, மறைஞான நூல்கள் வாசிப்பதிலேயே காலத்தைக் கழிக்க வேண்டும் என எண்ணி, தான் உலகத்திற்குச் செய்யவேண்டிய கடமைகளினின்றும் விலகி நிற்க எண்ணங்கொள்வான். இது மிகவும் தவருன செயல். உலக சம்பந்தத்தை யிறுத்துக் கொண்டால், எதிர்பாராத இடத்திலிருந்து, எதிர்பாராத வண்ணம் தனக்குக் கிடைக்க வேண்டிய சில துடர்புகளும் அவனுக்கு விட்டுப்போகும். சாதாரணமாய் நமக்கு, ஒருவரையொருவர் சந்திப்பது, ஏதோ தற்செயலாய் நிகழக்கூடியதுதானே எனத்தோன்றுகிறது. குருநாதர்களின் தோற்றத்திற்கு, அதிலும் முக்கியத்துவம் இருக்கக்கூடும். பலர் சந்திப்பால் ஓர் கூடடுறவு ஏற்பட்டு மிகுந்த நன்மை விளையலாம். உலகத்தில்ச் சிலர் பின்வருமாறு சொல்வதைக் கேட்டிருக்கிறேம். ''இன்னுருக்கும் எனக்கும் கருத்து வேற்றுமையிருக்கிறது. ஆகையினுல் அவருடன் பழக எனக்கு விருப்பமில்லை'' என்று சொல்கிருர்கள். இனம் தெரியாத பலருடன் பழகச் செய்வது மறை ஞானத்தின் ஓர் தந்திரச் செயல். மறை ஞானத்தில்ச் சிறிதேனும் அக்கரை கொள்ளா ஆண்களிலும் பெண்களிலும் பலர், மறைஞானத்தில் அக்கரைகொண்ட நம்மைவிடப் பிறவி முன்னேற்றத்தில் மேல்ப் படியில் நிற்கலாம் என்பதை மாணுக்கன் அறிந்துகொள்ள வேண்டும். இந்த அறிவை அவன் மறந்து, தான் ஒருவன்

தான் நேர்மையாக நடப்பவன் என்றும், தான்தான் ஞானத்தை யடைந்தவன் என்றும் எண்ணினுல் அந்த இரு தீய குணங் களும் அவனைப் பலமாய்ப் பிடித்துக்கொள்ளும். இக்குணங்கள் ஒருவனிடமிருந்தால், அதனை யொழித்தாலொழிய அவன் ஓர் அங்குலம்கூட முன்னேற முடியாது. "செருக்குற்றுத் தலை கனத்தவன் மோக்ஷமடைய முடியாது" என்பது பழமொழி.

குருநாதரை அடையவேண்டியதற்குரிய தகுதிகளையும், சில வழிகளையும் சொன்னோம். மேல் இன்னும் சில விளக்க வேண்டியிருக்கிறது. வீடு (மோக்ஷம்) பெற விரும்பும் மாணுக்கன் சில சோதனைக்குள்ளாக நேரிடும். தனது ஒழுக்கத்தை எவ்வளவிற்கெவ்வளவு சீராய் அமைத்துக் கொள் கிருனே, அவ்வளவிற்கவ்வளவு இந்த சோதனைகளைக் கடப்பது எளிது. அவன் குருநாதரிடம் நேரில் சில தீக்ஷைகள் பெற வேண்டிவரும். அவன் படிப்படியாய் மேலேறிவரும்போது இத்தீக்ஷைகள் அவனுக்கு அளிக்கப்படும். அவைகளினுல் அவனுக்கு ஞானப்பார்வையும், (Clairvoyance) குருநாதர்கள் பணியிலீடுபடுவதிற்குப் போதிய திறனும் உண்டாகும். அவன் குருநாதர் ஸ்தானத்தை அடையவேண்டுமானுல், மொத்தத்தில் ஐந்து தீக்ஷைகள் பெறவேண்டும். அவ்விதம் அவன் ஐந்து தீக்ஷைகளை பெற்றதும், அவன் தனது கர்மக்கடன்களினின்றும் விடுபட்டவனுகிருன். அவனுக்கு ஞானப்பார்வை (ஞானக்கண்) முற்றிலுமுண்டாய்விடும். அப்பார்வையால் அவனுக்கு மாயை நீங்கிவிடும். அவன் முத்திநிலை எய்துவான். எனவே எடுத்த லக்ஷியம் கைகூடி பிறவியற்றுப் போகும். அவன் இனி எக் காரணம் கொண்டும் பிறவிச் சுழலில்ச் சிக்கவேண்டியதேயில்லை. அவன் அறிவு பேரறிவாகி என்றும் நிலையான அழியா இன்பத்திலிருப்பான். (ஆத்மானந்தம்) அவன் எங்கிருந்தாலும் சரி, அவனடைந்த ஆத்மானந்தம் அவனைவிட்டகலாது. இது வரை அவன் கூட்டிலடைபட்டிருந்தான், இப்போது அதை உதறிவிட்டு, அன்பு, அறிவு, ஆனந்தத்துடன் கலந்துவிட் டான். இவ்விதம் அவன் பேரின்ப நிலையுடன் கலந்தபோதிலும், அவனது தனிப்பட்ட உணர்ச்சியும் சிறிதேனும் குன்ருது. நாம் முன்னமே சொல்லிய புனித அரசாங்கத்தில்ப் பொறுப்புவாய்ந்த

பதவி ஏற்றுக்கொள்ள அவனுக்குத் தகுதி ஏற்பட்டுவிடுகிறது. அவ்விதப் பொறுப்பை விரும்புவதும், விரும்பாதிருப்பதும், அவனைப் பொறுத்தது. அவன் செயலுக்கு முழு சுதந்திரம் உண்டு. அவன் எண்ணம் எப்படியிருந்தபோதிலும், செயலற்று மட்டுமிருக்கமாட்டான். நம்மால் யூகித்தறிந்துகொள்ள முடியாதபடி, உயர்ந்த இன்பகரமான முத்திதரும் தொழிலிலீடு பட்டே நிற்பான்.

குருநாதரை அடைவதற்குறிய தகுதிகளையும், வழிகளையும், சுருக்கமாக இதில் கூறியிருக்கிறோம். இது நமது அனுபவமான முறை. இந்த முறையினால்ச் சில பலனும் கண்டிருக்கிறோம். ஆனால், அவரை அடையும்வழி விபரமாகவும், சிறிதேனும் தவறேற்படாதபடி கடைப்பிடித்தொழுகக் கூடியதுமானவை, மறைஞான நூல்களில்த் தெளிவாய்க் கூறப்பட்டிருக்கின்றன. அதை நாம் முற்றிலும் படித்திருக்கிறோம். ஆனால், அதில் நமக்கு அனுபவமில்லாததாலும், அனுபவமுடையவர்களிடம் கற்றறியத் தருணம் வாய்க்கவில்லையாதலாலும், அதைப்பற்றித் தெரிவிக்கமுடியாது நிற்கிறோம். அதில்ச் சிறிதாவது அனுபவ மேற்பட்டபின், அதை (அவ்வழிகளை) ''மறைஞானபோதம்'' என்ற பெயரால், ஓர் தனி நூலாக வெளியிடக் கருதியிருக் கிறோம். அனுபவமில்லாமல் வழிகாட்டினால், ''குருடும் குருடும் குருட்டாட்டமாடிக் குருடும் குருடும் குழிவிழுமாறே'' என்ற திருமூலர் வாக்கிற்காளாய் விடுவோமாதலால், குருநாதர் அருள் கிடைக்கும்வரை அம்முயற்சியிலீடுபடாமலிருக்க வேண்டியதாகிறது.

---

## 12. முடிவுரை

மறைஞானத்தைப் பற்றி விபரமாகவும், அதை அடையும் வழியைப்பற்றிச் சுருக்கமாகவும் இந்நூலில்ச் சொல்லியிருக்கிறேம். அதன் லக்ஷியம் (Goal) மகோன்னதமானபோதிலும், அதை எட்டியவர்கள், (அடைந்தவர்கள்) எல்லோரும் படிப்படியாகத்தான் அதையடைந்தார்கள் என்பதை உங்களுக்கு நினைவூட்டுகிறேம். தற்காலம் அதன் சிகரத்திலிருப்பவர்கள், ஓர் காலத்தில் நம்மைப்போல் உலகச் சேற்றில்ச் சிக்குண்டவர்கள்தான். எனவே அவர்கள் அடைந்த இன்பத்தை நாமும் அடையலாம்.

மனிதன் மனம் வைத்தால் அடையமுடியாத லக்ஷியம் (குறிக்கோள்) எதுவுமில்லை. ஏனெனில் நமக்குள்ளே கடவுளின் சக்தியடங்கி நிற்பதால், அதைக்கொண்டு எதுவும் சாதிக்க முடியும். நமக்கு ஏற்படும் மனச்சோர்வு, அறியாமை, வலுவின்மை முதலியன, நமக்குள்ள சூக்ஷம உடல்களை அடக்கி வேலை செய்ய முடியாமலிருப்பதால்தான்.

ஆனல் உலகமென்ற பெரிய பள்ளிக்கூடத்தில், நாம் எடுக்கும் பிறவி ஒவ்வொன்றினும், படிப்படியாக நம் மனேதிடத்தால், ஸ்தூல உடலையும் சூக்ஷம உடலையும் வெல்லும்படியான கல்வி கற்றுவருகிறேம். நாம் எல்லோரும் ஓர் காலத்தில் காட்டுமிராண்டிகளான பிறவியில் இருந்தவர்கள்தான். இனி வருங்காலத்தில் ஓர்நாள், நம்மை நாமே உணர்ந்து மேலான நிலையை யடையத்தான் போகிறேம்.

நாம் வாலிபமாயிருந்தாலும் சரி, அல்லது முதியவர்களாகயிருந்தாலும்சரி, அறியாதவர்களானலும், அறிவுடையவர்களானலும், மாசுஉடையோரானலும் மாசற்றவருனலும், நம்முள் கடவுள்தன்மை மறைந்து நிற்பதால், அத்தைரியம் கொண்டு, மேலேறுவதற்கு முயலவேண்டும்.

நாம் தற்போது கீழ்நிலையில் விழுந்துவிட்டது போல்த் தோன்றினல், நாம் மேலேற முடியாத கீழ்நிலையொன்றுமில்லை

